# பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கியத்திறன்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**க.சுப்பிரமணியன்**

(பதிவு எண்: 1489)

நெறியாளர்

முனைவர் **இரா.குமார்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறுமதிப்பீட்டில் ‘ஏ’ தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**செப்டம்பர் - 2012**

**முனைவர் இரா.குமார்,** எம்.ஏ.,எம்ஃபில்.,பி.டி.,பிஎச்.டி.,
*உதவிப் பேராசிரியர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா அரசு கலைக் கல்லூரி,*
*காரைக்குடி–630 003.*

*நாள்:*

# நெறியாளர் சான்றிதழ்

‘**பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கியத்திறன்**’ என்னும் தலைப்பில் **திரு.க.சுப்பிரமணியன்** அவர்கள் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்த இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(**முனைவர் **இரா.குமார்)**

**நெறியாளர்**

**க.சுப்பிரமணியன், எம்.ஏ.,எம்.ஃபில்.,**
*பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்,*
*பதிவு எண்:1489,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி – 630 003.*

*நாள் :*

# ஆய்வாளர் உறுதிமொழி

**‘பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கியத்திறன்’** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக எழுதப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

***(க.சுப்பிரமணியன்)***

**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் இரா.குமார்**
*உதவிப் பேராசிரியர்*
*தமிழ்த்துறை*
*அழகப்பா பல்கலைக்கழகம்*
*காரைக்குடி–3*

# பொருளடக்கம்

# நன்றியுரை

***'பதினெண்கீழ்கணக்கு அக இலக்கியத்திறன்'*** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கும் எனது உளம் கனிந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

ஆய்வுத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை எனக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து என் ஆய்விற்கு வழிகாட்டியாக அமைந்திருந்த ஆய்வு நெறியாளர் முனைவர் **இரா.குமார்** அவர்களுக்கு எனது இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினை மேற்கொள்வதற்கு அடித்தளமிட்ட தமிழ் இணையப் பல்கலைக்கழகப் பேரா.முனைவர் **க.காந்தி** அவர்களுக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலம் பேரா.முனைவர் **அ.சீனிவாசன்** அவர்களுக்கும், ஆய்வினை விரைந்து முடிக்கத் தூண்டிய அழகப்பா அரசு கலைக் கல்லூரி, **தமிழ்த்துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கும்**, மேலூர் அரசு கலைக் கல்லூரி, தமிழ்த்துறைப் பேரா.முனைவர் **மா.கருணாகரன்** அவர்களுக்கும், பேரா.முனைவர் **பா.சுபாஷ்போஸ்,** சேவுகன் அண்ணாமலை கல்லூரி, கணிதவியல் பேரா. **இரா.கிருஷ்ணன்,** பேரா. **பா.மலைக்கொழுந்தன்** ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்வி வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் உதவி, என்னை இந்நிலைக்கு உயர்த்திய எனது ஆருயிர்ப் பெற்றோர் தெய்வத்திரு **சி.கருப்பன்** அவர்களுக்கும், கண்ணின் மணி போல் காத்து வரும் என் தாய் **க.கருப்பாயி** அவர்களுக்கும், அன்பு மகள் **சு.மேக்னா வர்ஷ்னி** ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வில் என்னை ஊக்கப்படுத்திய நூலகர் **திரு.வீரராகவன்** அவர்களுக்கும், முனைவர் **மூ.பாலகிருஷ்ணன், மா.பூமிபாலமுருகன்,** முனைவர் **மா.பரமசிவன், மு.இராஜேந்திரன், இ.முனியசாமி, சொ.சண்முகம், மு.பொன்மணிஜீவா** ஆகியோர்க்கும் நன்றிகள் பற்பல.

இவ்வாய்வேட்டைச் சிறந்தமுறையில் தட்டச்சுச் செய்த **அருண் கம்ப்யூட்டர் சாந்தி பாண்டியன்** அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவிப்பதில் மனமகிழ்கிறேன்.

**(க.சுப்பிரமணியன்)**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| இறை.களவு | – | இறையனார் களவியல் உரை |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| ஐந்.ஐம். | – | ஐந்திணை ஐம்பது |
| ஐந்.எழு. | – | ஐந்திணை எழுபது |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| கட்டு. | – | கட்டுரை |
| கலித். | – | கலித்தொகை |
| கலைக்.கள. | – | கலைக்களஞ்சியம் |
| கார்.நாற். | – | கார்நாற்பது |
| குறிஞ்.பா. | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| கைந். | – | கைந்நிலை |
| தி.ஐம். | – | திணைமொழி ஐம்பது |
| தி.மா.நூற். | – | திணைமாலை நூற்றைம்பது |
| திரு.படை. | – | திருமுருகாற்றுப்படை |
| தொல் | – | தொல்காப்பியம் |
| மு.ப.ஆ. | – | முதன்மைப் பதிப்பாசிரியர் |
| முல்.பா. | – | முல்லைப்பாட்டு |

| | | |
|---|---|---|
| நம்பி.அகப். | – | நம்பியகப்பொருள் |
| நற். | – | நற்றிணை |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பா. | – | பாடல் |
| பக். | – | பக்கங்கள் |

# முன்னுரை

தமிழில் தோன்றிய இலக்கியங்கள் மொழிச் செம்மையுடையன; கருத்தாக்கம் நிறைந்தன; எளிமையும், இனிமையும் கலந்திருப்பன. இச்சிறப்புடைய இலக்கியங்களில் பதினெண்மேற்கணக்கு நூல்களும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் மேன்மைப்பெற்று விளங்குகின்றன. இவற்றுள் ஒன்றாக விளங்கும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் களப்பிரர் காலத்தில் தோற்றம் பெற்றன. இவ்விலக்கியங்களை அறநூல்கள் (11), அகநூல்கள் (6), புறநூல் (1) எனப்பொருள் அடிப்படையில் பாகுபடுத்த இடமுண்டு. இதனுள் உள்ளடங்கியுள்ள கருத்தாக்கங்களைக் கூற்று அடிப்படையில் வெளிக்கொணரும் வகையில் இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகின்றது.

### ஆய்வுத் தலைப்பு

தமிழிலக்கிய வரலாற்றில் காலச் சூழலுக்கேற்ப பல்வேறு படைப்புக்கள் உருவாகியிருக்கின்றன. அவற்றுள், பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்கள் குறிக்கத்தக்கன. இவ்வக நூல்களில் வெளிப்படும் கருத்துக்கள், தொல்காப்பியம், சங்க இலக்கியம் கூறும் கருத்தாக்கங்களைத் தழுவி வந்துள்ளனவா? இல்லை அவற்றிலிருந்து மாறுபடுகின்றனவா? என்பதைக் கூற்றாளருக்குத்தக ஆராய்ந்து விளக்கும் வகையில் **“பதினெண்கீழக்கணக்கு அக இலக்கியத்திறன்”** என்ற தலைப்பு இங்கு ஆய்வுத் தலைப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

### ஆய்வின் நோக்கம்

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களின் தொகை ஆறு. அவை **கார்நாற்பது** (மதுரைக்கண்ணங்கூத்தனார்), **ஐந்திணை ஐம்பது** (மாறன் பொறையனார்), **திணைமொழி ஐம்பது** (கண்ணன் சேந்தனார்), **ஐந்திணை எழுபது** (மூவாதியார்), **திணைமாலை நூற்றைம்பது**

(கணிமேதாவியார்), **கைந்நிலை** (புல்லங்காடனார்) என்பனவாகும். இவற்றில் காணக்கிடக்கும் அகக்கருத்துக்கள், இவற்றிற்கு முன்னெழுந்த தொல்காப்பியம், சங்க இலக்கியங்களைத் தழுவியும், வேறுபட்டும் அமைந்திருக்கக்கூடும். அவற்றைக் கூற்றாளருக்குத்தக ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வின் மூலங்கள்

பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கியங்களாகக் **கார்நாற்பது** (40 பாடல்கள்), **ஐந்திணை ஐம்பது** (50 பாடல்கள்), **ஐந்திணை எழுபது** (66 பாடல்கள்), **திணைமொழி ஐம்பது** (50 பாடல்கள்), **திணைமாலை நூற்றைம்பது** (153 பாடல்கள்), **கைந்நிலை** (60 பாடல்கள்) ஆகியன விளங்குகின்றன. அவையே இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களா கின்றன. தொல்காப்பியம், சங்க இலக்கிய நூல்கள், திறனாய்வு நூல்கள், கலைக்களஞ்சியம், கட்டுரைகள் போன்றன இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகின்றன.

### ஆய்வு எல்லை

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்கள் ஆறு. அவற்றுள் இடம்பெற்றுள்ள அகப்பாடல்களின் தொகை 419. இவை மட்டும் இவ்வாய்விற்கு ஆய்வு எல்லையாக அமைகின்றன.

### ஆய்வு முன்னோடிகள்

சங்க மருவிய காலத்தில் எழுந்த அகநூல்களின் அகக்கருத்துக்களையும், சமூகச் செய்திகளையும் ஒப்பீட்டு நிலையில் ஆராய்ந்து வெளிப்படுத்துவதற்குப் பல ஆய்வுகள் துணை நின்றன. அவற்றுள் கோ.வேணிதேவியின் "கீழ்க்கணக்கு நூல்களில் அரசுக் கோட்பாடு" என்ற ஆய்வும், ந.விஜயசுந்தரியின் "பதினெண் கீழ்க்கணக்குப் பாடல்கள் உணர்த்தும் வாழ்வியல்" என்ற ஆய்வும், சரளா ராசகோபாலனின் "சங்க இலக்கியத்தில் தோழி" என்ற ஆய்வும்,

ஈ.கோ.பாஸ்கரதாஸின் "அகப்பொருள் பாடல்களில் தோழி" என்னும் ஆய்வும், த.வசந்தாளின் "தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் – ஒரு வரலாற்றுப்பார்வை" என்ற ஆய்வும், சு.இராசாராமின் "அகப்பாடல்களில் செவிலி" என்ற ஆய்வும் குறிக்கத்தக்கதனவாக உள. இவையெல்லாம் இவ்வாய்வு நிகழ்வதற்கு முன்னோடிகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

ஆய்வின் நிறைவிற்கும், சிறப்பிற்கும் முதற்காரணமாய் அமைவன அதை மேற்கொள்ளப் பயன்படுத்தும் ஆய்வு அணுகுமுறையாகும் (Research Methodology). இவ்வாய்வில்,

1. விளக்கவியல் அணுகுமுறை (Descriptive Approach)
2. பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical Approach)
3. உளவியல் அணுகுமுறை (Psycho / Analytical Approach)
4. ஒப்பீட்டு அணுகுமுறை (Comparative Approach)
5. சமூகவியல் அணுகுமுறை (Sociological Approach)

ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. தலைவன் கூற்றுப் பாடற்திறன்
2. தலைவி கூற்றுப் பாடற்திறன்
3. தோழி கூற்றுப் பாடற்திறன்
4. பிற கூற்றுப் பாடற்திறன்
5. சமுதாய நிலை

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப்பகுப்பு, இயல் விளக்கங்கள் முதலியன விளக்கப்பட்டுள்ளன.

**'தலைவன் கூற்றுப் பாடற்திறன்'** என்பது முதலாமியலாகும். தலைவன் கூற்றில் அமைந்துள்ள பாடல்கள், அப்பாடல்களில் உள்ள களவு, கற்புப் பாடல்களின் எண்ணிக்கை அவ்விரு கைகோளுக்குட்பட்டுள்ள பாடல்களின் துறைப்பகுப்பும் விளக்கமும், அவ்விரு நிலையில் மேலிடும் துறைகள், இத்துறைகள், தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுக்குட்பட்டும், வேறுபட்டும் வரும் தன்மை, தலைவன் கூற்றில் பாடல்களை அமைத்த புலவோர் தொகை ஆகியனவற்றை இவ்வியல் ஆராய்ந்து விளக்குகிறது.

**'தலைவி கூற்றுப் பாடற்திறன்'** என்பது இரண்டாமியலாகும். தலைவி கூற்றில் அமைந்துள்ள பாடல்கள், அப்பாடல்களில் களவு, கற்புப் பாடல்களின் எண்ணிக்கை. அவ்விரு கைகோளுக்குட்பட்டுள்ள பாடல்களின் துறைப்பகுப்பும் விளக்கமும், அவ்விரு நிலையில் மேலிடும் துறைகள், இத்துறைகள் தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுக்குட்பட்டும், வேறுபட்டும் வரும் தன்மை, தலைவி கூற்றுப் பாடல்களை அமைத்த புலவோர் தொகை ஆகியனவற்றை இவ்வியல் ஆராய்ந்து மொழிகின்றது.

**'தோழி கூற்றுப் பாடற்திறன்'** என்பது மூன்றாமியலாகும். தோழி கூற்றில் அமைந்துள்ள பாடல்கள், அப்பாடல்களில் உள்ள களவு, கற்புப் பாடல்களின் எண்ணிக்கை, அவ்விரு கைகோளுக்குட்பட்டுள்ள பாடல்களின் துறைப்பகுப்பும் விளக்கமும், அவ்விரு நிலையில் மேலிடும் துறைகள், இத்துறைகள் தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுக்குட்பட்டும் வேறுபட்டும் வரும் தன்மை, தலைவி கூற்றுப் பாடல்களை

அமைத்த புலவோர் தொகை ஆகியவை இவ்வியலின்கண் ஆராய்ந்து புலப்படுத்தப்பட்டுள்ளன.

**‘பிற கூற்றுப் பாடற்திறன்’** என்பது நான்காமியலாகும். இவ்வியலில் பிற கூற்றாளர்களாகப் பாங்கன், நற்றாய், செவிலி, கண்டோர், விறலி, அறிவர், வாயில், காமக்கிழத்தி, பாங்காயினர் ஆகிய ஒன்பது பேர் உள்ளனர். இக்கூற்றாளர்களின் கூற்றில் அமைந்துள்ள பாடல்கள், அப்பாடல்களில் உள்ள களவு, கற்புப் பாடல்களின் எண்ணிக்கை, அவ்விரு கைகோளுக்குட்பட்டுள்ள பாடல்களின் துறைப்பகுப்பும் விளக்கமும், இத்துறைகள் தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுக்குட்பட்டும், வேறுபட்டும் வரும் தன்மை ஆகியன இவ்வியலின்கண் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

**‘சமுதாய நிலை’** என்பது ஐந்தாவது இயலாக அமைகிறது. இதில், சங்க மருவிய காலத்தில் வாழ்ந்த மக்களின் தொழில், விளையாட்டு, பொழுதுபோக்கு, அணிகலன்கள், மருத்துவமுறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியன விளக்கம் பெறுகின்றன.

இவ்வாய்வேட்டில் சில செய்திகள் கூறியது கூறல் போலத் தோன்றலாம். அவை பொருள் தொடர்பு கருதியும், கருத்து விளக்கம் கருதியும் கூறப்பெற்றுள்ளன.

ஒவ்வோர் இயலின் இறுதியிலும் ஆய்வு முடிவுகள் தொகுத்துத்தரப் பெற்றுள்ளன. அவற்றுள் இன்றியமையாதன முடிவுரையில் கூறப்பட்டுள்ளன.

ஒவ்வோர் இயலுக்குப் பின்னரும் சான்றெண் விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

பின்னிணைப்பில் ஆய்வுக்குப் பயன்பட்ட துணைநூற்பட்டியலும், அட்டவணைகளும் தரப்பட்டுள்ளன.

# தலைவன் கூற்றுப் பாடத்திறன்

அகத்திணை மாந்தருள் தலைவன் சிறப்பிற்குரியவன். இன்ப வாழ்வில் தலைவியை நிறுத்த வேண்டும் என்பது அவனது குறிக்கோள். தலைவியின் நினைவுகள் தலைவனுக்கு இன்பம் சேர்க்கும் ஒன்று. தலைவன் தலைவியுடன் சேர்ந்திருக்கும் போதும், பிரிந்திருக்கும் போதும் அவனது மனம் முழுவதும் நிறைந்திருப்பது தலைவியின் நினைவே. களவில் இன்ப நாட்டம் கொண்டு வரைவை நீடிப்பனவாகவும், கற்பில் பொருள் நாட்டம் கொண்டு பிரிவை நீடிப்பனவாகவும் தலைவன் விளங்குகிறான். இத்தகைய மரபு நிலையினைத் தலைவனது கூற்றில் காணமுடியவில்லை. தலைவியைப் பிரிந்ததால் அவனுக்கு ஏற்பட்ட துயர், பொருள் வேட்கை, போர் நாட்டம் ஆகியன தலைவன் கூற்றுப் பாடல்களில் வெளிப்படுகின்றன. அத்தகையவனின் கூற்றுக்கள் நீதி இலக்கியத்தில் அமைந்துள்ளன. அவற்றின் திறம்பாடு குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

### களவுப் பாக்களின் எண்ணிக்கை

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் தலைவன் கூற்றில் அமைந்த களவுப்பாக்கள் இருபதாகும். அவை “ஐந்திணை ஐம்பதில் ஒன்றும்”[1] “திணைமாலை நூற்றைம்பதில் பதினேழும்”[2] “திணைமொழி ஐம்பதில் இரண்டுமாக அமைந்துள்ளன”[3]. அவை களவுப்பாக்களாக உள. அவற்றை,

1. பாங்கற் கூட்டம்
2. பாங்கிமதி உடன்பாடு
3. சேட்பபடை
4. இருவகைக் குறி
5. உடன் போக்கு

எனப் பகுத்து விளக்க இடமுண்டு.

**1. பாங்கற் கூட்டம்**

தொல்காப்பியம், துணையின்றி நிகழும் காமத்திணையைக்

"காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலின்
தாமே தூதுவராதலும் உரித்தே"[4]

எனக்கூறும். களவுப் புணர்ச்சி தோழி அல்லது பாங்கனால் தொடர்வதை,

"முந்நாள் அல்லாது துணையின்று கழியாது
அந்நா ளகத்தும் அதுவரை வின்றே"[5]

என்ற பகுதி விளக்கும். ஈண்டுத் துணையென்றது பாங்கன் ஆயிற்று. எனவே "எதிர்பட்ட தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்வதன் முன் பாங்கற்கு உணர்த்தவும் பெறும் எனச் சொல்லி பாங்கனைத் துணையாகக் கூறுவர்"[6] இளம்பூரணர்.

பாங்கர் துணையாகக் கூடும் கூட்டம் பன்னிரண்டு வகைப்படும். அதனைத் தொல்காப்பியம்,

"பாங்கன் நிமித்தம் பன்னிரண்டென்ப"[7]

எனச் சுட்டும். இதற்கு உரையாசிரியர் "ஆரிய மணத்தைக்காட்டி உரை செய்துள்ளார்"[8] அவ்வகைப்பாடு, தமிழ் மரபுக்கு உகந்தது அன்று, கைகோள் வகையில் ஒன்றான களவிற்கு உரியதென்பர் தொல்காப்பியர். அதனை,

"பாங்கொடு தழா அலும்"[9]

என்ற அடி உணர்த்தும். இக்கூட்டத்தில் தலைவன் மொழியும் கூற்றுக்களாக,

"நிற்பவை நிணைஇ நிகழ்பவை உரைப்பினும்"[10]

"குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்"[11]

என்பவை அமைகின்றன. அவற்றுள் நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும் எனும் கூற்றில் கீழ்க்கணக்கு அகப்பாடல்களில் ஆறு பாடல்கள் அமைந்துள்ளன.

**நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்**

இடந்தலைப்பாட்டின் இறுதியில் மகிழ்ச்சியோடோ, கலக்கத்தோடோ வரும் தலைவனது நிலை கண்டு பாங்கன் வினாவுவான். தலைவன் உற்றது உரைப்பான். பாங்கன் உலகத்து நிலை நிற்கும் நல்லொழுக்கங்களை நினைப்பித்துக் கூறுவான். அப்பொழுது தலைவன் பாங்கன் கூறியவற்றை மறுத்துக் கூற்று நிகழ்த்துவான். இது நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும் என்பதாகும். அதனை இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் முறையே,

“காம நுகர்ச்சி யொன்றனையும் நினையாது இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்குமென்று உட்கோடலும்“”[12]

“நிற்பவை நினைஇ உரைப்பினும் நிகழ்பவை உரைப்பினும் என உரைப்பினென்பதனை முன்னுங் கூட்டுக எனக்கூறி அது கேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங்களை அவனை நினைப்பித்துக் கழறிக் கூறினும் அவற்றை மறுத்துத் தன் நெஞ்சில் நிகழும் வருத்தங்களை கூறினும்”[13] என விளக்குவர்.

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் கழறிய பாங்கனை நோக்கித் தலைவன் கூறுவதனைப் பின்வருமாறு பகுத்துக் கூறமுடியும். அவை,

1. திறப்பாடுடையவன்
2. தன்வயப்படுத்துபவன்
3. வருத்தும் தெய்வம்
4. வெண்முறுவலுடையவன்
5. மனங்காக்க வைத்தவன்

6. உள்ளத்தைக் காக்கும்படி வைத்துவிட்டான்

7. கண்ணைவிட உள்ளம் வருத்துகிறது.

என்பனவாகும்.

**1. திறப்பாடுடையவன்**

தன் உள்ளத்தைக் கவர்ந்த தலைவியின் இயல்பைக் கணிமேதாவியாரின் திணை மாலை நூற்றைம்பதில் தலைவன்,

"திரையலறிப் பேராத் தெழியாத் திரியாக்
கரைஅலவன் காலினாற் காணாக் – கரையருகே
நெய்தல் மலர் கொய்யு நீள் நெடுங் கண்ணினாள்
மையின் உளையர் மகள்"[14]

எனக் கூறுகிறான். தலைவியின் திறப்பாட்டை, கடலிலே உள்ள அலைகள் ஒலித்துத் திரும்பிப் போகும் வண்ணம் நீந்துபவள்; நண்டுகளைக் கால்களால் கண்டு பிடிப்பவள்; கரையில் பூத்துள்ள நெய்தல் பூக்களைக் கொய்பவள்; மிக நீண்ட கண்ணை உடையவள் என விளக்குவர் கணிமேதாவியார் தலைவனால் விரும்பப்பட்ட தலைவி நெய்தல் நிலத்தைச் சார்ந்தவள் என்பதும், அந்நிலத்து வாழ்வில் மேம்பட்டு விளங்குபவள் என்பதும் இதனால் புலனாகும்.

**2. தன்வயப்படுத்துபவன்**

தமையன்மார்கள் கொண்டு வந்த மீன்களைத் தலைவி வற்றலாக்கிக் காத்து வந்தாள். அவளது கண்கள் அவற்றைக் காப்பதில் நிலைகொள்ளாமல் எளியோனான என்னை வயப்படுத்துவதிலேயே இருந்தன எனத் தலைவன் பாங்கனிடம் உரைக்கிறான். அதனை, கணிமேதாவியார்,

"பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார்
நூனல நுண்வலையான் நொண்டெடுத்த – கானல்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்
கடிபொல்லா என்னையே காப்பு"[15]

என்ற பாடல் சுட்டும்.

தலைவி காதல் மயக்கத்தில் உள்ளாள். அதனால் அவளால் தான் கொண்ட செயலில் கருத்தொருமித்து ஈடுபடமுடியவில்லை. அவள் உள்ளம் முறிவு பெற்று அவள் விரும்பிய பொருளை அடைய எண்ணுகிறது. காதலுற்றவர் எண்ணம் அவர் விரும்பிய செயலன்றி பிறிதொன்றில் ஆழங்காழ்படாது என்ற கருத்து இதனால் உணரப்படும்.

### 3. வருத்தும் தெய்வம்

தலைவனை வயப்படுத்தியது மட்டுமல்லாது அவனை வருத்தும் தெய்வமாகவும் தலைவி விளங்குகிறாள். அதனை மாறன் பொறையனார்,

"அணங்காகும் ஆற்ற வெமக்கு"[16]

என்ற அடி புலப்படுத்தும்.

### 4. வெண்முறுவலுடையவள்

தலைவியின் முத்துப்போன்ற பற்கள் காண்பாரை வருத்தும் தன்மையன என்பதை, கணிமேதாவியார்,

"பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணாது
இருங்கடன் மூழ்குவான் தங்கை – இருங்கடலுள்
முத்தன் வெண்முறுவல் கண்டுருகி கைவார்க்கே
ஒத்தனம் யாமே யுளம்"[17]

எனும் அடிகள் சுட்டும். ஈண்டு 'ஒத்தனம் யாமே உளம்' எனும் அடி நினைக்கத்தக்கது. தலைவி அழகில் மேம்பட்டவள். அவளது அழகு தன்னை வருத்தித் துன்புறுத்தியது என்கிறான் தலைவன்.

**5. உள்ளத்தை இடமாகக் கொண்டவன்**

இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைக் கண்டு தலைவன் மனவருத்தத்திற்குள்ளானான். அதனைக் கணிமேதாவியார்,

"வஞ்சமே என்னும் வகைத்தாலோர் மாவினாய்த்
தஞ்சம் தமியனாய்ச் சென்றேன் என் – நெஞ்சை
நலம் கொண்டார் பூங்குடிலாள் நன்றாயத்தன்றென்
வலம் கொண்டாள் கொண்டாளிடம்"[18]

என வெளிப்படுத்துகிறான்.

**6. மனங்காக்க வைத்தவள்**

குறிஞ்சி நிலத்தின் தினைப்புனத்தில் தலைவியைக் கண்டான் தலைவன். அந்நிலையில் தன் உள்ளத்தை அவள் பால் பறிகொடுத்தான். அதனைக் கணிமேதாவியார்,

"திங்களுள் வில் எழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களு ளானென்னுந் தாழ்வினால் – இங்கண்
புனங்காக்க வைத்தாற் போற் பூங்குழலைப் போந்தென்
மனங்காக்க வைத்தார் மருண்டு"[19]

என்ற அடிகள் சுட்டும். தலைவியைத் தினைப்புனத்துக் காவலுக்கு அனுப்பியது தவறல்ல, அவளை யான் கண்டதே குற்றமாகும். அதனால், அவள் என் உள்ளத்தில் உட்புகுந்து என்னை வருத்துகிறாள் எனத்தலைவன் உள்ளப் போராட்டத்திற்கு ஆளாகிறான்.

**7. கண்ணைவிட உள்ளம் வருத்துகிறது**

தலைவனின் உள்ளத்தில் தலைவியின் உணர்வுகள் மேலிட்டன. அதனால் அவன் உள்ளம் வருந்தியது. அதனைக் கண்ணன் சேந்தனார்,

"கண்ணின் வருத்துமென் னெஞ்சு"[20]

என்கிறார். உள்ளத்தின் வருத்தத்திற்குக் கண்ணும் ஒரு காரணம். அக்கண் வருந்துவதைவிட அவன் உள்ளம் வருந்துகிறது என்கிறான். தலைவியைக் குறியிடத்துக் கண்ணுற்றபொழுது அவள் மயிலோ, இவ்வுலகப் பெண்ணோ, நீரர மகளோ என ஐயுறுகிறான். தலைவியிடத்துத் தலைவன் கொண்ட தீராக்காதலே அவன் எண்ணமாறுபாட்டிற்குக் காரணமாகும். தலைவன் உள்ளம் காதலால் வருத்தத்திற்கு உள்ளானதை 'வருந்துமென் நெஞ்சே' என்ற சொற்கள் புலப்படுத்தும்.

எட்டுத் தொகை நூல்களில் மேற்குறித்த பொருண்மையில் "இருபத்தைந்து பாடல்கள் உள"[21] தலைவன் பாங்கனிடம் கூற்று நிகழ்த்துவதைக் கீழ்க்கண்ட பகுதிகள் விளக்கும் "அவளது குளிர்ச்சிமிகு கண்களைக் காண்பதற்கு முன்பு நம்மைக் காட்டிலும் அவற்றை மிகவும் உடையேன்"[22]

மழைக்கண், பூதந்தகண், அலமரும் கண் என இவ்வாறு இருந்தும் தன்மீது மட்டும் அம்பைப்போல் பாய்ந்து நோய் செய்துவிட்டாள்."[23] அதுடன் "மாமை நிறம், நல்ல பொழிவு, குவிந்த மார்பு, கூந்தல் கொடி, தாய்ப்பசு கன்றைப் பார்க்கும் பார்வை உடையவளை யான் எவ்வாறு மறப்பேன்."[24] தெய்வத்தால் காக்கப்பட்டக் கொல்லிப் பாவை அழகு கெடாதது போலத் தெய்வம் தந்த அவள் என் நெஞ்சை விட்டு நீங்கமாட்டாள்."[25] அத்துடன் "நீரைப் போன்று இனிய சாயலை உடையவளின் அழகு நெருப்பைப் போன்ற எண் மன வலிமையை இழக்கச் செய்துவிட்டது."[26] அதனால் "சிறிய பாம்புக்குட்டி காட்டு யானையைத் தீண்டி வருந்தினாற்போல வருந்தினேன்."[27] அது மட்டுமல்லாது சிறு நுதலானது புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப்

போல என்னைக் கட்டிப்போட்டுவிட்டது."[28] ஆக நான் "தலைவியை அடையப்பெற்றால் பெருமித குணங்கள் அத்தனையும் மீண்டும் எனக்குத் தோன்றும்."[29] நீ தலைவியைக் கண்டு அவளை அடைய வழி வகுப்பாய் இல்லையாயின் நீ காட்டிய வழியில் சென்று அவளை எளிதில் அடைவேன்."[30] ஏனென்றால் "காமநோயினை எவ்விடத்திலும் என்னால் தடுக்க முடியவில்லை."[31] காம இன்பம் துய்த்தல் என்பது பொருத்தியவரைக் கண்டால் அந்த நேரத்தில் தோன்றி ஒருவரை ஆட்படுத்தாது."[32] அதனால், காமத்தால் அணுகுவதைப் பிறர் தவிர்க்க வேண்டும்."[33]

இல்லையேல் "பெண்மகள், தெய்வப்பெண், ஐ, என்ற அழகுடையவள், அரும்பிய முலை உடையவள், சிவந்த வாய், தேமல் படர்ந்த மார்பு உடையவளைக்"[34] கண்ட நிலையல் "உணர்ச்சி வயப்படாத என நெஞ்சமானது உணர்ச்சி வயப்பட்டது."[35] அதனல் "கடல் அலைபோல் நான் இரவிலும் உறக்கம் கொள்ளாது இருக்கிறேன்."[36] இந்நிலை அறிந்து "எங்களைச் சேர்த்து வைக்காமல் கழவாவது ஏன்."[37] உன்னுடைய சூழ்ச்சி தொடருமேயானால் "மைதீட்டிய கண்களையும், மணக்கும் கரிய கூந்தலையுடைய தலைவியைப் பெறுதல் அரிது."[38] அத்துடன் "அவளை நேரில் பார்த்து மகிழாமல் அவனுடைய வெளிப்பட அரும்பாத புன்னகையை நினைத்துப் பார்த்து மகிழவே முடியும்."[39] இந்நிலையில் என்மனம் தீர்மானமாக ஒன்றை நினைக்கிறது. "அவளோடு ஒரு நாள் கூடப் பெறுவேனாயின் அதன்பின் அரை நாள் வாழ்க்கையையும் யான் விரும்பமாட்டேன்"[40] எனத் தலைவன் மொழிவது நினைத்தற்குரியதாகும். ஈண்டு தலைவனின் உணர்வு வெளிப்பாட்டினை நன்குணரமுடிகிறது.

**பாங்கிமதி உடன்பாடு**

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்னும் மூன்று நிலைகளிலும் தலைவியைப் புணர்ந்த தலைவன் நான்காவதாக தோழியின் துணையை நாடுவான். அதனைத் தொல்காப்பியம்,

"தன்வயின் பாங்கன் அவன்வயிற் பாங்கு
செய்யானாகலின்"[41]

எனக்கூறும்.

தோழியின் புணர்ச்சியை மேற்கொள்வதாகப் பேராசிரியர் கூறும் உரை நோக்கத்தக்கது. தோழியின் இன்றியமையாமையைத் தலைவன் எவ்வாறு அறிந்தான் என்பதை இறையனார் அகப்பொருள் "மற்றையாறெல்லாம் தலைமகட்குச் செய்யும் வழிபாடும் தோழி விசேடத்தாற் செய்யும் வழிபாடும் எல்லோர்க்கும் தலைமகன் அருளிச் செய்யும் செய்கையும் கண்டமைலான் சிறந்தன"[42] என இறையனார் அகப்பொருள் திறம்பட விளக்கும். இவ்வழகுச் சூழலுக்குத் தொல்காப்பியர் கூற்றுக்கள் சான்றாகும். அவை,

1. "ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
   நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
   தோழியைக் குறையுறும் பகுதியும்
2. பெட்ட வாயில் பெற்று இரவுவலி யுறுப்பினும்
3. தோழி குறை அவள் சார்த்தி மெய்யுறக் கூறலும்"[43]

என்பனவாகும். அவற்றுள் முதற்கூற்றிற்கும் மூன்றாவது கூற்றிற்கும் தான் பதினென் கீழ்க்கணக்கு அகநூல்களில் பாடல்கள் காணப்பெறுகின்றன.

**ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்**

தோழி வாயிலாகக் குறை முடிக்கக் கருதும் தலைவன் அவளை மதியுடன்படுத்த பின்னவது குறைமுடித்துத் தரவேண்டும் என்ற கருத்தை அவளிடம் கூறமாட்டான் என்பர் தொல்காப்பியர்"[44] ஆதலின் தலைவன் தன்குறை தெளிவாகக்கூறாது அவன் எம்மால் முடியப்படுவதொரு குறையுடையான் போலும் என்று தோழி கருதும்படி கரந்த மொழி பகர்வாள். தோழியும், தலைவியும் ஒரு சேர இருக்கும் சுற்றம் நோக்கிப் புதியவன்

போலப்புகுந்து இங்கே என் அம்பிற்குத்தப்பிய விலங்குடன் போந்தன கண்டீரோ? என்றும் நும் ஊரும் பேரும் யாவை? என்றும் தலைவன் அவர்களை நோக்கி வினாவுவான். இக்கூற்றில் கீழ்க்கணக்கு அகநூல்களில் இரண்டு பாடல்கள் திணைமாலை நூற்றைம்பதில் அமைந்துள்ளன.

அம்புகள் பாய்ந்த மான்களை நீங்கள் பார்த்ததுண்டா? எனத் தலைவன் தலைவியிடமும், தோழியிடமும் வினாவுவதைக் கணிமேதாவியார்

"நறைபடர் சார்ந்த மறவெறிந்து நாளால்
உறையெதிர்ந்து வித்தியவூழேனற் – பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
எமரை போந்தன ஈண்டு"[45]

"அவட்காயின் ஐவனம்காவல் அமைந்தது
இவட்காயிற் செந்தினைகாரேனல் – இவட்காயின்
எண்ணுளவா லைந்திரன் டீத்தான்கொல் என்னங்கொல்
கண்ணுளவால் காமன் கனை"[46]

என்ற பாடல்கள் முறையே புலப்படுத்தும். தலைவியிடம் காமனின் அம்பான ஐந்தும் உள்ளன. அவற்றுள் இரண்டு அம்புசாமா விழிகளில் உள்ளனவாய்க் காமன் கொடுத்தான். அதனால் என் உயிருக்கு யாது நிகழுமோ? எனத் தலைவன் கெடுதி வினவியது ஈண்டு அறியப்பெறுகிறது.

ஒப்பீட்டுப் பார்க்கையில் ஊரும் பேரும் கெடுதியும் பிறவும் எனும் கூற்றிற்கு எட்டுத்தொகையிலுள்ள,

"பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதென
சொல்லவும் சொல்லீராயின்
கொய்புனம் காவலும் நுமதோ
கோடேந்து அல்குல் நீள் தோளீரே"[47]

என்ற நற்றிணைப் பாடலைச் சான்றாகக் கூறமுடியும்.

**தோழி குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறல்**

தோழி விரைந்து தன் தலைவன் தலைவியும் தன்பால் காதல் உடையவனே என்பதை மெய்யென உணரும்படி மொழிவது மேற்குறித்த சான்றாகும். இக்கூற்றிற்கு இளம்பூரணர்,

"தோழி குறையைத் தலை மகனைச் சார்த்தி
மெய்யுறக் கூறுதலும்"[48]

என விளக்கம் பகர்வர். நச்சினார்க்கினியர் அதற்கு "தோழி இவள் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாமல் இருந்ததென்று அவன் மேலே சேர்த்தி அவனை உண்மையென்று உணரத் தலைவன் கூறலும்"[49] என்ற விளக்கத்தைத் தருவர்.

"திணைமாலை நூற்றைம்பதில் மட்டும் தலைவன் குறைவுட்சாத்திக் கூறலாக ஐந்து பாடல்கள் அமைந்துள்ளன"[50] அவற்றின் பொருண்மைகளை,

1. நன்றாக அறிவேன்
2. மேனிகண்டு வருந்துகிறேன்
3. தளர்ந்து வளர்ந்த தகுதியுடையவள்
4. முத்துக்கள் தோற்கும்

எனப்பகுத்து விளக்க முடியும்.

**1. நன்றாக அறிவேன்**

தலைவன் தலைவியது பண்பைத் தோழியிடம் மொழிந்தான். அதுகேட்ட தோழி 'அப்பண்புடைய தோழியை யான் அறியேன்' எனப் பகன்றாள். அதுகேட்ட தலைவன், தோழியிடம் மொழிவதனைக் கணிமேதாவியார்,

"அறிகவளை ஐய இடைமடவாய் ஆயச்
சிறிதவள்செல் லாள்இறுமென் றஞ்சிச் – சிறிதவள்

நல்கும்வாய் காணாது நைந்துருகி என்னெஞ்சம்
ஒல்குவாய் ஒல்க லுறும்”[51]

என்பர். ஐயுறும் இடையினை உடையவள் சிறிது தொலைவு செய்வதற்கு முன்பு என் உள்ளம் அவள் இடை ஒடிந்துவிடும் என்று அஞ்சி அவள் அன்பு காட்டும் நெறியை அறிய இயலாமையால் தளர்ந்து உருகி அவள் நடக்குந்தோறும் அவள் பின் போய்த் தளர்ந்து வருந்தும் என்கிறான் தலைவன். தலைவன் தலைவிமீது கொண்டுள்ள அன்பின் மேலீட்டை இக்கருத்துப் புலப்படுத்தும். தலைவனின் உள்ளம் தலைவியின் நிலைக்காக இறங்குவது ஈண்டு புலனாகும்.

**2. மேனிகண்டு வருந்துகிறேன்**

புனத்தைக் காவல் செய்யும் தலைவியின் கண்கள் வேலியைப் போல் என் உள்ளத்தில் தாவிப்புகுந்தன காரணம் என் உயிரின் ஒழிவைக் காண வேண்டும் என்பதோ? அவற்றிற்கு அத்தகைய முயற்சி தேவையில்லை. நான் தலைவியின் அழகுநலன் கண்டு வருந்துகிறேன் எனத் தலைவன் தோழியிடம் கூறுகிறான். அதனைக் கணிமேதாவியார்

“பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்
தாலொத்த ஐவனம் காப்பாள்கண் – வேலொத்துஎன்
நெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பானோ காண்கொடா
அஞ்சாயற் கேநோவல் யான்”[52]

என உணர்த்துவர். காதலை வெளிப்படுத்தும் மிகச்சிறந்த உடலுறுப்பு கண்கள். அக்காதல் பார்வையுடைய கண்களையும், உடலழகையும் பெற்ற தலைவியால் தலைவன் காதல் வயப்பட்டு வருத்தாமலிறுப்பதை இக்கருத்துப் புலப்படுத்தும்.

***3. தளர்ந்து வளர்ந்த தகுதியுடையவள்***

*தலைவன் தோழியிடம் தன் குறையை நவின்றான். அதுகேட்ட தோழி அதற்கு மறுப்பேதும் கூறாது தன் ஆற்றாமையைப் புலப்படுத்தினாள். அதனைக் கணிமேதாவியார்,*

*“நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை*
*வெறும்புதல் போல் வேண்டாது வேண்டி – எறிந்துழுது*
*செந்தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு*
*நொந்தினைய வல்லளோ நோக்கு”*[53]

*என்பர். நல்ல மணம் மிக்க மகிழமரம் புதர்களை விரும்பாதது போல தலைவனின் தங்கை மற்றவர் படும் துன்பத்தை விரும்பமாட்டாள்.*

***4. முத்துக்கள் தோற்கும்***

*தலைவன் முன்னம் தலைவியொடு நெருங்கிப் பெற்ற உறவினைக் கணிமேதாவியார்,*

*“கவளக் களிப்பியன்மால் யானைசிற் றாளி*
*தவழத்தா னில்லா ததுபோற் – பவளக்*
*கடிகை இடைமுத்தம் காண்டொறு நில்லா*
*தொடிகை இடைமுத்தந் தொக்கு“”*[54]

*எனக் கூறுவர். தலைவியின் பற்களுக்கு அவளுடைய கை வளையலில் உள்ள முத்துக்கள் தோற்கும் என்கிறான் தலைவன். தலைவன் தலைவியறது நெருங்கிய உறவு நிலையையும், அவன் தலைவியின் அழகிற்கு ஆட்பட்டிருப்பதையும் ஈண்டு உணரமுடிகிறது.*

*எட்டுத்தொகையில் தலைவன் இறையவிட்சாத்தி மெய்யுறக் கூறலாக அமைந்த பாடல்கள் மூன்று. அவை தலைவனின் இயல்பை விளக்குகின்றன. அதனைப் “பருத்த தோளையுடைய தலைவிக்கு விளையாடப்*

பாவை செய்து தந்தும் வனமுலையில் ஒளிபெறுமாறு அறியார்”[55] எனத் தலைவன் கூறுவதால் உணரமுடியும்.

“தலைவி என்னுடைய பண்புகளையும், உறக்கத்தையும் கவர்ந்து கொண்டாள். அவ்வாறு கவர்வதற்குக் காரணமாகத் தன்னிடம் உள்ள தவறு யாது?”[56] என்று தலைவன் வருந்துகிறான்.

“என் குறையாதெனக் கண்டு நீ விரும்பி அருளாவிட்டால், உன் தோளையும், கூந்தலையும், பலவாராகப் பாராட்டி வாழும் இல்வாழ்க்கை எனக்குக் கைகூடுமோ”[57] எனத் தலைவன் மொழிகின்றான். இயற்கைப் புணர்ச்சியில் தலைவன், தலைவி உறவு தோழியின் முன் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உணர்த்தப்பெறுவதை அக்கருத்துக்கள் விளக்குகின்றன.

**சேட்படை**

தோழி மதியுடன்பட்டதனை அறிந்த பின்பு தலைவன் அவளை அணுகித் தன் குறையை முடித்துக்கொள்ள முயல்வான் கையுறையாகத் தழை முதலியன கொண்டு வந்து அவற்றை ஏற்றுத் தன் தலைவிக்குத் தந்து அவளை எப்படியாகினும் தன்னுடன் கூட்டி வைத்திடுமாறு தோழியை வேண்டி நிற்பான். அப்போது அவள் தன் தலைவியை இவனோடு கூட்டுவிக்கும் தன் முயற்சியின் அருமையும், அத்தலைவியின் அருமை, பெருமையும் நீளக் கனவு புணர்ச்சியில் நின்றொழுகாது உடனே மணம் முடித்துக் கொள்ளலே நன்று என்ற எண்ணமும் அவனுக்குத் தோற்றுவித்தற் பொருட்டு ஐயனே நும் தலைவியை நீவிர் இப்பொழுது கூடுதல் இயலாது என்று பல காரணங்களைக் கூறி மறுப்பாள்.

காவலர், கருகுவர், நீவிர் வரற்பாலிரல்லர், விலகிச் செல்லுதில் என்பன காரணங்களைக்கூறி தலைவியை அடைதல் எளிது என்று நினைந்து வந்த தலைவனது நினைவை அஃது அத்துணை எளிதன்று என்று தோன்றும்படி

தோழி சேட்படுத்துவாள் சேட்படுத்தலாவது, அகற்றுதல், தூரவிடல் என்று பொருள்படும்.

"தலைவியைத் தலைவனோடு சேர்த்து வைக்கும் தன் முயற்சியின் அருமை, தலைவியின் அருமையை அறிவிக்க, தலைவனின் காதல் உறுதியை நிலைப்படுத்த, விரைவில் மணம் முடிக்க, தலைவன் தலைவிபால் அன்பு முதிர, பொறுப்பும், கடமையும், உணர்வும் கொண்ட தோழி தலைவனைச் சேட்படுத்துவாள்."[58] இச்சூழலில் தலைவன் தோழியிடம் உரை நிகழ்த்துவான். அவற்றைத் தொல்காப்பியர் ஏழு கூற்று நிலைகளில் மொழிவர். அதனை,

1. "பண்பிற் பெயர்ப்பினும்
2. அன்புற்று நகினும்
3. தண்டாதிரப்பினும்
4. மற்றைய வழியும்
5. சொல்லவட் சார்ந்தலிற் புல்லிய வகையினும்
6. அறந்தோர் அயர்ப்பின் அவ்வழி மருங்கக்கேடும் பீடும் கூறலும்
7. தோழி நீக்கலானாகிய நிலைமையும் நோக்கி மடன்மா கூறும்
   இடனுமா ருண்டோ"[59]

தோழி தொடர்ந்து சேட்படுத்தவே, மனம் நொந்த தலைவன் 'மடல் ஏறியேனும் தலைவியைப் பெறுவேன்' என்கிறான். அதனைத் தோழி நீக்கலினாகிய நிலையையும் நோக்கி மடன்மாகூறும் இடனுமாருண்டே என்ற பகுதி விளக்கும். தொல்காப்பியர் கூறுவதை நோக்கின் தலைவன் மடல் ஏறவேன் என்று கூறுவானே ஒழிய மடலேறுவதில்லை. மடலேறின் அது

"ஏறிய மடல் திறம்"[60]

எனப் பெருந்திணைப் பாற்படும்.

**உடன்போக்கு**

அம்பலும், அலரும் களவினை வெளிப்படுத்தும் எனத் தலைவி அஞ்சிய நிலையிலும், இச்செறிப்புக் கடுமையினின்று அவளை உய்விக்க விரும்பிய நிலையிலும், வரைவு தலைவிக்கு மறுக்கப்பட்ட நிலையிலும் தலைவன் தோழியோடு ஆராய்ந்து முன்கூட்டியே ஒரு நன்னாள் தேர்ந்தெடுத்து அந்நாளில் யாருமறியா வண்ணம் தலைவியைத் தன்னுள் அழைத்துச் செல்வது உடன்போக்கு எனப்படும். உடன்போக்கைத் தொல்காப்பியம்,

"போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்"[61]

"சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப"[62]

"ஒன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலில் கலங்கு அஞர் எய்திக்"[63]

"போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇச்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்"[64]

என மொழிகின்றது. அவை முறையே தோழி, கண்டோர், தலைவன், செவிலி கூற்றுக்களாக உள. "உடன்போக்குச் சென்ற தலைவி சிலம்பு கழித்தும்"[65] "சிலம்பு கழிக்காமலும்"[66] சென்றதைச் சங்க இலக்கியம் கூறும். இச்சூழலில் தலைவன் நிகழ்த்தும் கூற்றுக்களாக தொல்காப்பியர்,

1. "ஒன்றாத் தமரினும்
2. பருவத்தும்
3. ஒன்றிய தோழியோடு வலிப்பினும்
4. விடுப்பினும்
5. சுரத்தும்

*6. இடைச்சுர மருங்கின் அவள் தமரெய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலில் கலங்கு அஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட
அப்பாற்பட்ட ஒருதிறத்தானும்"*[67]

*ஆகிய ஆறினைக் குறிப்பர். அவற்றில் 'சுரத்தும்' எனும் கூற்றிற்கு மட்டும் கீழ்க்கணக்கு அக இலக்கியங்களில் பாடல்கள் அமைந்துள்ளன.*

*சங்க இலக்கியத்தில் 122 உடன்போக்குப் பாடல்கள் உள. இவற்றில் துன்ப உணர்வுகளே மேலிடுகின்றன. இன்ப உணர்வுக் கூறுகள் இல்லை. இதற்குக் காரணம் சமூக அமைப்பே காரணமாகும்.*

*கலித்தொகை சங்க காலத்தின் இறுதியில் எழுந்த இலக்கிய நூல். இந்நூல் உடன்போக்கு மேற்கொண்ட தலைவியை "சிறந்த கற்பினாள்"*[68] *எனக் கூறுகிறது. இக்காலக் கட்டத்தில் உடன்போக்கினைச் சமூகம் சுதந்திரக் காதலாகக் கருதவில்லை. அதற்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளது.*

**சுரத்தும்**

*தலைவியை உடன்கொண்டு சுரத்திடத்துச் செல்லும் தலைவன் தலைவியிடம் பேசுவது அல்லது தான் மட்டும் நெஞ்சொடு பேசுவது எனும் வகையில் அமைவது சுரத்து என்பதாகும்.*

*தலைவன் தலைவியை உடன்போக்கிச் செல்லும் சுரத்திடத்துத் தலைவியை ஆற்றுவித்துச் செல்லும் முறையைத் "திணைமொழி ஐம்பதும்"*[69] *"திணைமாலை நூற்றைம்பதும்"*[70] *இனிய காட்சிகளைக் கூறுவது வியப்பாகும்.*

*பெற்றோரையும், உற்றோரையும், தோழியரையும் விடுத்துப் பிரிந்து எய்தும் வருத்தமும், புதுவதோர் இடம் செல்கிறோம் என்ற மருட்கையும், தமர் வந்து மீட்டுச் சென்று விடுவாரோ என்ற கலக்கமும், தமர்வரின் தன்னால் அவர்க்கு ஏதும் விளையுமோ? என்ற அச்சமும்*

தலைவிபால் தோன்றாவண்ணம் தலைவன் தலைவியொடு இன்சொல் பகர்ந்தும் வழியிடை அவளை இளைப்பாற்றியும் உளம் மகிழ் விளையாட்டுகளை ஆடவைத்தும், இனிய காட்சிகளைக் காட்டியும் அவளை அழைத்துச் செல்வான். அதனைக் கணிமேதாவியார்,

"நின்னோக்கம் கொண்டமான் தன்குரவ நீழல்காண்
பொன்னோக்கம் கொண்டபூங் கோங்கம் காண் – பொன்னோக்கம்
கொண்ட சுணங்கனி மென்முலைக் கொம்பன்னாப்
வண்டல் அயர்மணன்மேல் வந்து"[71]

என உணர்த்துவர்.

பாலை வழியிடத்துள்ள காட்சிகளைத் தலைவிக்குக் காட்சிப் படுத்துகிறான் தலைவன். மான்களின் இயல்பு, குராமரத்தின் இயல்பு, பொன்மலர் நிறைந்த கோந்தமரத்தின் தன்மை ஆகிய காட்சிகளைக் காட்டித் தலைவியை மகிழ்ச்சிப்படுத்துகிறான். அதன் பின்னர் மலையிடத்தில் வந்து விளையாடுவாயாக எனக் கூறுகிறான். பாலை நிலத்தின் வழியருமைப் பாட்டினால் தலைவி துயர்மிக எய்திவிடக்கூடாது என நினைத்தான் தலைவன். அதனால் இயற்கைக் காட்சிகளை அவளுக்குக் காட்டி அவளை இன்பப்படுத்தி வழியின் துன்பம் தெரியாதளவிற்கு அழைத்துச் சென்றான் என்பது கருத்து.

பாலை நிலத்தில் உள்ள மராமரம், நுனா போன்ற மரங்களில் மொய்த்த வண்டின் பாலைப்பண்ணைப்பாடித் தலைவனையும், தலைவியையும் வரவேற்றன. அதனைக் கண்ணன் சேந்தனார்,

"கருங்கான் மராஅ நுணாவோடு அலர
இருஞ்சிறை வண்டினம் பாலை முரல
அரும்பிய முள்ளெயிற்று அஞ்சொல் மடவாய்
விரும்புநாம் செல்லு மிடம்"[72]

எனக் கூறுவர்.

*வழியிடை ஏற்பட்ட துன்பமும், சோர்வும் தலைவியின் உள்ளத்தை வருத்தும். அவ்வருத்தத்தை நீக்கும் பொருட்டுத் தலைவன் இயற்கை இன்பங்களைத் தலைவிக்குக் காட்சிப்படுத்துகிறான். அக்காட்சி தலைவியின் உள்ளத்தை மகிழ்வித்து துன்பத்தை மறக்கச் செய்கிறது. சங்க இலக்கியங்களில் இச்செய்தி பயின்று வந்துள்ளது. அது ஈண்டு ஒப்புநோக்கற்பாலது. தலைவனிடம் உடன்போக்கில் செல்லும் தலைவி வழியின் அருமைப்பாட்டால் துன்பம் பல பெற்றிருப்பாள். அவள் எய்தும் துன்பங்களைக் கண்ணுற்ற தலைவன், அவள் அதனை ஒரு பொருட்டாக எண்ணாதிருக்க அவளை வழிநெடுகிலும் இன்பப்படுத்திச்செல்வான். "அவ்வகையில் அவளை விளையாடச் செய்தும்"[73] "இயற்கை காட்சிகளைக் காட்சிப்படுத்தியும்"[74] அழைத்துச் செல்வான். அதனால் தலைவி துன்பம் மறந்து உள்ளத்தே இன்பம் பெருவாள்.*

**இருவகைக்குறி**

*தோழியின் துணையால் தலைவியைத் தலைவன் பகற்குறியிலும், இரவுக் குறியிலும் கூடுவதுண்டு. அந்நிலையில் அவன் நிகழ்த்தும் கூற்றுகள் மூன்று. அதனைத் தொல்காப்பியர்,*

1. *"பரிவுற்று மெலியினும்*
2. *அவட்பெற்று மலியினும்*
3. *ஆற்றிடையுறுதலும்"*

*என்பர். அவற்றுள் 'பரிவுற்று மெலியினும்' எனும் கூற்றிற்கு மட்டும் கீழ்க்கணக்கு அகநூலான திணைமாலை நூற்றைம்பதில் மூன்று பாடல்கள் அமைந்துள. அவை தலைவன் கூற்று நிகழ்த்துவதாக உள.*

**பரிவுற்று மெலியினும்**

*பரிந்த உள்ளத்தினாய் வருந்திக் கூறும்போது தலைவன் மாட்டுக் கூற்று நிகழும் இக்கூற்று 'பரிவுற்று மெலியினும்' என மிகவும் சுருங்கக்*

கூறப்படுகின்றது. இருவகைக் குறியில் பல்வேறு சூழலில் தலைவன் வருந்தும் போதெல்லாம் அவன்பால் இக்கூற்று நிகழ்வதாக நச்சினார்கினியர் கொள்கிறார். இதுகுறித்து அவர் "புணர்ந்து நீங்குந் தலைவன் ஆற்றார் கூறுவனவும் வறும்புனல் கண்டு கூறுவனவும், இச்செறிப்பறிவுறுப்ப ஆற்றானாய்க் கூறுவனவும் இரவுக்குறிக்கண் வருகிறவன் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறுவனவும்"[75] என விளக்குவர். திணைமாலை நூற்றைம்பதில் உள்ள மூன்று பாடல்களின் பொருண்மைகளை,

1. தலைவியைப் புனத்தில் காணாது வருந்துதல்
2. பகற்குறியில் தலைவியைக் காணாது வருந்துதல்

எனப் பகுத்து விளக்க வாய்ப்புண்டு.

**1. தலைவியைப் புனத்தில் காணாது வருந்துதல்**

திணைப்புனக் காவலை நீக்கித் தலைவியை இல்லில் இருக்கச் செயதன். அந்லையில், அவளைக்காண வழக்கம்போல் தினைப்புனத்துக்குத் தலைவன் வந்தான். அங்குத் தலைவியைக் காணாமல் தலைவன் புலம்புவதனைக் கணிமேதாவியார்,

"கோடாப் புகழ்மாறன் கூடல் அனையாளை
ஆடா அடகினும் காணோன்போர் – வாடாக்
கருங்கொல்வேல் மன்னர் கலம்புக்க கொல்லோ
மருங்குல்கொம் பன்னாள் மயிர்"[76]

என்பர். மதுரை நகரத்தைப் போன்ற தலைவியை விளையாட்டு இடத்தில் காணவில்லை; பூங்கொம்பைப் போன்ற அவளது கூந்தல் போர்க்களத்தில் பின்னிடாத வேலையுடைய மன்னரின் முடியாய் ஒன்று வளர்ந்து முதுக்குறைவைக் காட்டியதோ எனத் தலைவன் தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

கொன்றை மரமே, குருந்த மரமே! முல்லைக் கொடியே! நீங்கள் வாடிக் காணப்படுகின்றீர். உம் எதிரில் நிற்பவனான நான் இந்த வாட்டத்திற்குக்

காரணமான செய்தி நீங்கள் தலைவியுடன் உரையாடியதே என்பதை அறிந்தேன். நீண்ட கண்களையுடைய தலைவி இங்கிருந்து போகும்போது என்ன கூறினீர்?

அவள் யாது உரைத்தாள்? பின் நீங்கள் அவளுக்கு யாது சொன்னீர்? பின் அவள் உங்கட்கு யாது கூறினாள்? எனத் தலைவன் ஆற்றாமையால், உரைப்பதைக் கணிமேதாவியார்,

"கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர்
நின்றேன் அறிந்தேன் நெடுங்கண்ணாள் – சென்றாளுக்கு
என்னுரைத் தீர்க்கு என்னுரைத்தாட்கு என்னுரைத்தாண்
மன்னிரைத்த பூண்மிளிர விட்டு"[77]

என்பர். தலைவி மீது தலைவன் கொண்ட அன்பின் மிகையே அவனை இந்நிலைக்கு உட்படுத்தியதென்பது கருத்து.

**2. பகற்குறியில் தலைவியைக் காணாது வருந்துதல்**

பகற்குறியில் தலைவியின் குறிப்பினைக் காணப்பெறாதத் தலைவன் தன் துன்பப்படுவரைக் கணிமேதாவியார்,

"கொல்யானை வெண்மருப்பும் கொல்வல் புலியதளும்
நல்யானை நின்னையர் கூட்டுண்டு – செல்வார்தாம்
ஓரம்பி னான்எய்து போக்குவார்யான் போகாமல்
ஈரம்பி னால்எய்தாய் இன்று"[78]

என மொழிபர். தலைவியின் தமையர் ஓர் அம்பினால் விலங்குகளைத் தாக்கும் வல்லமை கொண்டவர்கள்அம்பென்றும் கண்களால் தலைவியோ தன்னைத்தாக்கி வருத்தும் தன்மையள் என மொழிகிறான் தலைவன். அவ்வருத்தத்திற்குக் காரணம் அவன் தலைவியிடத்துக் கொண்ட காதலேயாகும். அதனால், அவன் செயலற்று செய்வதறியாது தடுமாறுகிறான். அதனை 'யான் போகாமல் ஈரம்பினால் எய்தாய்' என்ற அடி விளக்கும்.

**கற்புப் பாக்களின் எண்ணிக்கை**

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் தலைவன் கூற்றில் அமைந்த கற்புப் பாடல்கள் பத்தொன்பது ஆகும். அவை “ஐந்திணை ஐம்பதில் மூன்றும்”[79] திணைமாலை நூற்றைம்பதில் எட்டும்”[80] கார் நாற்பதில் எட்டும்“”[81] அமைந்துள்ளன. அவற்றைப் பொருண்மை அடிப்படையில்,

1. பரத்தையிற் பிரிவு
2. பிரியுமிடம்
3. இடைச்சுரத்து அழுங்கல்
4. வினைமுற்றி மீளல்

எனப்பகுத்து விளக்க முடியும்.

**1. பரத்தையிற் பிரிவு**

தலைவன் கற்பு வாழ்வில் தலைவியைவிடுத்து வேறொரு பெண்ணின் காரணமாகப் பிரியும் பிரிவே பரத்தையற்பிரிவு. “அன்பு வாழ்வின் ஒரு குறையாகவே பரத்தையற் பிரிவு அமைந்திருத்தலைச் சான்றோர் கூறியுள்ளனர்”[82]. இதுகுறித்து டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர்அவர்கள் “பலவகையானும் உயர்பெறியாகிய அன்புடைய வாழ்க்கை, பூவிற்குப் புல்லிகழ் வாய்த்தாற் போலவும், மதிக்குமறு வாய்த்தாற் போலவும் பரத்தையர் பிரிவு எனும் இழிந்த ஒழுக்கத்தினால் சிறிது கலக்கமடைகிறது”[83] என்பர். தொல்காப்பியர் இவ்வொழுக்கத்தினை “கொடுமை ஒழுக்கம்”[84] “அடங்கா ஒழுக்கம்”[85] “பேணா ஒழுக்கம்”[86] என்று சுட்டிச் சொல்வர். “தங்கிய ஒழுக்கத்துக் கிழவன்”[87] “பிழைத்து வந்திருந்த கிழவன்”[88] எனத் தலைவனின் ஒழுக்கச் சீர்கேடும் அவரால் குறிக்கப்படுகிறது. இத்தகைய குறைபாடுடைய பரத்தையர் பிரிவுக்குரிய கூற்றுகளாகத் தொல்காப்பியர்,

1. “பரத்தையின் அகற்சியின் பிரிந்தோள் குறுகி இரத்தலும்
2. தெளிதலும்

3. பயங்கெழு துணையணை புல்லிய புல்லாது உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப் புல்கென முன்னிய நிறையழி பொழுதின் மெல்லன் சீறடி புல்லிய இரவினும்

4. ஏனை வாயில் எதிரொடு"[89]

ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

**ஏனைவாயில் எதிரொடு**

தலைவி, தலைவன் பால் கொண்ட ஊடலைத் தணிப்பது குறித்து வாயில்களோடு உரையாடுமிடத்தும் தலைவன் பால் கூற்றுத் தோன்றுவது ஏனைவாயில் எதிரொடு என்று தொல்காப்பியர் கூறுவர். இதற்கு இளம்பூரணர் "பெண்டிருமல்லாத வாயில்களினார் எதிர்கூறும் கூற்றும் தலைவன் மாட்டு நிகழும் என்றவாறு"[90] என்பார் நச்சினார்க்கினியர். "சிறந்த மொழியை ஒழிந்து நின்ற வாயில்கட்கு எதிரே கூறுங்கூற்றோடே முற்கூறியவற்றைத் தொகுத்து"[91] என்பதால் ஏனைய வாயிலாகிய பாணனுக்கு உரைத்ததுப் பெறப்பெறும். இதன் அடிப்படையில் கீழ்க்கணக்கு அகநூலான திணைமாலை நூற்றைம்பதில் இரண்டு செய்யுள்கள் அமைந்து காணப்பெறுகின்றன. அவற்றை,

1. பாணன் வாயிலாகச் செல்ல வேண்டும்

2. தலைவியைப் புணர்ந்து மகிழ்ந்து கூறியது

எனப்பகுத்து விளக்க வாய்ப்புண்டு.

***1. பாணன் வாயிலாகச் செல்ல வேண்டும்***

மகனைப்பெற்று நெய்தலாடிய தலைவியிடம் தோழி முதலிய வாயில்களைத் தலைவன் ஊடல் தீர்க்கும் பொருட்டு அனுப்பினான். அது இயலாத நிலையில் பாணனைத் தலைவியிடம் தூது செல்ல வேண்டுமென்றான். அந்நிலையில், தலைவன் பாணனிடம் கூறுவதைக் கணிமேதாவியார்,

"அணிக்குரன்மேல் நல்லாரோ டாடினேன் என்ன
மணிக்குரன்மேன் மாதார ளூடி – மணிச்சிறல்
பாட்டை இருந்தயரும் பாய்நீர்க் கழனித்தே
ஆட்டை யிருந்துறையு மூர்"[92]

என உணர்த்துவர். பரத்தையுடன் யான் விளையாடினேனெனத் தலைவி தன்னுடன் ஊடல் கொண்டாள்; அவளின் ஊடலைத் தகர்த்து அவளுடன் தன்னைச் சேர்த்து வைக்க வேண்டுமெனப் பாணனிடம் தலைவன் கூற்று நிகழ்த்துகிறான். பரத்தைகளின் ஒழுக்கத்தைக் காரணம் காட்டி தலைவி ஊடல் கொண்டாள். அவ்ஊடல் நீடித்ததன்று; அவனது தவற்றைச் சுட்டிக்காட்டும் வகையிலேயே அது அமைகிறது. பரத்தையொழுக்கத்தைக் காரணம் காட்டி தலைவி தலைவனை ஊடிய செய்தி சங்க இலக்கியத்தில் உண்டு.

**2. தலைவியைப் புணர்ந்து மகிழ்ந்து கூறியது**

தலைவன் பாணனை வாயிலாகக் கொண்டு தலைவியின் ஊடலைத் தணித்துப் புணர்ந்து மகிழ்ந்தான். அதனைக் கணிமேதாவியார்,

"கண்ணுங்கா லென்கொல் கலவையாழ்ப் பாண்மகளே
எண்ணுங்கால் மற்றின் றிவளொடுதே – ரெண்ணின
கடல் வட்டத் தில்லையால் கற்பெயர் சேராள்
அடல்வட்டத் தாருளரேல் ஆம்"[93]

எனக்கூறுவர். பல பண்களைப் பாடும் பாணனே! எனக்கு இன்பம் பல தருபவள் தலைவி. அவளுக்கு ஒப்பானவர் இவ்வுலகிலுமில்லை; விண்ணுலகிலுமில்லை எனத் தலைவியின் பெருமையினை முதன்மைப் படுத்துகிறான் தலைவன். தலைவியிடத்துத் தலைவன் கொண்டுள்ள ஆழ்ந்த காதலை இக்கருத்து வெளிப்படுத்துகிறது. சங்க இலக்கியத்தில் பாணனிடம் தலைவன் கூற்று நிகழ்த்தும் செய்தி உள்ளது.

பாணனே வருக! தலைவி புதல்வனை ஈன்று நெய்யாடிய போது அவளை அணுகினேன். புதல்வனை ஈன்றதனால் வேறு பெயர் பெற்று முதுபெண்டாகித் துயில்கின்றனையோ என்று வினவியபடி அவளது வயிற்றிடைக் குவளை மலர் கொண்டு ஒற்றினேன். அது கண்டு அவள் உவந்து மெல்ல நகைத்து நாணிக்கண் புதைத்தாள். அதைக்கூறி நகுவோடு மன்றான் தலைவன். அதனை,

“வாராய் பான நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூல் நம்குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கும் ஐயவித் திறள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து அவ்வரித்
திதலை அல்குல் முது பெண்டு ஆகித்
துஞ்சுதியோ மெல் அம்சில் ஓதி
பல்மாண் அகட்டில் குவளை ஒற்றி
உள்ளினென் உறையும் எற்உண்கு மெல்ல
முகை நான் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் கை புதைத் ததுவே”[94]

என்ற பாடல் மெய்ப்படுத்தும். தலைவன் தன் இன்ப, துன்ப உணர்வுகளைப் பாணனிடம் பகிர்ந்து கொண்டமையை இதனால் உணரமுடிகிறது.

**2. பிரியுமிடம்**

தலைவன் தலைவியை விடுத்து ஓதல், பகை, வேந்தற்குற்றுழி, தூது, காவல், பொருள் ஆகிய அதன் காரணமாகப் பிரிவான். இப்பிரிவுகளை மேற்கொள்ளும் போது அவன் பால் நிகழும் கூற்றுகளாகத் தொல்காப்பியர் பதினேழு என்பர். அவை இரண்டு நிலைகளில் அமைகின்றன. அவை,

1. ஓதல் முதலான ஐந்து பிரிவுகளுக்குள் அடங்குபவை

2. பொருள் வயிற் பிரிவிற்குள் அடங்குபவை

என்பனவாகும்.

**1. ஓதல் முதலான ஐந்து பிரிவுகளுக்குள் அடங்கும் கூற்றுக்கள்**

ஓதல், பகை, வேந்தற்குற்றுழி, தூது, காவல் ஆகிய ஐந்து பிரிவுகளுக்குள் அடங்கும் தலைவன் கூற்றுக்களாக,

1. வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு ஊதிய கருதிய ஒரு திறத்தானும்
2. புகழு மானமு மெருத்துவற் புறத்தலும்
3. மூன்றன் பகுதியும்
4. மண்டிலத் தருமையும்
5. தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
6. ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
7. தூதிடையிட்ட வகையினாலும்
8. காவற் பாங்கினால் நேர் பாங்கினும்

ஆகியன அமைகின்றன. அவற்றில் எந்தவொரு கூற்றிற்கும், கீழ்க்கணக்கு அக நூல்களில் பாடல்களில்லை.

**2. பொருள் வயற்பிரிவு**

தலைவன், தலைவியை விடுத்துப் பொருள்வயிற் பிரியும் போது நிகழ்த்தும் கூற்றுக்களைத் தொல்காப்பியர்,

2.1 பிரிவறிவுறுத்தல்

2.2 நெஞ்சிற்குக் கூறிச்செலவழுங்கல்

எனக் கூறுவர்.

**2.1 பிரிவறிவுறுத்தல்**

பிரிவறிவுறுத்தல் எனும் நிலையில் தொல்காப்பியர் மொழிவன இரண்டு கூற்றுக்கள். அவை,

1. "பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப் பிரிவின் நீக்கிய பகுதிக்கண்ணும்

2. உடன்சேறல் செய்கையோடு அன்னவை பிறவும் மேம்பட வந்த தோழிக் கண்ணும்"[95]

என்பனவாகும். இக்கூற்றுக்களுக்குரிய அகப்பாடல்கள் பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் இல்லை.

**2.2 நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல்**

நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல் பொருள்வயின் பிரிவின் போது நிகழும் ஏனைத்தூது, காவல், வேந்தற்குற்றுழி ஆகிய பிரிவுகள் வேந்தன் பொருட்டுப் பிரிபவை. அவற்றில் தலைவன் செலவழுங்கினான் என்று பாடுதல் அவனுடைய உரனுக்கும், பெருமைக்கும் இழுக்காகும். ஆதலின், செலவழுங்குக் கிளவிகள் பெரிதும் பொருள்வயிற் பிரிவில் அமையும். செலவழுங்கலில் தலைவன் மாட்டு நிகழும் கூற்றுக்களாகத் தொல்காப்பியர் மொழிவன,

2.2.1 "வேற்றுநாட் டகல்வயின் விழுமத்தானும்

2.2.2 நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்

2.2.3 சென்றுகையிகந்து பெயர்த் துள்ளய வழியும்

2.2.4 காமத்தின் வழியும்

2.2.5 கைவிடின் அச்சமும்

2.2.6 தலைவன் பிழைத்த நிலையின் கண்ணும்

*2.2.7* நாளது சின்னமயு மிளமைய தருமையுந் தாளாண் பக்கமுந்
தகுதிய அமைதியும் இன்னமயது இளிவு முடைமையது
உயர்ச்சியும் அன்பின அகலமு மகற்சிய தருமையும்
ஒன்றாய் பொருள்வயின் ஊக்கிய பாலினும்''[96]

ஆகிய ஏழுமாகும். இவற்றில் 'கைவிடின் அச்சமும்' எனும் கூற்றிற்கு மட்டும் கீழ்க்கணக்கு அகநூல்களில் நான்கு பாடல்கள் அமைந்துள்ளன.

### 2.2.5 கைவிடின் அச்சம்

தலைவியை விடுத்துத் தலைவன் பிரிதல் உண்டு. அக்காலங்களில் அவளது நிலை என்னாகுமோ? எனத் தலைவன் இரங்கி வருந்துவதாக நான்குப் பாடல்கள் உள. அவை "ஐந்திணை ஐம்பதில் இரண்டும்", "திணைமாலை நூற்றைம்பதில் இரண்டுமாக" அமைந்துள்ளன. அவை அனைத்தும் தலைவன் நெஞ்சிடம் கூற்று நிகழ்த்துவதாக அமைந்துள்ளன.

தலைவன் தலைவியை விடுத்துப் பொருள்வயிற் பிரிய எண்ணினான். அந்நிலையில் அவனது உள்ளம் பொருள் கருதியும், தலைவியின் நலன் கருதியும் இருநிலைப்பட்டது. இவ்விரு நிலைப்பட்ட நெஞ்சத்தை உளவியலாளர் 'கவைபடு நெஞ்சம்' என்பர் 'கவை' என்பதற்குப் 'பிளவு' என்று பொருள். எண்ணத்தால் தலைவனது உள்ளம் ஒரு நிலைப்பட்ட முடிவு எடுக்கவியலாது பிளவுபட்டிருக்கிறது. அவ்விரு எண்ணங்களில் தலைவி குறித்த சிந்தனையே மிகுந்துள்ளது. அதனை மாறன் பொறையனார்,

"மடவைகா ணன்னெஞ்சே மாண் பொருண் மாட்டோடப்
புடைபெயர் போழ்தந்தும் ஆற்றாள் – படர்கூர்நது
விம்மி வுயிர்க்கும் விளங்கிழையா ளாற்றுமோ
நம்மிற் பிரிநத இடத்து''[97]

எனக் கூறுவர். நாம் நம் தலைவியைத் தழுவிச் சிறிது விலகும் காலத்தும் பொறுக்கமாட்டாதவளாய்த் துன்பம் மிகுந்து ஏங்கிப் பெருமூச்சு விடுவாள்.

இந்நிலையில் அவளை விடுத்து பொருள் தேடிச் சென்றால் அவள் அப்பிரிவைப் பொறுப்பாளோ? பொறுக்கமாட்டாள். அதனை நீ அறியாதிருக்கிறாய் என நெஞ்சிடம் தலைவன் கூற்று நிகழ்த்துகிறான். தலைவிக்கு ஏதாவது துன்பம் நேர்ந்துவிடுமோ? என்ற அச்ச உணர்வே அவன் உள்ளத்தில் மேலிடுகிறது. அதனால் அவன் உள்ளம் போராட்டத்திற்குள்ளாகி செலவைத் தடுத்து விடுகிறது. அதனை 'ஆற்றாள்' என்ற சொல் புலப்படுத்தும். தலைவிமீது கொண்ட அன்பே அவனது செலவைத் தடுத்து நிறுத்தியது.

நல்ல உள்ளமே! இன்று இரவு தலைவியின் தோள்கள் துணையாய் இருக்க நன்றாகத் தங்கியிருக்கின்றாய் நாளை யாம் சிறு மலைகளுக்கு இடையே அரிய வழியில் துணை ஏதும் இல்லாமல் போய்த் தங்குமிடம் யாதோ? எனத் தலைவன் கூறுவதனை மாறன் பொறையனார்,

"இன்றல்க லீர்ம்படையு ளீர்ங்கோதை தோடுணையா
நன்கு வதிந்தனை நன்னெஞ்சே நாளை நான்
குன்றத ரத்தம் இறந்து தமியமாய்
என் கொலோ சேக்கு மாடம்"[98]

என விளக்குவர். நிகழ்கால இன்பத்தையும் எதிர்காலத் துன்பத்தையும் எண்ணுகிறது தலைவனது உள்ளம். இன்பத்திற்கும், துன்பத்திற்கும் இடையே நடக்கும் உள்ளப் போராட்டத்தை ஈண்டு காணமுடிகிறது. அவற்றில் எதுவென்றது என்பதற்கான குறிப்புப் பாடலில் இல்லை.

எனது பொருள்தேடும் முயற்சியினைத் தலைவியின் கண்ணொளியால் தடுக்க இயலுமா? எனத் தலைவன் இரங்குகிறான். அதனைக் கணிமேதாவியார்,

"சென்றக்கால் செல்லும்வாய் என்னோ இருஞ்சுரத்து
நின்றக்கா னீடி யொளிவிடா – நின்ற
விழைக்கமர்ந்த வேயோர் இளமுலையால் ஈடில்
குழைக்கமர்ந்த நோக்கின் குறிப்பு"[99]

என மொழிவர். இக்கருத்துடைய பாடல்கள் சங்க நூல்களில் பயின்று வந்துள்ளன.

### 3. வினைமுற்றி மீளல்

தலைவன் போர் காரணமாகத் தலைவியைப் பிரிந்து போர் முடிந்த நிலையில் மீண்டு வருவது வினைமுற்றி மீளல் எனப்படும். இச்சூழலில் தலைவன் கூற்று நிகழ்வதாகத் தொல்காப்பியர் மொழிவன.

**3.1** "பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்

**3.2** அருந்தொழில் முடிந்த செம்மற் காலை விருந்தொரு நல்லவை வேண்டற் கண்ணும்

**3.3** மீட்டுவர வாய்த்த வகையிற் கண்ணும்"[100]

என்பனவாகும். இதில் 'பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்' மீட்டுவர வர வாய்த்த வகையின் கண்ணும் எனும் கூற்றுகளுக்கு மட்டும் கீழ்க்கணக்கு அகநூல்களில் செய்யுள்கள் அமைந்துள்ளன.

### 3.1 பேரிசை ஊர்திப் பாங்கர் பாங்கினும்

வினைமுற்றி மீண்டு வரும் தலைவன் தேர்ப்பாகனோடு உரையாடுவது பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும் எனப்படும். அந்நிலையில் "ஐந்திணை ஐம்பதில் ஒரு செய்யுளும்"[101] "கார் நாற்பதில் நான்கு செய்யுளும் அமைந்துள்ளன."[102] அவற்றை,

**3.1.1** மேகமாய்ச் செல்க

**3.1.2** குறியுடைய காலம் செல்க

**3.1.3** நல்விருந்து பெற விரைக

**3.1.4** கற்புடையாளைக் காண

எனப்பகுத்து உணர்த்த வாய்ப்புண்டு.

### 3.1.1 மேகமாய்ச் செல்க

வினைமுற்றிய தலைமகன் பாகனிடம் பாகனே புகழை விரும்பும் செல்வரின் உள்ளத்தைப் போல கெடாத மகிழ்ச்சி கொண்ட வண்டுகள் காட்டில் பிடவத்தின் மீது நன்றாக இசைபாடும். அதனைக் கண்ணுற்ற தலைவன் பாகனிடம் மொழிவதை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"கடாஅவுக பாகதேர் காரோடக் கண்டே
கெடாஅய் புகழ்வேட்கைச் செல்வர் மனம்போல்
படாஅ மகிழ்வண்டு பாண்முரலும் கானம்
பிடாஅப் பெருந்தகை நன்கு"[103]

என உணர்த்துவர். பாகனே! உன் தேரினை நிறுத்திவிடாதே. அது மேகம் போல விரைந்து செல்லட்டுமென மொழிகின்றான். தலைவன் தலைவியை விரைந்து காணவேண்டும் என்ற உள்ள வேட்கை தலைவனிடம் இருந்ததாலே பாகனிடம் இக்கூற்று நிகழ்ந்தது. நீண்ட நாள் தலைவியைப் பிரிந்திருந்தவர்க்கு அவள்மீத ஏக்கம் வருதல் இயல்பு. அவ் ஏக்க உணர்வே ஈண்டு அவனது வேட்கை உணர்வைத் தூண்டியது. இக்கருத்தினை,

"புன்புறப் பேடை சேவல் இன்புரை
மன்னர் இயவரின் இரங்கும் காலம்
வல்லை நெடுந்தேர் கடலின்
அல்லல் அகுநோய் ஒழித்தல் எமக்கு எளிதே"[104]

என்ற சங்க இலக்கியப் படலுடன் ஒப்பிட்டு நோக்க வாய்ப்புண்டு.

### 3.1.2 குறியுடைய காலம் செல்க

கார்முந்துமுன் தேர்முந்தும் எனத் தலைவியிடம் தலைவன் கூறிப் பிரிந்தான். அக்கார்காலத்தின் வரவுணர்ந்த தலைவன் பாங்கனிடம் 'யான் தலைவியிடத்து கூறி வந்த காலம் வந்தது.' ஆகவே அக்குறித்த காலத்தே தலைவியைக் காணவேண்டுமெனக் கூறுவதே குறியுடைய காலம் செல்க

என்பதாகும். இதனைக் கார் நாற்பது தலைவன் கூற்றுப் பாடல்களில் காணமுடியும். அதனை, மதுரைக் கண்ணங்கூத்தனார்,

> "கார்ச்சேன் இகந்த கரைமருங்கின் நீர்ச்சேர்ந்து
> எருமை எழிலேறு எறிபவர்ச் சூடிச்
> செருமிகு மள்ளரில் செம்மாக்குஞ் செவ்வி
> திருநுதற்கு யாம்செய் குறி"[105]

என்ற பாடல் தெளிவுபடுத்தும். நீர்நிலை புகுந்த ஆண் எருமை ஆங்குள்ள கொடிகளைக் கொம்பில் சூடி போர் மறவர்போல நிற்கும் காலமே தலைவிக்கு நாம் கூறிய காலம். ஆதலின் தேரை விரைந்து செலுத்துக எனத் தலைவன் தேர்ப்பாகனிடம் உரைக்கிறான். தலைவனின் ஏக்க உணர்வே அவனது உள்ள வேட்கையை மிகுதிப்படுத்தியது. அவ்வேட்கை அன்பின் பொருட்டு அமைந்திலங்குகிறது என்பதை ஈண்டு அறியமுடிகிறது. இப்பொருண்மையில் கார் நாற்பதில் மதுரைக் கண்ணங்கூத்தனார்,

> "கடல்நீர் முகந்த கமஞ்சூல் எழிலி
> குடமலை யாகத்துக் கொள்ளப்பு இறைக்கும்
> இடமென ஆங்கே குறிசெய்தோம் பேதை
> மடாமொழி எவ்வங் கெட"[106]

என்ற பாடல் தெளிவுபடுத்தும். சங்க இலக்கியங்களில் முல்லைத் திணையிலேயே கார்கால வருணனை முதன்மைபெறுகிறது. அதில் தலைவியின் எழில் நலம், இயற்கையின் மலர்ச்சி, தலைவனின் ஏக்க உணர்வு ஆகியன இடம் பெறுகின்றன.

### 3.1.3 நல்விருந்து பெற விரைக

கார்காலத்தில் முல்லை மலர்கள் மலர்ந்து மணம்பரப்பி நிற்பதைக் கண்டான் தலைவன். உடனே தேர்ப்பாகனிடம் கார்காலத்தின் வரவை முன்னிலைப்படுத்துகிறான். சிறந்த செல்வத்தையும், மழைக்கண்களையும்

அளவான மொழிகளையுமுடைய தலைவியின் ஊர் இக்கார்காலத்தில் எமக்கு நல்விருந்து செய்யும். ஆகவே தேரை விரைந்து செலுத்துவாயாக என்கிறான். அதனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"சிரல்வாய் வனப்பின் ஆகி நிரலொப்ப
ஈர்ந்தன் தளவம் தகைந்தன – சீர்த்தக்க
செல்ல மழைமதர்கண் சின்மொழிப் பேதையூர்
நல் விருந்தாக நமக்கு"[107]

என்பர். இதில் தலைவனின் உள்ளத்து வேட்கையையும், உள்ளத் துடிப்பையும் காண முடிகிறது. தலைவி இனிமையாகப் பேசுபவள் அதனை 'சின்மொழிப்பேதை' என்ற தொடர் விளக்கும். தலைவன் அவள்பால் விரைந்து செல்லத் துடிப்பதற்குக் காரணம் தலைவியின் இனிமையான பேச்சேயாகும். இக்கருத்து "தெரிதீம் கிளவி தெருமரல் உயவே"[108] என்ற குறுந்தொகை கருத்துடன் ஒப்பு நோக்கற்பாலது. தலைவியின் உடலழகினால் தலைவன் ஈர்க்கப்படவில்லை. அவளது இனிய பேச்சுத்திறனிலே ஈர்க்கப்பட்டுள்ளான் என்பது கருத்து.

### 3.1.4 கற்புடையாளைக் காண

வினைமுடித்த தலைவன் பாகனிடம் கூறுவதை மாறன் பொறையனார்,

"நூனவின்ற பாகதேர் நொவ்விதாச் சென்றீக
தேனவின்ற கானத்து எழினோக்கித் – தானவின்ற
கற்புத்தான் வீழ்த்துக் கவுன்மிசைக் கையூன்றி
நிற்பாள் நிலையுணர்கம் யாம்"[109]

எனப் புலப்படுத்துவர். கார்காலத்தில் பெய்யும் மழைக் காண்பாருக்கு இனிமை பயப்பது போல என் வரவும் தலைவிக்கு இனிமை பயக்கும். இக்கருத்தினை மனத்திலிறுத்தியவாளாய்க் கற்புக்கடம் பூண்டு உயிரை நிறுத்தி வாழும்

தலைவியைக் காணத் தேரை விரைந்து செலுத்துவாயாக எனப் பாகனிடம் தலைவன் கூறுகிறான். தலைவனிடத்துத் தலைவிக்குள்ள ஆழ்ந்த நம்பிக்கையையும், தலைவியிடத்துத் தலைவனுக்குள்ள ஆழ்ந்த நம்பிக்கையையும் இக்கருத்துப் புலப்படுத்துகிறது. கணவன், மனைவி இருவரும் தங்கள் இல்லற வாழ்வில் புரிதல் உணர்வுடன் செயல்பட வேண்டும். ஒருவர் மேல் ஒருவர் நம்பிக்கை கொண்டு நடத்தல் வேண்டும். அவ்விதம் செயல்பட்டால் அவர்களது வாழ்க்கை இனிமையாகும் என்ற கருத்து ஈண்டு உணர்த்தப்பட்டுள்ளது. இத்தலைவியின் உயரிய பண்பினை,

"முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே"[110]

என்ற நற்றிணைத் தலைவியின் பண்புடன் ஒப்புநோக்கற்பாலது.

### 3.3 மீட்டுவர வாய்த்த வகையின் கண்ணும்

இக்கூற்று இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் அமைந்துளது. தலைவியைப் பிரிந்து சுரத்திடையே தலைவன் செல்லும் போது அவளது நினைவு வர வருத்தம் மிகுந்த நிலையில் மீண்டு வருதலைக் கருதுமிடத்தும், தலைவன் பேசும் சூழல் இடைச்சுரத்து அழுங்களாகும். இச்சூழலில் தலைவன் பேசுவதற்குரிய கூற்றும் வினைமுற்றி மீண்டு வருங்கால் தலைவன் நெஞ்சொடு வருந்திக் கூறுவதற்கும் இடம் தந்து நிற்கும் கூற்று மீட்டுவர வாய்த்த வகையின் கண்ணும் என்பதாகும்.

வினைமுற்றித் தலைவன் மீண்ட நிலையில் நெஞ்சொடு வருந்துவதற்குத் திணைமாலை நூற்றைம்பதிலும், கார்நாற்பதிலும் பாடல்கள் அமைந்துள்ளன. அவை அனைத்தும் தலைவன் தன் நெஞ்சிடம் கூற்று நிகழ்த்துவதாக உள்ளன. அவற்றை,

*3.3.1* வினைமுடிவும் கார்கால வரவும்

*3.3.2* பேதைப் பெருமடம் உரைத்தல்

*3.3.3* தலைவன் மனதில் தலைவியின் உருவெளி

எனப்பகுத்து உணர்த்த முடியும்.

### 3.3.1 வினைமுடிவும் கார்கால வரவும்

தலைவன் தான் மேற்கொண்ட வினை முடித்தான். அந்நிலையில் தன் உள்ளத்திடம் உரைப்பதை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

“எல்லா வினையும் இடப்ப எழுநெஞ்சே
கல்லோங்கு கானம் களிற்றின் மதநாறும்
பல்லிருங் கூந்தல் பணி நோனாள் கார்வானம்
மெல்லவும் தோன்றும் பெயல்”[111]

என விளக்குவர்.

மலைகளிலும், காடுகளிலும் யானையின் மத நாற்றம் வீசும்; கரிய வானத்தில் மழை மெல்லத்தோன்றும்; அதனால் தலைவி துயர் மிகப் பெறுவாள்; தன் உள்ளத்தை ஆற்றியிருக்கும் செயலினைக் கைவிடக்கூடும். ஆகவே மனமே விரைந்து அவள்பால் செல்லுதற்கு முற்படுவாயாக எனத் தலைவன் தன் உள்ளத்திடம் கூறுகிறான். கார்முந்துமுன், தேர்முந்துமுன் எனக்கூறிப் பிரிந்தான் தலைவன். அக்கார்காலம் வந்தது. அதன் வரவை தலைவி கண்ணுற்றாள். ஆகவே, அவள் வருத்தமெய்துமுன் அவ்விடம் தாம் விரைய வேண்டுமெனத் தலைவன் எண்ணுகிறான். தலைவியைத் துன்பப்படுத்தக் கூடாது எனத் தலைவனின் உள்ளம் விரும்புவதை ஈண்டு உணரமுடிகிறது.

சோலைகள் மலர்ந்தன; காட்டில் வண்டுகள் இசைப்பாட்டைப் பாடின; மேகங்கள் எல்லா திக்குகளிலும் பரந்தன. அதனால் காடுகள் குளிர்ச்சி உடையனவாயின. ஆகவே நலம் தலைவியிடத்துத் திரும்பச் செல்வோம் என்பதனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"பொங்கும் ஞாங்கர் மலர்ந்தன தங்காத்

தகைவண்டு பாண்முரலும் கானம் – பகை கொணடல்

எவ்வெத்திசைகளும் வந்தன்று சேறுநாம்

செவ்வி யுடைய சுரம்"[112]

என்பர். கார்காலத்தின் வரவை தலைவன் ஈண்டு தன் நெஞ்சிடம் மொழிகின்றான். தலைவனது மனம் தலைவியது துயர் நீக்கவும் அவளிடத்து இன்பம் எய்தவும் விளைவதனை ஈண்டு உணரமுடிகிறது. வினைமுற்றிய தலைவன் தன் மனத்திடம், மொழிவதை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"இமிழிசை வானம் முழங்கக் குமிழின்பூப்

பொன்செய் குழையின் துணர்தூங்கத் தண்பதஞ்

செவ்வியுடைய சுரநெஞ்சே காதலியூர்

கவ்வை யழுங்கச் செலற்கு"[113]

என மொழிவர். கார்காலத்தில் மேகம் முழங்கியது. குமிழ மலர்கள் குழைபோல் தொங்கியது; காடுகள் நல்ல பதமும் செவ்வியும் கொண்டன. அதனால் தலைவியின் இருப்பிடம் நோக்கி விரைந்து செல்வோமெனத் தலைவன் தன் நெஞ்சிடம் மொழிகிறான். கார்காலத்தின் வரவே, வினை முடித்த தலைவனின் உள்ள வேட்கையைத் தலைவிபால் தூண்டியது. இத்தூண்டல் உணர்வே இல்லற வாழ்வின் செம்மைக்கு வழிவகுக்கும் என்பது கருத்து.

### 3.3.2 பேதைப் பெருமடம் உரைத்தல்

நெஞ்சமே! காற்றானது காதலியின் மடப்பத்தை நமக்கு அறிவித்தது. ஆகவே, தலைவி வரைந்துள்ள இடம் நோக்கி விரைந்து எழுவோமெனத் தலைவன் நெஞ்சை நோக்கி கூறுவதனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"வரைமல்க வானம் சிறப்ப உறைபோழ்ந்து

இருநிலம் தீம்பெயல் தாழ – விரை நாற

ஊதை உளரும் நறுந்தன்கா பேதை

மெருமடம் நம்மாட்டு உரைத்து"[114]

என்பர். தலைவியின் துயரினை நீக்கித் தலைவனது உள்ளம் வேட்கையுறுவதையும், தலைவன் தலைவியிடத்துக் கொண்டுள்ள அன்பின் மேன்மையையும் இக்கருத்து உணர்த்துகிறது.

### 3.3.3 தலைவன் மனதில் தலைவியின் உருவொளி

வினைமேற்கொண்டு தலைவியைப் பிரிந்து சென்றான் தலைவன். அங்கு வினை முடிந்த பின் தலைமகளை நினைத்தான். அவளது தோற்றம் அவன் மனத்திரையில் தோன்றியது. அத்தோற்றத்தை நோக்கித் தலைவன் கூறுவதைக் கணிமேதாவியார்,

"வந்தாற்றான் செல்லாமோ ஆரிடையாய் வார்கதிரால்
வெந்தாற் போற்றோன்று நீள் வேயத்தந் – தந்தார்
தகரக் குழல் புரளத் தாழ்துகில்கை ஏந்தி
மகரக் குழைமறித்த நோக்கு"[115]

என உணர்த்துவர். உடுக்குப் போன்ற குறுக்கு உடையவளே! மயிற்சாந்துடைய கூந்தல் அவிழ்ந்து தொங்க மகரமீன் போல் காதணியுடன் காட்சி தருபவள் தலைவி. அவள் எதிரில் வந்தால் நீளமான மூங்கில்கள் நிரம்பிய இப்பாலை வழியில் உன்னிடம் செலவைக் கழிப்பேன் என தன் முன் தோன்ற தலைவியின் அழகினை வியக்கிறான்.

### தொகுப்புரை

அகத்திணை மாந்தருள் சிறப்பிற்குரியவன் தலைவன் ஆவான். அவன் கூற்றுகளாகப் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் முப்பத்தொன்பது பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் களவுப் பாடல்கள் இருபதும், கற்பு பாடல்கள் பத்தொன்பதும் அடங்கும்.

களவுப் பாடல்கள் பாங்கற்கூட்டம், பாங்கிமதி உடன்பாடு, சேட்படை, இருவகைக்குறி, உடன்போக்கு ஆகிய பகுப்புகளில் அமைந்து

காணப்பெறுகின்றன.

தலைவன் கூற்றில் அமைந்த பாங்கற்கூட்டப் பாடல்கள் தொல்காப்பியர் குறிப்பிடும் நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும் எனவரும் தொல்காப்பிய கூற்றொடு பொருத்திக் காட்டப் பெற்றுள்ளது. தலைவன் பாங்கனிடம் மொழியும் தன்மை, தலைவியின் இயல்பு, எளியோரைத் தன்வயப்படுத்தியவன், வருத்தும் தெய்வம், மனம் தளர்ந்த வருத்தம், உள்ளத்தை இடமாகக் கொண்டவன் ஆகிய தலைப்புகளில் தலைவன் கூற்றுப் பாடல்கள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன.

ஊரும், பேரும், கெடுதியும் என வரும் கூற்றிற்குத் 'தோழி குறையவட் சார்த்தி மெய்யுரக் கூறலும்' எனவரும் பாங்கிமதி உடன்பாட்டுக்குரிய கூற்றுகளுக்கு மட்டும் கீழ்க்கணக்கு நூல்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. இதற்கு ஒப்பான எட்டுத்தொகைப் பாடல்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

தலைவன் கூற்றில் அமைந்த சேட்படைப் பாடல் தொல்காப்பியர் கூறும் ஏழு கூற்றுகளுக்கு அமையவில்லை என்பதையும், தோழி நோக்கி மடன்மா கூறும் இடனுமாருண்டே எனும் கூற்றிற்கு மட்டும் ஒரு பாடல் அமைந்த தன்மையும் ஆய்வில் சுட்டப்பெற்றுள்ளது.

உடன்போக்குக் குறித்த தலைவன் கூற்று இரண்டு பாடல்கள் தொல்காப்பியர் மொழியும் 'சுரத்தும்' எனும் கூற்றில் வைத்து விளக்கப்பட்டுள்ளது. இவ்வுடன்போக்குப் பாடல்களுக்கு ஒப்புமையுடைய எட்டுத்தொகைப் பாடல்கள் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளன.

இருவகைக் குறியில் அமைந்த மூன்று கீழ்க்கணக்குப் பாடல்கள் 'பரிவுற்று மெலியினும்' எனும் தொல்காப்பியர் கூற்றொடு ஒப்பிடப்பெற்றுள்ளது. அதற்கு இணையான சங்கப்பாக்களும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

கீழ்க்கணக்கு அகநூல்களில் அமைந்த தலைவன் கூற்றுக் கற்புப் பாடல்கள் பரத்தையற்பிரிவு, இடைச்சுரத்து அழுங்கல், வினைமுற்றி மீளல் ஆகிய பகுப்புகளில் அமைந்திருப்பது ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் குறிப்பிடும் பரத்தையர் பிரிவிற்குரிய ஐந்து கூற்றுகளுள் ஏனைய வாயில் எதிரொடு என்னும் கூற்றிற்கு மட்டும் ஐந்து செய்யுட்கள் தலைவன் கூற்றில் அமைந்துள்ளமை ஆய்வில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

ஓதல், பகை, தூது, வேந்தற்குற்றுழி, காவல் ஆகிய ஐந்து பிரிவுகளுக்குரிய பாடல்கள் கீழ்க்கணக்கு அகநூல்களில் காணப்பெறவில்லை.

பொருள்வயிற் பிரிவின் ஒரு வகையான பிரிவறிவுறுத்தலுக்கும் கீழ்க்கணக்கு அகநூல்களில் இலக்கியச்சான்று இல்லை என்பது ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

நெஞ்சிற்குக் கூறி செலவழுங்கல் எனும் துறையில் வரும் நான்கு தலைவன் கூற்றுப் பாடல்கள் 'கைவிடின் அச்சம்' எனும் தொல்காப்பிய கூற்றிற்கு உரியது என ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது. அத்துடன் எட்டுத்தொகை இலக்கியங்கள் பொருத்திக் காட்டப்பட்டுள்ளன.

தலைவன் வினைமுற்றி மீண்டு வருவதாக அமைந்த பாடல்களின் எண்ணிக்கை பத்து. அவை தொல்காப்பியர் குறிப்பிடும் பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும், மீட்டுவர வாய்த்த வகையிற் கண்ணும் என வரும் தொல்காப்பிய கூற்றிற்குப் பொருத்திக் காட்டி எட்டுத்தொகைப் பாடல்களும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

மாறன் பொறையனார், கண்ணன் சேந்தனார், கணிமேதாவியார், மதுரைக் கண்ணங்கூத்தனார் ஆகிய நால்வர் மட்டுமே தலைவன் கூற்றுப் பாடல்களை இயற்றயுள்ளனர். அவர்களுள் தலைவன் கூற்றுக்

களவுப் பாடல்களை கணிமேதாவியாரும் (ஆறு பாடல்கள்), கற்புப் பாடல்களை மதுரைக் கண்ணங்கூத்தனாரும் (ஐந்து பாடல்கள்) மிகுதியாகப் பாடியுள்ளனர்.

தலைவன் ஆற்றாமை மீதுரக் கூறியதாக அமைந்த களவுத் துறைக்குறிப்புப் பாடல்களே தலைவன் கூற்றில் மிகுதியாக (ஆறு பாடல்கள்) இடம்பெற்றுள்ளன.

தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாக அமைந்த கற்புத் துறைப் பாடல்களே தலைவன் கூற்றில் மேன்மையுற்று (ஐந்து பாடல்கள்) விளங்குகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. ஐந்திணை ஐம்பது. 27
2. தி.மா.நூற். 1, 4, 8, 9, 16, 17, 19, 22, 23, 24, 30, 32, 33, 42, 60, 70, 81
3. தி.ஐம். 16, 49
4. தொல். பொருள். களவு. 29
5. மேலது, 32
6. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள். களவு. உரைவளம், ப.240
7. தொல், பொருள், களவு. 13
8. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள், களவு உரைவளம், ப.90
9. தொல், பொருள், செய்யுளியல். 487:2
10. தொல். பொருள். களவு. 10:8
11. மேலது, 10:9
12. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள். களவு. உரைவளம், ப.60
13. மேலது, ப.72
14. தி.மா.நூற். 60
15. தி.மா. நூற். 32
16. ஐந். ஐம். 47:4
17. தி.மா. நூற். 19
18. மேலது, 9
19. மேலது, 30
20. தி.மொ. ஐம். 49, 4

21. நற்.160, 185, 201. குறுந்.58, 72, 95, 100, 119, 129, 132, 136, 156, 184, 206, 272, 280, 286, 291, ஐங்.172, 174, 191, 255. அகம்.130, 140, 390
22. அகம்.130
23. குறுந்.72
24. மேலது, 132
25. நற்.201
26. குறுந்.94
27. மேலது, 119
28. மேலது, 129
29. நற்.160
30. மேலது, 185
31. குறுந்.58
32. மேலது, 136
33. மேலது, 206
34. ஐங்.255
35. மேலது, 191
36. மேலது, 172
37. குறுந்.156
38. மேலது, 272
39. மேலது, 286
40. குறுந்.280
41. தொல். பொருள். பேராசிரியர் உரை, 49
42. இறை, சூத்.5, உரை. ப.64
43. தொல், பொருள், களவு, 10 : 11–13 : 10, 14

44. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள், களவு, உரைவளம் 74

45. தி.மா. நூற். 1

46. தி.மா. நூற். 8

47. நற். 213

48. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள். களவு. உரைவளம், ப.74

49. மேலது, ப.74

50. தி.மா. நூற்றை.17, 19, 23, 24, 42

51. மேலது, 16

52. மேலது, 19

53. மேலது, 24

54. மேலது, 42

55. குறுந்.276

56. ஐங்.176

57. மேலது, 178

58. ந.சுப்புரெட்டியார், அகத்தினை கொள்கைகள், ப.104

59. தொல். பொருள். களவு. 12 : 1–13

60. மேலது, 12

61. தொல். பொருள். 42:2

62. மேலது, 43:8–9

63. மேலது, 44:2–4

64. மேலது, 113:8–9

65. நற்.12

66. அகம்.383

67. தொல். 987

68. கலித்.8

69. தி.மொ.ஐம். 16

70. தி.மா.நூற். 70

71. மேலது, 70

72. தி.மொ.ஐம்.16

73. நற்.76:3–5, நற்.9:10–12

74. நற்.264:2–4

75. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள். களவு. உரைவளம், பக்.85–86

76. தி.மா.நூற்.4

77. மேலது, 81

78. மேலது, 22

79. ஐந்.ஐம். 10, 39, 40

80. தி.மா.நூற். 68, 70, 77, 117, 141, 150

81. கார்.நாற். 24, 48, 29, 30–33, 36

82. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.26:4

83. உ.வே.சாமிநாத ஐயர், குறுந்தொகை நூலாராய்ச்சி, ப.73

84. தொல். பொருள். இளம்பூரணர், 145:28

85. மேலது, 148:6

86. மேலது, 148:14

87. மேலது, 145:15

88. மேலது, 148:8

89. தொல். பொருள். அகத். 44, 22

90. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், பொருள். கற்பு. உரைவளம், ப.32

91. மேலது, ப.57

92. தி.மா.நூற். 141

93. மேலது, 150

94. நற். 370

95. தொல். பொருள். களவு. 5:37, 43

96. மேலது, 5–8, 38, 43. அகத்.44:7–10

97. ஐந்.ஐம். 39

98. மேலது, 40

99. தி.மா.நூற்.68

100. தொல், பொருள், களவு. 5, 49, 54, 55 : 45

101. ஐந்.ஐம். 10

102. கார்.நாற். 31–33, 36

103. மேலது, 32

104. ஐங். 425

105. கார்.நாற். 31

106. மேலது, 33

107. மேலது, 36

108. குறுந். 250

109. ஐந்.ஐம்.10

110. நற்.142 : 10–11

111. கார்.நாற்.24

112. மேலது, 20

113. மேலது, 28

114. மேலது, 30

115. தி.மா.நூற். 77

## தலைவி கூற்றுப் பாடற்திறன்

இலக்கியங்கள் அவ்வக்காலச் சமுதாயத்தைப் பண்பாட்டு (Social Culture) நிலைகளைப் பிரதிபலிப்பன. இவை சமுதாயத்தின் இயல்புப் போக்கிற்குத் தக உருப்பெற்று காலப்போக்கிற்குத்தக மாறுபடுகின்றன. இத்தன்மையுடைய இலக்கிய வகைப்பாட்டுள் சங்க இலக்கியங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. அவை அக இலக்கியம், புற இலக்கியம் எனப் பாடுபொருள் அடிப்படையில் பகுக்கப்பட்டுள்ளன. அவ்வகைப்பாட்டுள் அக இலக்கியம் மேன்மையுடையது. அதன்கண் உணர்ச்சி வெளிப்படுகிறது. இக்கருத்தை "உணர்ச்சி அனுபவமே உரிப்பொருள்"[1] என்ற மு.வரதராசனாரின் கருத்து மெய்ப்பிக்கும். இவ்வுணர்ச்சியைச் சங்கப்புலவோர், கூற்றாளர்களின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளனர். அக்கூற்றாளர்களில் தலைவியும் ஒருத்தியாவாள். அகத்திணை தலைவி மாசுமறுவற்ற ஓர் அற்புதப்படைப்பு, இவளைக் குறை கூறுவதாக அமைந்த ஒரு பாடலையேனும் சங்க இலக்கியத்துள் காண்பது அரிது. இவள் ஒரு குறிக்கோள் மகளாகவே படைக்கப் பெற்றிருக்கின்றாள். இல்லத்தில் சொல்லுரிமை உடையவள் இவள் என்பதைத் தொல்காப்பியர் "அஞ்சவந்த உரிமை"[2] எனக் கூறுவதன் மூலம் உணரமுடியும்.

இலக்கணம் மீறா இலக்கியத் தலைவியின் கூற்றுக்கள் உண்மை வாழ்விலும் நிகழக்கூடியவை. கற்பனைத் தலைவியை உண்மையான பாத்திரமாகக் கொண்டு அவளது வாய்மொழி மூலம் வெளிப்படலாகும். அவளது பண்புகளை உளவியல் நோக்குடன் காணலாம். அவ்வகையில் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் சிறப்பிக்கப்பெறும் தலைவியின் களவு, கற்புப் பாக்களின் திறனை ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

### பாக்களின் எண்ணிக்கை

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களுள் தலைவி கூற்றாக அமைந்த பாக்களின் எண்ணிக்கை "நூற்று அறுபத்தொன்பதாகும்."[3] அவை முறையே,

| | | |
|---|---|---|
| ஐந்திணை ஐம்பதில் | – | 19 |
| திணைமொழி ஐம்பது | – | 17 |
| ஐந்திணை எழுபது | – | 43 |
| திணைமாலை நூற்றைம்பது | – | 57 |
| கைந்நிலை | – | 33 |
| மொத்தம் | – | 169 |

என அமைந்துள. அப்பாடல்களில் தலைவிக் கூற்றைக் கேட்பவர்களாகத் தோழி, பாணன் போன்றோர் அமைகின்றனர். அவை களவில் முப்பத்தொன்பதும், கற்பில் நூற்று முப்பதாகவும் அமைந்துள. அவற்றைத் திணை அடிப்படையில் பகுத்துணர முடியும்.

தலைவி கூற்றில் களவுத்திணைப் பாடல்களாக அமைந்துள்ள "முப்பத்தொன்பது"[4] பாடல்களின் பொருண்மைகளை,

1. அறத்தொடு நிற்றல்
2. காமம் மிக்க கழிபடர் களவி
3. வரைவு வேட்கை

எனப்பகுத்து விளக்க முடியும்.

**1. அறத்தொடு நிற்றல்**

தலைவியை மணந்துகொள்ளும் பொருட்டுத் தலைவனைத் தோழி அறிவுறுத்துவாள். இதனை மனம் கொள்ளாமல் களவுநெறியில் ஈடுபடுதலையே தலைவன் விருப்பம் உடையானாயின், தோழி அவனைக் கடிந்து பிறகு அறத்தொடு நிற்பாள். தலைவியின் ஆற்றாமையைக் கண்டு உள்ளம் பொறுக்காதும் அவள் அறத்தொடு நிற்பாள் "அறம் என்பது"[5] 'முறை' 'தக்கது' எனப் பொருள் சொல்லி நிற்றல். பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு. கற்பின் தலை நிற்றல் "கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவு ஒழுக்கத்தைப்

பெற்றோர்க்கு வெளிப்படுத்தலை அறத்தொடு நிற்றல் எனலாம்”[6] என்பார் வ.சுப.மாணிக்கம். களவு கற்பாக மாறுவதற்கு அடிகோலுவது அறத்தொடு நிற்றல் ஆகும்.

**தொல்காப்பியம்**

அறத்தொடு நிற்றல் பற்றித் தொல்காப்பியர்,

“முன்னிலை அறன் எனப்படுதல் என்று இருவகைப்
புரைதீர் கிறவி தாயிடைப் புகுப்பினும்”[7]

எனக் கூறுவர். அறத்தொடு நிற்றலை “குற்றம் தீர்ந்த அறச்செய்கை” என்கிறார் அவர்.

**அறத்தொடு நிற்கும் முறை**

அறத்தொடு நிற்பதற்கான காரணங்களைப் பற்றி இறையனாரகப் பொருள்,

“காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்
வரைவெதில் கொள்ளாது தமரவண் மறுப்பினும்
அவனூறு அஞ்சுங் காலம் ஆயினும்
அந்நாலிடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே”[8]

என உரைக்கின்றது. தலைவியின் களவொழுக்கத்தைக் குறிப்பால் அறிந்த பெற்றோர்கள் அவளை இற்செறிக்கும்போதும், பிறர் தலைவியை மணம் பேச வரும் போதும், தலைவியைப் பெற்றோர் ஏதோ போர்க் காரணம் கருதி மணத்தை மறுக்கிற போதும், தலைவன் இரவில் தலைவியைச் சந்திக்க வரும்போதும், விலங்கினங்களால் வரும் துன்பத்தை நினைத்துத்

தலைவி வருந்தும் போதும் தோழி அறத்தொடு நிற்பாள் என இறையனார் களவியல் கூறுகிறது.

அகப்பொருள் இலக்கணங்களில் அறத்தொடு நிற்கும் முறையை முதன்முதலில் உரைத்திருக்கும் நூல் நம்பியகப்பொருளாகும். அதனை,

"தலைவி பங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு
நிற்கும் என்ப நெறியுணர்ந் தோரே"[9]

என்ற பகுதி விளக்கும். நாற்கவிராசநம்பி அறத்தொடு நிற்கும் நெறியையும், அறத்தொடு நிற்பவர்களையும் எடுத்துரைத்துள்ளார்.

**தலைவி அறத்தொடு நிற்றல்**

தலைவி அறத்தொடு நிற்கும் நிலைகளைப் பின்வரும் நூற்பாவில் நாற்கவிராசநம்பி சுட்டியுள்ளார். அதனை,

"கையறுதோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலும் தலைவன்
தெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
எய்த கூறலும் இகந்தமை இயம்பலும்
இயற்பழித் துரைத்துழி இயற்பட மொழிதலும்
தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றலும்
இல்வயிற் செறிந்தமை சொல்லும் செவிலி
கனையிருள் அவன்வரக் கண்டமை கூறலும்
எனமுறை இயம்பிய ஏழும் புனையிழைத்
தலைவி அறத்தொடு நிலைதனக் குரிய"[10]

என்ற பகுதி விளக்கும். தோழி அறத்தொடு நிற்றலுக்கான சூழல்களையும் (நூ.177), செவிலி அறத்தொடு நிற்றலுக்குரிய சூழல்களையும் (நூ.178) நாற்கவிராசநம்பி விரிவாக எடுத்துரைத்துள்ளார். இது நம்பியகப்பொருள் சுட்டும் அகப்பொருள் வளர்நிலையாகும். சங்க அகப்பாடற் சூழல்களை அடியொற்றி நாற்கவிராசநம்பி இலக்கணம் வகுக்கும் நெறியுள்ளவர் என்பதை இதன்வழி அறியமுடிகிறது.

தலைவிக்குத் தோழியிடம் அறத்தொடு நிற்கும் விருப்பை இச்செறிப்பு, வெறியாட்டு, வேற்று வரைவு முதலிய கொடுமைகள் தரும். அந்நிலையில், தலைவி தோழியிடம் நீ செவிலிக்கு அறத்தொடு நிற்க வேண்டுமென உரைப்பாள். அதனைத் தொல்காப்பியர் ,

“உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்”[11]

என்பர். அதற்குரிய விளக்கத்தினை இளம்பூரணர் “ஒன்று களவினைத் தோழிக்குச் சொல்லுக எனத் தலைவன் தலைவிக்குச் சொல்லிய நிலையிலும், மற்றொன்று தலைவியின் வருத்தத்தைத் தலைவனுக்கு உரையெனத் தோழிக்கு உரைத்த நிலையிலும்”[12] எனக்கூறுவர்.

நச்சினார்க்கினியர் அதனை நொதுமலர் வரைவிற்கு மணமுறிவு இயம்பிய வழியானும் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக்கூறி அதனைத் தமரறியக்கூறல் வேண்டுமென்று தலைவனுக்கு நம் வருத்தம் அறியக்கூறல் வேண்டுமென்றுங் கூறுதற்கண்ணும் எனக்கூறுவர்.

ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் தலைவி அறத்தொடு நிற்கும் நிலையை விளக்கும் வகையில் இரண்டு பாடல்கள் உள”[14]. அவை தலைவியின் உடல் மெலிவு, நிறவேறுபாடு கண்டு வெறியாட்டெடுக்கும் நிலையினை எடுத்தியம்புகின்றன. அதனை மாறன் பொறையனார்,

“வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்டது
அறியாண்மற் றன்னோ அணங்கிணங்கிற்று என்று

மறியீர்த் துதிரந்தூய் வேலன் தரீஇ

வெறியோ டலம்வரும் யாய்”[14]

என நவில்வர். தலைவி, தலைவனுடன் களவிற் சென்று பழகினாள். அது அறிந்த இல்லத்தார் அவளை இற்செறித்தனர். அதனால், அவள் உடலில் பசலை பரவி மேனியின் நிறம் மாறுபட்டது. அம்மாறுபாடு உணர்ந்த தலைவியின் தாயானவள் அவளை முருகனிடம் அழைத்துச்சென்றாள். முருகனுக்குப் பூசை செய்து வழிபாடும் நிகழ்த்தினாள். அது கண்ட தலைவி தன் மேனி வேறுபாடடைந்த உண்மைக் காரணத்தைத் தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைகிறது. அதே கருத்தை மூவாதியார்,

“வார்குர லேனல் வளைவாய்க் கிளைகவரும்

நீராற் றெளிதிகழ் கானாடன கேண்மையே

ஆர்வத்தி னார முயங்கினேன் வேலனும்

ஈர வலித்தான மறி”[15]

எனக் கூறுவர். தினைப்புனம் காக்கும் பொருட்டு மலைநாடனின் நட்பு ஒன்றையே காதலுடன் மிகுதியும் மேற்கொண்டேன். அதனால், என்மேனியில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. இது தெய்வத்தால் உண்டானது என எண்ணி வேலைக் கைக்கொண்டு முருகனுக்குப் பலியாய்த் தந்து வெறியாடத் துணிந்துவிட்டாள். ஆகவே, தோழி நீ உண்மையைச் சொல்லி தடுத்து நிறுத்துவாயாக எனத் தலைவி தோழியிடம் உரைப்பது புலனாகிறது.

**2. காமம் மிக்க கழிபடர்க்கிளவி**

தலைவன் ஒரு வழித்தணத்தால் தொடர்ந்த நிலையில் தலைவனைக் காணப்பெறாத தலைவி காம நோய் உளம் நிறைந்து வருந்த, அத்துன்பத்தை வாய்விட்டுப் புலம்பினால் குறையும் என்று எண்ணித் தோழிக்கும், தன் நெஞ்சிற்கும், கண்ணெதிரே உள்ள பொருட்களை

நோக்கியும் கூறுவது காமம் மிக்க கழிபடர் கிளவியாகும். அதனைத் தொல்காப்பியர் "காமம் சிறப்பினும்"[16] 'பாற்கிழவி' என்றும் கூறுவர்.

தலைவன் பிரிவினால் தலைவியிடத்துக் கூற்று நிகழும். அதற்கு இளம்பூரணர் தலைமகன் மாட்டு வேட்கை மிகினும் தன் வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தமையும் உரைக்கும் தலைவி என்றவாறு எனக்கூறுவர். ஆயினும் நச்சினார்க்கினியர் "தலைவி காமஞ்சிறந்து தோன்றினும் என மறுகிய நிலையில் மொழிவர்.

காமம்மிக்க கழிபடர் கிளவி எனும் துறையில் ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் "ஏழு பாடல்கள் அமைந்துள்ளன"[17] நண்டு, நெஞ்சம், புறா, கடல், நாரை ஆகியவற்றிடம் தலைவி காமம் சிறந்த நிலையில் கூற்று நிகழ்த்துவதாக உள்ளன. அவற்றை,

1. அஃறிணைப் பொருளிடத்துக் கூற்று நிகழ்த்துதல்
2. நெஞ்சொடு கிளத்தல்

எனும் இருநிலையாகப் பாகுபடுத்தி விளக்க முடியும்.

நெய்தல் நிலத் தலைவன், தன்னைப் பிரிந்து நெய்தல் நிலத்து வழியாக விரைந்து தன் தேரை ஓட்டிச் சென்றான். அதனால், மனம் வருந்திய யான், அவன் சென்ற தேரினது சக்கரம் ஏற்படுத்திய வழிச்சுவட்டைக் கண்டு ஆறுதலடைகிறேன். ஆகவே, அவ்வழிச் சுவட்டை அழித்துவிடாதே எனத் தலைவி நண்டிடம் கூற்று நிகழ்த்துகிறாள். அதனை மாறன்பொறையனார்,

"கொடுத்தா அலவ குறையாம் இரப்போம்
ஒடுங்கா ஒலிகடற் சேர்ப்பன் – நெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ"[18]

என மொழிவர். இச்செய்திக்கு முன்மாதிரியாக அகநானூற்றில்,

“பறைஇ தளரும் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமெனல் அலவ பல்கால்
கைதைஅம் படுசினை அவ்வமொடு அசாஅம்
வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து
நின்உறு விழுமம் களைந்தோள்
தன்உறு விழுமம் நீந்துமோ எனவே”[19]

என்ற செய்தி அமைந்துள்ளது. இதன் தாக்கமே ஐந்திணை ஐம்பதில் பிரதிபலித்துள்ளது. இவ்விரு பாடல்களும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

**தலைவி நெஞ்சை நோக்கிக்கூறல்**

தலைவனது மார்பை மாலைகள் அழகு செய்தன. அத்தன்மையுடைய அவனது மார்பினை யான் பெற விரும்புகிறேன். அது நமக்கு கிடைக்குமோ? என்பதை மலைக்குன்றின் மேலேறி கூடலிழைத்து உறுதி செய்வோம் ‘வா’ என நெஞ்சினை அழைக்கிறாள் தலைவி. அதனை மாறன் பொறையனார்,

“பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மேல் ஏறித் தெரிப்புறத்
தாழ்கடற் றண்சேர்ப்பன் றாரகல நல்குமேல்
ஆழியாற் காணாமோ யாம்”[20]

என உணர்த்துவர். தலைவியின் உள்ளம் தலைவனைப் பெற அவாவுகிறது. அவன் கிடைப்பானா? கிடைக்கமாட்டானா? எனஅவளது உள்ளம் போராட்ட நிலைக்குள்ளாகிறது. அதனைச் சரி செய்யவே அவன் மலைக்குன்று சென்று கூடலிழைக்க விரும்புவதும் இதனால் புலனாகிறது.

**கூடல் இழைத்தல் - நம்பிக்கை**

தலைவன் பிரிவிற்கு ஆற்றாது வருந்தும் தலைவி, அவன் திரும்பும் நாளை நினைந்து அதற்கொரு குறி பார்ப்பாள். இதனைப் பிறரிடம் பார்ப்பாளாயின் தனது களவொழுக்கத்தைத் தானே புலப்படுத்துவதாக அமையும். ஆகையால் தலைவி, தலைவன் கிடைப்பான எனத் தானே கூடல் இழைத்துப் பார்க்கிறாள். அதனை ந.சுப்புரெட்டியார்,

"ஆழி திருத்திச் சுழிக்கணக்கு
ஓதிநை யாமல் ஐய
வாழி திருத்தித் தரக்கிற்றி
யோவுள்ளம் வள்ளலையே"[21]

எனச் சுட்டுவர். ஆண்கள் மார்பில் மாலை அணியும் வழக்கத்தைக் கை கொண்டிருந்தனர் என்பதை இதனால் உணரமுடியும்.

**தலைவி கடலை நோக்கிக் கூறல்**

தலைவி காமத்துயரினால் வருத்தம் பல பெற்றாள். அந்நிலையில், அவள் கடலினைப் பார்த்துக் கூறுவதனைக் கணிமேதாவியார்,

"மாக்கடல்சேர் வெண்மணல் தண்கானற் பாய்திரைசேர்
மாக்கடல்சேர் தண்பரப்பன் மார்பணங்கா – மாக்கடலே
என்போலத் துஞ்சாய் இதுசெய்தார் யாருரையாய்
என்போலும் துன்ப நினக்கு."[22]

எனக் கூறுவர். என் துன்பத்தை ஒத்த கொடுமையினை உனக்குச் செய்தவர் யார்? என்பதே அவள் வினா. தலைவனின் பிரிவே அவளின் காமத்தை மிகுவித்தது. அக்காம மிகுதியால் அவள் ஆற்றாமை மீதுர அவ்வாறு பேசுகிறாள் என்பது கருத்து. கடலை நோக்கிச் சங்க இலக்கியத் தலைவி ஒருத்தி,

"யார் அணங்குற்றனை – கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன
மீன்ஆர் குருகின் கானல் அம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரைஅலை
நள்ளென் கங்குலும் கேட்கும், நின்குரலே!"[23]

எனக் கடலிடம் வினவுகிறாள். தன் துன்பத்தைக் கடல்மீது ஏற்றிப் பார்க்கிறாள் சங்க காலத் தலைவி. சங்க மருவிய காலத்தில் வாழ்ந்த தலைவி கடலிடம் தன் துயர் கேட்டுப் புலம்புகிறாள். அவற்றுள், இருவரும் தங்கள் துயர் நீக்கக் கடலையே முன்னிறுத்துகின்றனர் என்பது வெள்ளிடைமலை.

**தலைவி புறாவை நோக்கிக்கூறல்**

ஆண் புறாவுடன் நீ ஊடுதல் பயனற்றதாகும். எம் காதலர் எம்மிடம் முன்பு அன்பு கொண்டிருந்தார். தற்போது, எம்மைப் பிரிந்து உளம் நெகிழாது வலியவரானார். அவ்வாறிருந்தும் நான் அவரை வெறுக்கவில்லை. மாறாக அவர் ஏறிச்சென்ற தேர் ஏற்படுத்திய அடிச்சுவட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதனால் எம்மேனியிடத்துப் பசலை படர்ந்தது எனத் தலைவி பெண்புறாவிடம் கூறுகிறாள். அதனைக் கணிமேதாவியார்,

"புன்புறச் சேவலோடு ஊடல் பொருளன்றால்
அன்புற வேயுடையா ராயினும் – வன்புற்
றதுகா ணகன்ற வழிநோக்கிப் பொன்போர்த்து
இதுகாணென் வண்ணம் இனி"[24]

என்பர். தாம் எய்தும் துயரினை அஃறிணை உயிர்கள் எய்துவதாகத் தலைவி, கற்பனை செய்து கொள்கிறாள். அது துன்பத்துப் புலம்பலாகும். தலைவனிடத்துக் கொண்டுள்ள அன்பின் மேன்மையை அக்கருத்துப் புலப்படுத்தும்.

**தலைவி நாரையிடம் கூறல்**

கைந்நிலையில் தலைவி நாரையை நோக்கிக் கூறுவதாக "ஐந்து பாடல்கள்' அமைந்துள்ளன"[25]. தலைவி நாரையை நோக்கி கூற்று நிகழ்த்துவதைப் புல்லங்காடனார்,

"நெடுங்கடல் சேர்ப்ப நின்னொடு உரையேன்
ஒடுங்கு மடற்பெண்ணை அன்றிற்கும் சொல்லேன்
கடுஞ்சூளில் தான்கண்டு கானலுள் மேயும்
தடந்தாள் மட நாராய் கேள்"[26]

எனக் கூறுவர். கடல், அன்றில் ஆகியவற்றுடன் பேச விரும்பாதத் தலைவி நாரையை நோக்கி ஈண்டு பேசுகிறாள். அதனைப் புல்லங்காடனார்,

"துணிமுந் நீர்ச் சேர்ப்பதற்குத் தூதொடு வந்த
பணிமொழிப் புள்ளே பற"[27]

எனப் புலப்படுத்துவர். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்துத் தலைவனை அழைத்துவர நாரையைத் தூது விடுகிறாள் தலைவி.

**நெஞ்சொடு கிளத்தல்**

களவு நிலையில் தலைவியின் உணர்ச்சிகளை உணர்ந்தால் தோழியானவள். ஆதலால், தலைவிக்குக் காதல் உணர்ச்சி ஏற்படுகின்ற காலங்களில் தலைவி மன எழுச்சியைத் தோழியிடம் கூறி மனச்சுமையைக் குறைத்துக் கொள்வாள். தலைவியின் குறிப்பறிந்து தோழி செயல்படுவதன் மூலம் அவளின் துயர நிலை ஓரளவு நீங்கும்.

தலைவி கூற்று நெஞ்சொடு கிளத்தல் பாடல்களில், நெஞ்சை விளிக்கும் தன்மை சிறுபான்மைப் பாடல்களில் உள்ளன. தலைவியின் நெஞ்சம் படுகின்ற துன்பநிலை, பெரும்பாலான நெஞ்சொடு கிளத்தல் பாடல்களில் வெளிப்படுகின்றன. தலைவனின் பொருள்வயிற் பிரிவின் போது

ஏற்படுகின்ற துன்பத்திற்காக நெஞ்சை விளக்க வேண்டிய கடப்பாட்டிற்கு உள்ளாகிறாள்.

அலரின் காரணமாகத் தலைவன் சிறிது காலம் தலைவியைப் பார்க்க வரவில்லை. தலைவன் வராத காலம் இந்த வேணிற்காலம், அது தலைவிக்குத் துன்பம் செய்கிறது. அதனைப் பரணர்,

"ஆற்று அயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து
எழு குளிறு மிதித்த ஒருபழம் போலக்
குழைய கொடியோர் நாவே
காதலர் அகல கல்வென்றவ்வே"[28]

என்பர். அலர்வாய்ப் பெண்களின் இழி செயலால் தலைவன் பிரிந்து சென்றான். அப்பிரிவு தலைவியை வருத்தியது எனும் செய்தி இதனால் புலனாகிறது.

**வரைவு வேட்கை**

இருவகைக்குறியில் தலைவனைப் பெற்று மகிழ்ந்த நிலையிலும், பெறாத நிலையிலும் வருந்தி வாழும் தலைவி, தலைவனை வரைந்து கொண்டு இல்லற இன்பத்தில் நிலைபெற வேண்டி வரைவு வேட்கை கொள்வாள். அட்வேட்கை, களவின்கண் பல்வேறு நிலைகளில் அவள்பால் பெருகும். அவை,

- ★ தலைவன் இரவின் கண் வரும் ஆற்றின் இன்னாமை அறிந்த நிலையிலும்
- ★ களவினை அன்னை அறிந்த நிலையிலும்
- ★ மேனி வேறுபாடு கண்டு அன்னை இச்செறித்த நிலையிலும்
- ★ வெறியாட்டு அயரும் நிலையிலும்
- ★ நொதுமலர் வரைவு வந்துள்ள நிலையிலும்
- ★ தோழி தலைவனை வரைவு கடாவும் காலையும்
- ★ தோழியால் அறத்தொடு நிற்குமிடத்தும்

★ தலைவன் வரைவு நீடிக்குமிடத்தும்

★ தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தவிடத்தும்

என்பனவாகும். தலைவி வரைவு வேட்கை மீதூரக்கூற்று நிகழ்த்துவாள். இதனை முறையே தொல்காப்பியர்,

"பொழுதும் ஆறும் புரைவது அண்மையின்
அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்"[29]

"களவறிவுரினும்"[30]

"தமர் தற்காத்த காரணம் மருங்கினும்"[30]

"வெறியாட்டித்தது வெருவின் கண்ணும்"[32]

"உயிர் செல வேற்று வரைவுவரின் மாற்றுதற் கண்ணும்"[33]

"வரைவு தலைவரினும்"[34]

"உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்"[35]

"வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்"[36]

"வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்"[37]

எனக்கூறுவர். அவற்றில் மூன்று கூற்றுக்களுக்குரிய "'பதினாறு' பாடல்கள் பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் அமைந்து காணப்பெறுகின்றன"[38].

**★ பொழுதும் ஆறும் புரைவது அண்மையின் அழிவுதலை வந்த விந்தைக் கண்ணும்:**

இத்தலைவி கூற்றிற்கு இளம்பூரணர் தலைவன் வரும் காலமும், இடனும் குற்றமுளவாதலான் ஆண்டு அழிவு வந்த சிந்தைக் கண்ணும் என்ற உரை விளக்கத்தைத் தருவர். நச்சினார்க்கினியர் "தலைவியும் தோழியும் தலைவன் இரவுக்குறி வருங்காற் பொழுதாயினும், நெறியாயினும் இடையூராகப் பொருந்துதல் இன்மையின் அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்" என்பர்.

பொழுதும் ஆறும் புரைவது அண்மையின் அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும் எனும் கூற்றிற்குரியதாக ஐந்திணை எழுபதில் ஒரு பாடல் உள்ளது. அதனை மூவாதியார்,

"குறையொன்று உடையேன்மற் தோழி நிறையில்ல
மன்னுயிர்க்கு ஏமம் செயல் வேண்டுமின்னே
அராவழங்கு நீள்சோலை நாடனை நம்மில்
இராவாரல் என்ப துரை"[39]

என விளக்குவர். தலைவன் வரும் வழியில் பாம்பு, புலி முதலிய கொடிய விலங்குகள் உள்ளன. அவ்வழியில் தலைவன் வருவதால் அவனுக்குத் துன்பம் ஏதும் உண்டாகுமோ? எனத் தலைவி மனப்போராட்டத்திற்கு உள்ளாகிறாள். தலைவனுக்கு ஏதும் நிகழ்ந்துவிடக்கூடாது, ஏதாவது இடர்பாடு நேரின் யான் உயிருடன் வாழேன் என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கக்கூடும். அதனால், அவள் அவ்வாறு எண்ணியிருக்க அப்பாடல் தலைவியின் கலக்க உணர்வை வெளிப்படுத்துகின்றது. அக்கலக்க உணர்வு தலைவனை மையமிட்டே அமைந்துள்ளது.

**களவறிவுரினும்**

தன்மேனி வேறுபாடு கண்டும், தாய் தன் களவொழுக்கத்தை அறிந்தது கண்டும் தலைவியிடத்துக் கூற்று நிகழும். அதுவே களவறிவுரினும் என்பதாகும். அதற்கு இளம்பூரணர் "களவினைப் பிறர் அறியினும் குறிவழிச் செல்லாமை"[40] என்றும், நச்சினார்க்கினியர் "தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும்"[41] என்றும், அதற்குப் பாலகிருஷ்ணன் "அவர் அறிந்தோ தனது மேனி வேறுபாடு கண்டோ, செயல்மாறுபாடு கண்டோ அக்களவினை அறியும் நிலையிலும்"[42] என விளக்கம் தருவர்.

களவறிவுரினும் என்ற கூற்றிலமைந்த பாடலொன்று ஐந்திணை ஐம்பதில் உள்ளது. அலரென்னும் பொருளில் அமைந்திலங்குகிறது. அதனை மாறன் பொறையனார்,

"கடற்கரைத் தலைவன் சோலையுள் என்னைக் கலந்து
என்தோளைப் பற்றி என் உள்ள வருத்தத்தை போக்கித்
தெளிவிப்பதற்காகச் சொன்ற உறுதி மொழிகளையும்
அச்சோலையுள் வாழும் பறவைகள் மறந்துவிடுவன அல்ல"[43]

என மொழிவர். தலைவனுக்கும், தலைவிக்குமுள்ள களவொழுக்கத்தைப் பறவைகள் அறியும் என்கிறார் ஆசிரியர். தலைவன் களவொழுக்கத்தை நீட்டித்திருப்பதால், தலைவியின் உள்ளத்தில் அச்ச உணர்வு தோன்றியது. ஒருகால் தலைவன் தன்னை ஏமாற்றி பொய் உரைக்கக் கூடுமோ? அவ்வாறு உரைத்தால், களவுக் காலத்தில் கண்ணுற்றிருந்த பறவைகள் கூட பொய் சொல்லுமோ? எனத் தனக்குத்தானே வினவிக் கொள்கிறாள் தலைவி. களவறிவுரினும் என்ற கூற்றில் எட்டுத் தொகையில் "ஒன்பது பாடல்கள் உள"[44] அவை அலர் காரணமாகக் களவு வெளிப்படுவதை விளக்குகின்றன.

**வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்:**

தலைவன் வரைவு நீடிக்கும் காலத்தும், தலைவி மெலிந்து ஆற்றாளாய களவு கண்டு வன்பொறை எதிரழிந்து ஆற்றியமைக்குக் காரணம் கூறி, தலைவனுடைய வரைவு நீட்டிப்பை உணர்த்துவாள். இதற்கு இளம்பூரணர் "தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குகிறான். இன்ன நாள் வரைந்து கொள்வர் எனக்கூறித் தோழியற் கூட்டத்திற்கு முயலாது தளைந்த வழியதனைத் தோழி ஐயப்படுங் குறிப்புத் தோன்றமை மறைந்தொழுகிய தலைவி அவன் வருந்துணையும் ஆற்றாது வருத்தமுறினும்"[45] எனக்கூறுவர். இக்கூற்றிற்கு நச்சினார்க்கினியர் வரைவு மாட்சிமைப்படா நிற்கவும் பொருள் காரணம் தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கி வைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருத்தமெய்தினும்"[46] என்பர்.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தான் தலைவன். அதனால், தலைவி மனம் வருந்தினாள். அந்நிலையில், அவள் தோழியிடம்,

“பாசிப் பசுஞ்சுனை பாங்கர் அழிமுதுநீர்
காய்சின மந்தி பயின்று கனிசுவைக்கும்
பாசம்பட் டோடும் படுகல் மலைநாடற்கு
ஆசைமின் தேம்பும் என் நெஞ்சு”[47]

என உரைக்கிறாள். தலைவியின் மனத்துயரினை ஈண்டு புல்லங்காடனார் வெளிப்படுத்தியுள்ளமை புலனாகும்.

மலைநாட்டுத் தலைவன் பொருட்டு என் மனமானது காதலால் வருந்துகிறது என்கிறாள் தலைவி. அதனைப் புல்லங்காடனார்,

“வெந்த புனத்துக்கு வாச முடைத்தாகச்
சந்தனம் ஏந்தி அருவி கொணர்ந்திடூஉம்
வஞ்சமலைநாடன் வாரான்கொல் தோழிஎன்
நெஞ்சம் நடுங்கி வரும்”[48]

என உணர்த்துவர். தலைவியின் உள்ளம் காதலால் தடுமாற்றம் எய்துவதை இக்கருத்து புலப்படுத்தும். தலைவனது ஆரமணிந்த மார்பானது என் மனத்தை வருத்துகிறது என்றாள் தலைவி. அதனைப் புல்லங்காடனார்,

“மரைய உகளும் மரம்பயில் சோலை
உரைசால் மடமந்தி ஓடி உகளும்
புரைதீர் மலைநாடன் பூண் ஏந்து அகலம்
உரையா வழங்குமென் நெஞ்சு”[49]

எனச் சுட்டுவர். தலைவனிடத்துத் தலைவிக்குள்ள அன்பின் மேன்மையை இதனால் உணரமுடியும்.

தலைவனின் நட்பின் இயல்பைப் பற்றிச் சொல்லத் தொடங்கினாள் தலைவி. சொல்லும் பொருட்டு தலைவியின் கை வளையல்கள் நெகிழ்ந்து விடுகின்றன. இதனால் தலைவி மனம் உள்ளத் தவிப்புக்கு ஆளாகிறது. அவன் இன்பத்தை வெறுத்து விட்டானோ? இல்லை என்னுடைய தோளில் கூடுகின்ற

இன்பம் நரகத்தைப் போல் இருக்கும் என உணர்கின்றானோ? இல்லை இன்பத்தை நுகர்ந்தவன் அதை மறுத்துப் பேசும் எண்ணமுடையவனாக இருக்கின்றானோ? எனத் தலைவி கலங்கி மொழிகிறாள். தலைவனை இனிமேல் நான் காணும் வழி யாது? என்றும் தலைவன் நம்மிடம் இனிக் கூடுவானோ? மாட்டானோ? என்றும் தலைவியின் உள்ளம் தடுமாறுகிறது. அதனைப் புல்லங்காடனார்,

"நுகர்தல் இவரும் கிளிகடி ஏனல்
நிகரில் மடமான் எரியும் அமர் சாரல்
காகை நாடன் கலந்தான் இவன் என்று
மேனி சிதையும் பசந்து."[50]

என்பர். தலைவியின் உள்ளத் தவிப்பையும், உள்ளத் தடுமாற்றத்தையும் ஈண்டு உணரமுடிகிறது.

எட்டுத்தொகை நூல்களில் "நாற்பத்தைந்து" பாடல்கள் வரைவிடை வைத்த காலத்து வருந்தினும் எனும் துறையில் அமைந்துள. தலைவன் வரைவு நீடிக்கும் காலத்தும், வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த காலத்தும் தலைவி மெலிந்து ஆற்றாளாய் வருந்துவதையும், மேனி பசலையுற்றும், வளையல்கள் கழன்றும் தலைவி துயர்பல பெற்றதையும் அப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

**கற்புப் பாடல்கள்**

களவுநெறி கற்பாக முடியும் பொழுது அது நன்னெறி என்று பெயர்பெறும். மறை ஒழுக்கம் செய்யும் காதலர்கள் ஊரில் இருப்பினும் உடன்போக்கு முறையில் அகன்று போயினும், வரைவு எனும் அமைப்பிற்குள் உட்பட்டு கணவன் மனைவியாக வாழ்தல் வேண்டும். இதைத்தான் உலகம் வரவேற்கும். களவின் முடிவு கற்பு என்பது அகத்திணையின் அறமாகும்.

‘கற்பு’ என்பதற்குத் தொல்காப்பியம் பல இடங்களில் ‘இல்லறம்’ என்றே பொருள் விளக்கம் தருகிறது. அதனை இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் முறையே,

“மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மண நிகழ்ச்சி”[51]

“தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதொரு மேற்கோள்”[52] என விளக்குவர்.

களவில் ஈடுபட்டு அன்புரிமை கொண்ட தலைமகன், தன்மீது காதல் கொண்ட தலைவியைத் தமர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கை கற்பெனப்படும். அதனைத் தொல்காப்பியர்,

“கற்பெனப்படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குறி மரபினர் கொடுப்பக் கொள்வதுவே”[53]

என்பர். தமர் கொடுப்ப முறையாகத் தலைவியை மணந்து கொள்ளாது அவளை உடன்போக்கில் அழைத்துச் சென்று மணத்தலும் உண்டு. அதனை,

“கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலையான”[54]

என்ற அடிகள் உணர்த்தும். உடன்போகிய இடம், கொடுப்போரில்லா இடங்களில் திருமணத்தை மேற்கொள்ளின் கரணம் எனும் சடங்கினைவிடாது மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தை இந்நூற்பா கூறுகிறது. கற்பிற்குக் கரண நிகழ்ச்சி ஒரு தலையாயிற்று என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறுவர்.

ஆய்வுக்குட்பட்ட அக இலக்கிய நூல்களில் தலைவி கூற்றாக அமைந்த கற்புப் பாக்களின் எண்ணிக்கை “‘நூற்று முப்பதாகும்’”[55] அவற்றை ‘ஊடல்’ ‘பிரிவு’ எனும் இருநிலைகளில் பாகுபடுத்தி விளக்க முடியும்.

**ஊடல்**

கற்பில் தலைவிக்குரிய ஊடல் கூற்றாகப் பதினாறு உள்ளன. அவற்றை,

1. கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நனியின் நீக்கிய இளிவரு நிலையும்

2. புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயர்க்கு
அகன்ற கிழவனைப் புலம்பு நனிகாட்டி
இயன்ற நெஞ்சுத் தலைப்ப பெயர் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்

3. தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி
எங்கையர்க்கு உரையென இரத்தற்கண்ணும்

4. செல்லாக் காலை செல்கென விடுத்தலும்

5. காமக்கிழத்தி தன்மகத் தழீஇ
ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்

6. சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி
அறம்புரி நெஞ்சொடு தன் வரவறியாமை
புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டித் தானும்

7. தந்தையை ஒப்பர் மக்கள் என்பதனால்
அந்தமில் சிறப்பின் மகப்பழிந்து நெடுங்கலும்

8. கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது நல்லிசை நயத்தோர்
சொல்லோடு தொகைஇப் பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்

9. கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி

10. தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப்பரத்தை உள்ளிய வழியும்

11. தன்வயிற் சிறப்பினும்

12. அவள்வயிற் பிரிப்பினும்

13. காமக்கிழத்தி நலம் பாராட்டி தீமையின்
முடிக்கும் பொருளின் கண்ணும்

14. இன்னா தொல் சூள் எடுத்தற் கண்ணும்

15. கொடுமை ஒழுக்கத்துத் தோழிக்குரியவை
வருவறு சிறப்பிற் கற்பில் திரியாமை
காய்தலும் உவத்தலும் பிரிதலும் பெட்டலும்

16. வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்

என நிரல்படுத்த முடியம். ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் முதல் கூற்றிற்கும், பதினைந்தாவது கூற்றிற்கும், பதினாறாவது கூற்றிற்கும் பாடல்கள உள.

**முதல் கூற்று**

புலவி, ஊடல், உணர்வு ஆகிய மூன்று ஒன்றொடு ஒன்று தொடர்புடையன; பிரிக்க முடியாதன. இவற்றுள் புலவி அண்மைக் காலத்தது ஊடல் அதனினும் மிக்கது என்பர் இளம்பூரணர். உணர்தல் என்பது ஊடலை அவையறிந்து நீக்குதல் எனக்குறிப்பர் பரிமேலழகர். புலவி, ஊடல், உணர்வு ஆகிய மூன்றையும் இணைத்த தலைவி கூற்றினைத் தொல்காப்பியர் சில இடங்களில் சுட்டுவர்.

"கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளியின் நீக்கிய இளிவரு நிலையும்"[56]

ஈண்டு புதல்வன் பிறந்த நிலையில் நிகழ்த்தப்பெறும் விரும்பத்தக்க நெய்யாடல் விழாவிற்குக் கலந்துகொள்ள விரும்பி வந்த தலைவனை, நெஞ்சு புண்படுமாறு செய்து தன்னொடு கூறுதலை விளக்கிய தாழ்வற்ற நிலையிலும் தலைவிபால் கூற்று நிகழும். அதனை இளம்பூரணர்,

"புதல்வன் தோன்றிய நெய்யணி நயந்த
கிழவனை நெஞ்சு புண்ணுறுமாறு பண்ணிச்
செறிவு நீக்கிய இளிவந்த நிலையின் கண்ணும்"[57]

என மொழிவர். நச்சினார்க்கினியர் அந்நிலையை,

"யானைக்கன்று போலும் புதல்வன் பிறந்தலான்
உளதாகிய விருப்பத்தையுடைய நெய்யணிக்கு
விரும்பிய தலைவனை நெஞ்சை வருத்தித்
தன்னைச் செறிதலினின்றும் நீக்கிய இளிவந்த நிலைமைக் கண்ணும்"[58]

எனக் கூறுவர். கயந்தலை என்பதற்கு யானைக்கன்று என ஆசிரியர் உரைப்பதை வெள்ளைவாரணர் மறுத்து மெல்லிய தலையினையுடைய இக்குழந்தை எனப்பொருள் உரைப்பது பொருத்தமாய் அமைந்துள்ளது.

தலைவிக்குரிய பதினாறு ஊடல் கூற்று நிகழுமிடங்களில் முதலாவதாக முறைப்படுத்தப்பட்டுள்ளமைகுச் சான்றாகத் திணைமாலை நூற்றைம்பதில் ஒரு பாடல் விளங்குகிறது. அதனைக் கணிமேதாவியார்,

"முலையாலும் பூணாலு முன்கண்தாஞ் சேர்ந்த
விலையாலும் இட்ட குறியை – உலையாது
நீர்சிதைக்கும் வாய்ப்புதல்வன் நிற்குமுனைமுலைப்பால்
தார்சிதைக்கும் வேண்டா தழு"[59]

என்பர் பரத்தையர். தலைவனது மார்பில் கொங்கையாலும், அணிகளாலும் குறி ஏற்படுத்தியதைக் கூறி தழுவ மறுக்கிறாள் தலைவி. தலைவி தன் மன வருத்தத்தைத் தலைவனிடம் வெளிப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**பதினைந்தாவது கூற்று**

தலைவனது கொடுமை ஒழுக்கமாகிய பரத்தமை ஒழுக்கத்தினால், தலைவி தலைவனைச் சினப்பேன் என்றும், சினவாது உவப்பேன் என்றும், ஏற்கமாட்டேன் என்றும், ஏற்றுக்கொள்வேன் என்றும் நான்கு நிலைகளில் மொழிவாள். அதனைத் தொல்காப்பியர்,

"கொடுமை ஒழுக்கம் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பின் கற்பில் திரியாமைக்
காய்தலும், உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்"[60]

எனக் கூறுவர். இதற்கு இளம்பூரணர் தலைவி கொடுமை ஒழுக்கத்துத் தோழிக்குக் கூறுதற்குரியவை குற்றமற்ற சிறப்பினையுடைய கற்பின்கண் திரியாது தலைவனைக் காய்தலும், உவத்தலும் நீக்கி நிறுத்தலும் பேணிக் கோடலும் அவ்விடத்து வரும். பலவாய் வேறுபட்டு வரு நிலையிலும் தோழிக்குரியவை எனவும் தோழிக்குக்கூற தகாதனவும் என உரை விளக்கம் நவில்வர்.

ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் மேற்குறித்த இலக்கணப் பொருண்மையில் "ஆறு பாடல்கள்"[61] அமைந்துள. அவற்றுள் ஐந்து பாடல்கள் தலைவனைக் காய்ந்து கூறுவதாகவும், "ஒரு பாடல் பெட்டல்"[62] நிலையிலும் அமைந்துள்ளன.

**காய்தல்**

தலைவன் பரத்தையிடம் சென்று மீண்டதையும், அவளிடத்து அவன் பெற்ற உறவின் அடையாளங்களையும் உள்ளுறை வாயிலாகத் தலைவி எடுத்து மொழிகின்றாள். அதனைக் கணிமேதாவியார்,

"செந்தா மரைப்பூ உறநிமிர்ந்த செந்நெல்லின்
பைந்தார்ப் புனல்வாய்ப்பாய்ந்து ஆடுவா – ளந்தார்

வயந்தகம் போல் தோன்றும் வயலூரன் கேண்மை
நயந்தகன்று ஆற்றாமை நன்று"[63]

என்பர். செந்தாமரை மலருக்கும், செந்நெல் பயிருக்கும் ஒப்பிய உவமையாகக் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கதாகும். அதனைக் கணிமேதாவியார்,

"கருங்கோட்டுச் செங்கண் எருமை கழனி
இருங்கோட்டு மென்கரும்பு சாடி – அருங்கோட்டங்
ஆம்பல் மயக்கி அணிவளை ஆர்ந்தழகாத்
தாம்பல் அசையினவாய் தாழ்ந்து"[64]

எனப் புலப்படுத்துவர். தலைவன் பரத்தையருடன் கொண்ட புற ஒழுக்கத்தினை தலைவிஈண்டு வெளிப்படுத்துகிறள். அவனது ஒழுக்கத்தினை எருமையின் செயலோடு ஒப்பிடுகிறாள். எருமை வயல்களில் விளைந்துள்ள கரும்பை மோதி, ஆம்பல் மலர்களைக் கலக்கி, குவளை மலரைத் தின்று வாயை அசைபோடும் அதுபோல உனது பண்பும் உள்ளது எனத் தலைவனைச் சாடுகிறாள்.

**பெட்டல்**

தலைவன் பரத்தையரிடம் சென்றான். அவர்களுடன் நீராடுதல் முதலியனவற்றுள் ஈடுபட்டான், அதனை அறிந்த தலைவி மனவேதனையுற்றுப் புலம்புவதை மூவாதியார்,

"அகன்பணை யூரனைத் தாமம் பிணித்தது
இகன்மை கருதியிருப்பன் – முகனமரா
ஏதின் மகளிரை நோவ தெவன்கொலோ
பேதமை கண்டொழுகு வார்"[65]

என உணர்த்துவர். அன்புடைய தலைவனை நொந்து கொள்வது அறிவுடமையாகாது எனும் செய்தி ஈண்டு உணர்த்தப்பெறுகிறது. தலைவனைப் பெட்டல் வேண்டும் எனும் குறிப்பு, அக்கருத்தால் வெளிப்படுகிறது.

இவ்விலக்கியப் பொருண்மை, “எட்டுத்தொகை அக நூல்களில் ஒன்பது”[66] செய்யுட்களில் அமைந்திலங்குகிறது.

**பதினாறாவது கூற்று**

தலைவன் விடுக்க வந்த தோழியல்லாத ஏனைய வாயில்களிடத்தும் தலைவிக்குக் கூற்று நிகழும் என்பதை இளம்பூரணர் “வாயில்கள் மாட்டு வரூஉங் கூற்றுவகை தொகைப்படத் தலைவி கூற்று நிகழும் என்றவாறு வாயில்களாவர் பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி, பாணன், விறலி, இளையர், விருந்தினர், கூத்தர், அறிவர், கண்டோர். இவருள் தோழி வாயிலாதல் மேற்கூறுதலின் ஒழிந்த வாயில்கள் ஈண்டுக் கொள்ளப்படும்”[67] எனக்கூறுவர்.

“வாயில் தன் ஏதுவாகத் தலைவிக்கு வரும் கூற்று வகை என்னும், வாயில்களாவள் செய்யுளியளிள் கூறும் பாணன் முதலியோர் வகை என்றதனான் ஆற்றாமையும் புதல்வனும் ஆயின் ஆடை கழுவுவாரும், பிறவும் வாயிலாதல் கொள்க”[68] என நச்சினார்க்கினியர் அதனை விளக்குவார்.

தலைவனது பிரிவினால் தலைவி துயர்பல பெறுவதுண்டு. அத்துன்பமிகுதியைத் தலைவனுக்கு அறிவுறுத்தும் போது இரங்கல் உணர்வு தோன்ற மொழிய வேண்டுமென்பதை,

“வருத்தம் மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுங் இரக்கம்”[69]

என்பர் தொல்காப்பியர். ஈண்டு தலைவன் பிரிவினால் “தலைவிக்கு ஏற்பட்ட இரக்க உணர்வை வாயில்கள்”[70] தலைவியின் கருத்தினை உட்கொண்டு தாமே தலைவனிடம் கூற வேண்டும் என்பதைத் தொல்காப்பியர்,

“தோழி உள்ளுறுத்த வாயில் புகுப்பினும்
ஆவயின் நிகழும் என்மனார் புலவர்”[71]

என்பர்.

தலைவன் விடுக்க வந்த வாயில்களிடத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவதைப் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்கள் மொழிகின்றன. அவற்றைப் பின்வருமாறு பாகுபடுத்த முடியும். அவை,

1. தலைவி பாணனுக்கு வாயில் மறுத்தல்
2. வாயில் வேண்டிச் சென்றார்க்கு வாயில் மறுத்தல்
3. தோழி வாயில் மறுத்தலும், நேர்தலும்
4. ஆற்றாமையே வாயிலாகச் சென்றுழித் தலைவி கூறல்

என்பனவாகும்.

**1. தலைவி பாணனுக்கு வாயில் மறுத்தல்**

"பதினெண் கீழ்க்கணக்கு அக நூல்களில் தலைவி பாணனுக்கு வாயில் மறுத்தலாக முப்பத்தைந்து செய்யுட்கள் அமைந்துள்ளன"[72]. அவற்றில் தலைவி பாணனுக்கு வாயில் மறுப்பதை மாறன் பொறையனார்,

"கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொல்சேரி
நுண்டுளைத் துன்னூசி விற்பாரின் – ஒன்றானும்
வேறல்லை பாண வியலூரன வாய்மொழியைத்
தேற எமக்குரைப்பாய் நீ"[73]

எனச் சுட்டுவர். பாணனே நீ கொல்லன் தெருவில் ஊசிவிற்கும் வணிகர் போல் உன் செயல் உள்ளது. அதனால் பரத்தை வீடு நோக்கி செல்க. தலைவனைப் பாராட்டி நீ சொல்ல வேண்டியதில்லை. ஏனெனில், முன்பு என் தோள்கள் தலைவனுக்குச் சந்தன குழம்பு போல் இருந்தன. ஆயின் இப்பொழுது காரக் குழம்பு போல் உள்ளது. அதனால் தலைவன் காதலைப் பரத்தையிடம் போய்ச் சொல்க. அத்துடன் என் மூப்புத் தன்மையும் சொல்க. ஏனெனில் பரத்தை திருமகள் போன்றவள் எனக்கூறி தலைவன் பிரிவு என் தவறாக இருக்கட்டும் நீ இவ்விடம் இருந்து செல் என்கிறாள்.

பெண்களின் அழகு நீங்கியவுடன் அவர்களை விட்டு நீங்கும் தலைவனின் தொடர்பு எனக்கு வேண்டியதில்லை. அவன் பரத்தையர் மேல் அன்புடையவனாய் உள்ளான். அவன் ஆண்மையை எடுத்துச் சொல்ல வேண்டும். நீ வேண்டினால் உமக்கு யாம் கூறுவோம். பண் பாடத் தெரியாத உன் பொய்ச்சொற்களைப் பரத்தையிடமே சொல். என்னிடம் சொல்வதற்கு ஒன்றுமில்லை. என் மகன் வளர்ந்துள்ளதால் யான் கிளர்ச்சி அடைந்து வாழ்கிறேன் என்கிறாள் தலைவி. அதனைக் கணிமேதாவியார்,

“எங்கை இயல்பின் எழுவல்யாழ்ப் பாண்மகனே
தங்கையும் வாயு மறியாம – இங்கண்
உளர உளர உவனோடிச் சால
வளர வளர்ந்த வகை”[74]

என்பர். பலவற்றைச் சொல்லி மணந்தவன் நாணம் கொண்டு மறைந்திருக்கிறான். அவன் அங்கேயே தங்கட்டும் பரத்தையர் கொங்கைகளைத் தழுவி இன்புறட்டுமெனத் தலைவி பாணனுக்கு வாயில் மறுப்பதைப் பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்கள் கூறும். அப்பொருண்மைகள் எட்டுத்தொகை அகநூல்களில் சிறந்துள்ளன. சங்க அகநூல்களில் உள்ள பொருண்மைகளை அடியொற்றியே பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்கள் பாடப்பெற்றிருப்பதை இதனால் உணரமுடிகிறது.

**2. வாயில் வேண்டிச் சென்றார்க்கு வாயில் மறுத்தல்**

இன்னவாயில் என்று அடையாளம் தெரியாது பொதுநிலையில் ‘வாயில்’ எனத் துறைக்குறிப்பில் குறிக்கப்பட்ட பாடல்கள் ஆறு. அவை தலைவி வாயில்களுக்கு வாயில் மறுப்பதாக உள. அதனைக் கண்ணன் சேந்தனார்,

“கருங்கயத் தாங்கண் கழுமிய நீலம்
பெரும்புற வாளைப் பெடைகதூஉ மூரன்

விரும்புநாட் போலான் வியன்நல முண்டான்
கரும்பின்கோ தாயினேம் யாம்”[75]

என்பர். தலைவன் முன்னொருநாள் என்னிடம் இன்பம் துய்த்தான். அதனால் நான் கரும்புச் சக்கைப் போல் ஆனேன். அந்நாள் போல் இந்நாள் இல்லை. அதனால் கணவன் என்ற உரிமை மட்டும் போதும். அவனது அருள் எனக்குத் தேவையில்லை. பசலை நோயைத் தந்தவன் மீண்டும் வந்து என்னைப் புணர்ந்தால், நான் துன்பமிக அடைவேன் எனத் தலைவி உரைப்பதை இங்கு காணமுடியும்.

தலைவனின் செயல்களினால் நான் மாறுபட்ட தன்மையைப் பெற்றுள்ளேன். இதனால் தலைவனோடு ஊடுதலைச் செய்ய நேர்ந்தது. எனவே, ஏதும் சொல்லாமல் செல்வீராக என வாயில்களுக்குத் தலைவி வாயில் மறுக்கிறாள். இக்கருத்தமைந்த பாடல்கள் சங்க நூல்களில் உண்டு. சங்க அகப் பாடல்களின் கருத்தாக்கங்களைத் தழுவியே இப்பாடல்கள் ஆக்கப்பட்டிருக்கக் கூடுமென்பது கருத்து.

**3. தோழிக்கு வாயில் மறுத்தலும் நேர்தலும்**

தலைவி தோழிக்கு வாயில் மறுத்தலாக இரு செய்யுட்கள் அமைந்துள்ளன. தலைவனின் பரத்தையர் பிரிவைப் புதல்வன் தடுத்து நிறுத்தினான். இருப்பினும், அவன் பரத்தையர்பால் சென்றான். இது தலைவனின் வன் தன்மையைக் காட்டுகிறது. தலைவன் ஒரு பரத்தையை மணந்து கொண்டான் எனப் பரத்தையர் சேரியில் அலர் எழுகின்றது. அத்தகையவனை எவ்வாறு ஏற்றுக் கொள்ளமுடியும் எனத் தலைவனின் புறத்தொழுக்கத்தைக் கூறி தோழிக்கு வாயில் மறுக்கிறாள் தலைவி.

தலைவனின் பரத்தமைச் செலவைப் புதல்வன் தடுத்து நிறுத்தியது எனக்கு வியப்பைத் தருகிறது என்கிறாள். அதனை,

"பெய்வளைக் கையாய் பெருநகை ஆகின்றே
செய்வய லூரன் வதுவை விழவியம்பக்
கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவன்
எய்தி யிடருற்ற வாறு"[76]

என்பர் மாறன் பொறையனார்,

**ஆற்றாமையே வாயிலாக சென்றுழி தலைவி கூறல்**

தலைவி தன் காதல் மிகுதியைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். அதனை மாறன் பொறையனார்,

"ஒல்லென் ஒலிபுன லூரன் வியன்மார்பம்
புல்லேன்யா னென்பேன் புனையழையாய்–புல்லேன்
எனக்கோர் குறிப்பு முடையனோ வூரன்
தனக்கேவல் தெய்தொழுகு வேன்"[77]

என்பர். தலைவனைப் பார்ப்பதற்கு முன்பு அவனைத் தழுவேன் எனக் கூறியவள், அவனைக் கண்ணுற்ற போது காதல் வயப்பட்டுச் செயலற்று வாயில் நேர்கிறாள். இக்கருத்தமைந்த பாடல்கள் எட்டுத்தொகை அகநூல்களில் பயின்று வந்துள்ளன. அவையே இப்பாடல்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தன.

**பிரிவு**

கற்பு வாழ்வில் நிகழும் பிரிவுகளை அக இலக்கண நூல்கள் விரித்துரைத்துள்ளன. இவை காலத்திற்கேற்பப் பல மாற்றங்களையும், விரிவாக்கங்களையும் பெற்றுள்ளன. அதனை அவ்வவ்கால இலக்கண நூல்கள் செப்பும்.

**பிரிவு வகைகள்**

i) **தொல்காப்பியம்**

தொல்காப்பியர் பிரிவு தொடர்பான செய்திகளை ஒரே இடத்தில் தொகுத்துக் கூறவில்லை. சில இடங்களில் தனித்தனியாகவும், சில இடங்களில் தொகுத்தும் கூறியுள்ளார்.

தொல்காப்பியர் பிரிவு வகைகளை கீழ்வருமாறு எடுத்துரைத்துள்ளார்.




"ஓதல் பகையே தூதிவை பிரிவே"[78]

என ஓதல், பகை, தூது ஆகிய பிரிவுகளையும், அதன்பின்னர் இரண்டு நூற்பாக்களையடுத்து,

"மேவிய சிறப்பின் ஏனோர் படிமையை
முல்லை முதலாச் சொல்லிய முறையால்
பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே"[79]

எனக் காவற்பிரிவையும், பொருள்வயிற் பிரிவையும் சுட்டுகிறார்.

"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்த கன்று உறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலையான"[80]

எனப் பரத்தமைப்பிரிவைக் கற்பியலில் சுட்டியுள்ளார். இவ்வாறு மேற்சுட்டிய அறுவகைப் பிரிவுகளுள் ஐந்து வகையான பிரிவுகளை வெளிப்படையாகவும், காவற்பிரிவைக் குறிப்பாகவும் தொல்காப்பியம் எடுத்துரைத்துள்ளது.

### ii) இறையனார் களவியல்

கற்புக் கைகோளில் பிரிவு சார்ந்த செய்திகளை இறையனார் களவியல் பெரும்பாலும் எடுத்துரைத்துள்ளது. அதனை,

"கற்பினுள் துறவே கடிவறை இன்றே"[81]

என்ற பகுதி விளக்கும். கற்பு காலத்தில் 'பிரிவு' என்பது இன்றியமையாது நிகழும் என விளக்குகிறது. பிரிவு என்பதை இந்நூல் 'துறவு' என்கிறது. ஆயின் தமிழ் மரபில் பிரிவுவேறு, துறவு வேறு எனக் கொள்வதே பொருந்தும். பிரிவு என்பது மீண்டும் இணையக்கூடிய சிறிய பிரிவாகும். துறவு என்பது மீண்டும் இணையவியலாத முற்றப்பிரிந்த பிரிவாகும். இவ்வாறு பிரிவுக்கும், துறவுக்கும் வேறுபாடு இல்லா வண்ணம் இறையனார் களவு வகுத்திருப்பது சிந்திக்கத்தக்கதாகும்.

### iii) நம்பியகப்பொருள்

கற்பு வாழ்வில் நிகழும் பிரிவுகளைத் தொல்காப்பியம் போன்றே நாற்கவிராச நம்பியும் அகத்திணையிலேயே எடுத்துரைத்துள்ளார்.

கற்பினுள் பரத்தமை பிரிவு, ஓதற்பிரிவு, காவற்பிரிவு, துணைவயிற் பிரிவு, பொருள்வயிற்பிரிவு, தூதுப்பிரிவு எனும் அறுவகைப்பிரிவு நிகழும் என்று எடுத்துரைத்துள்ளார்.

தொல்காப்பியத்துள் பொருள் முதலியவற்றிற்காகப் பிரியும் தலைவனைப் பிரிந்து தனிந்துறையும் காலம் பெரிதாகலின் ஆண்டு மனச் சுழற்சியோடு பெருகிய வேட்கையின்கண் தலைவி கூற்று நிகழும். இதனை இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்,

"தலைவனைத் தலைவி நீங்கித் தனிமையுறுதலும்
பெரிதாகலின் ஆண்டு அலமரல் பெருகிய காமத்தின்
மிகுதியின் கண்ணும்"[82]

"அறமும் பொருளுஞ் செய்வதனால் புறந்துறைதலில்
தலைவனைத் தலைவி நீங்கும் காலம் பெரிதாகலின்
அதற்குச் சுழற்சி மிக்க வேட்கை மிகுதி நிகழ்ந்த விடத்தும்"[83]

என முறையே விளக்கியுள்ளனர்.

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் பொருள் முதலியவற்றிற்காகப் பிரியும் தலைவனைப் பிரிந்து தலைவி தனிந்துறையும் காலம் பெரிதாகலின், ஆண்டு மனச்சுழற்சியோடு பெருகிய வேட்கையின் கண் தலைவி நிகழ்த்தும் நிகழ்வினை பாகுபடுத்த இடமுண்டு அதனைப்

1. பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.
2. பருவமன்றென்று வற்புறுத்திய தோழிக்குத் தலைவி வன்புறை எதிரழிந்து சொல்லியது.
3. பருவமன்றென்று வற்புறுத்தின தோழிக்குத் தலைவி பருவமே என்றழிந்து சொல்லியது.
4. பருவம் கண்டழிந்த தலைவி கொன்றைக்குச் சொல்லுவளாய்த் தோழி கேட்பச் சொல்லியது.
5. பருவம் அன்று என்று வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் ஆற்றாது கூறியது.
6. மாலைப்பொழுது கண்டு ஆற்றாது தலைமகள் தோழியைப் பார்த்துக் கூறியது.
7. தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குத் தலைவி ஆற்றுவள் என்பது பட மொழிந்தது.
8. பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது.

9. பொருள்வயின் பிரிந்து போய் தலைமகனைக் காய்ந்து தலைமகள் தானே கூறிக்கொண்டது.

எனப்பகுத்து விளக்க இடமுண்டு.

**பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது**

இத்துறையில் "பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் 'முப்பத்தாறு பாடல்கள்' அமைந்துள்ளன"[84]. அவற்றுள் தலைவி, தலைவன் குறித்துச் சென்ற இளவேனில் பருவம் கண்டும், கார்காலம் கண்டும் வருந்துகிறாள்.

**இளவேனில் கண்டு வருந்துதல்**

தலைவன் இளவேனிற் பருவத்தில் வருவதாகப் பிரிந்து சென்றான். பிரிந்து சென்றவன் திரும்ப வரவில்லை. அதனால் தலைவி துன்பமெய்தினாள். அத்துன்ப உணர்வைத் தலைவி தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். அதனைக் கண்ணன் சேந்தனார்,

"புன்னை பொறிமலரும் பூந்தன் பொழியெல்லாம்
செங்கட் குயிலக வும்போழ்து கண்டும்
பொருள்நசை உள்ளம் துரப்பத் துறந்தார்
வருநசை பார்க்குமென் னெஞ்சு"[85]

எனப் புலப்படுத்துவர். புன்னை மரங்கள் சிவந்த அரும்பினை அரும்பின; குளிர்ந்த மேகங்கள் விலகின; நன்மை செய்த இளவேனிற் காலத்தை என் கண்கள் காணும் போதெல்லாம் உள்மனம் துயரப்பட்டு வருந்துகிறது. ஏனெனில், தலைவன் கூறிய உறுதிமொழிகளையெல்லாம் வேனிற்பருவம் வருதலால் குயில்கள் கூவி பொய்யாக்கின. குயில் கூவி அழைக்கும் வேனிற்காலத்து வரவு அறிந்தும் பொருள் அவாக் கொண்டுப்போன நம் தலைவன் வரவை என் கண்கள் எதிர்நோக்குகிறது.

பொன்னிறம் பொருந்திய பவளத்தைப் போன்று பூத்த மரங்கள் என்னை வருத்துகின்றன. ஆதலால் துன்பம் மிகுகிறது. பொருளுக்காகப் பிரிந்து சென்ற தலைவன் இளவேனில் பருவம் வந்தும் வரவில்லை நான் எவ்வாறு பொறுத்துக் கொள்வது எனத் தலைவி புலம்புகிறாள்.

இளவேனிற் காலத்தின் வரவை மரங்களின் மலர்ச்சியும், குயில்களின் இனிய இன்ப ஓசையும் உணர்த்தின. அவை கண்டு தலைவியின் மனம் ஒருநிலைப்படாது மனப்போராட்டத்திற்குள்ளானது. அப்போராட்டத்தினால், தலைவி துன்பத்தின் உயர்நிலைக்கு உள்ளானதை இதனால் உணரமுடிகிறது.

**கார்காலம் கண்டு வருந்துதல்**

கார்காலத்தின் வரவினை ஆய்வுக்குட்பட்ட அகநூல்கள் முறைப்படுத்தியுள்ளன. தலைவியின் துன்ப உணர்வே அப்பாடல்களில் மேலிடுகின்றன. முல்லைநிலம் நாடக அரங்கமாகவும், முகில் கூட்டம் இடிக்குரலான பாடலைப்பாடவும், வண்டுகள் யாழ் இசைக்கவும், மயில் கூட்டங்கள் தோகை விரித்து ஆடவும், செங்காந்தள் மலர்கள் பாராட்டிக் கைகளை அசைக்கவும் கார்காலம் வந்தது எனத் தலைவி கூறுகிறாள். அதனைக் கணிமேதாவியார்,

“கானம் கடியரங்காக் கைம்மறிப்பக் கோடலார்
வானம் விளிப்பவண் டியாழாக – வேனல்
வளரா மயிலாட வாட்கண்ணாய் சொல்லாய்
உளராகி உய்யும் வகை”[86]

எனச் சுட்டுவர். தன்னைத் தவிர்த்து பிறவெல்லாம் அக்காலத்து மகிழ்ச்சியாக இருப்பதைத் தலைவி கண்ணுற்றாள். அதனால் தலைவன் பால் அவளுக்குச் சினம் வந்திருக்கக்கூடும். அச்சினமே, அவளைத் துன்பத்துள் ஆழ்த்தியது என்ற கருத்து ஈண்டு பெறப்படுகிறது.

**பருவமன்றென்று வற்புறுத்திய தோழிக்குத் தலைவி வன்புறை எதிரழிந்து சொல்லியது**

இத்துறையிலமைந்த "ஒன்பது பாடல்களைத்"[87] திணைமாலை நூற்றைம்பதில் காணமுடிகிது. அவற்றை,

- ✶ கார்காலத்தின் வரவும் தலைவியின் துன்பமும்
- ✶ மாலைக்காலத்தின் வரவும் தலைவியின் துன்பமும்
- ✶ மாலைப்பொழுது கண்டு துயறுற்றாளைச் சொல்லியது
- ✶ தலைவி ஆற்றிருப்பேன் என்பதுபட மொழிந்தது

எனப்பகுத்து விளக்க முடியும்.

கார்கால வரவை தலைவி உணர்ந்தால் துன்பம் பல பெருபவளென நினைத்தாள் தோழி. அதனால் தலைவியிடம் அது கார்காலம் அன்று எனக்கூறினாள். அதனைத் தலைவி நம்பவில்லை. நம்பாததற்குரிய காரணங்களைத் தோழிக்குக் கூறுகிறாள். அதுவே வன்புறை எதிரழிவு ஆகும்.

கார்காலத்தில் முல்லைநிலம் வளம்பல பெற்றிருந்தது. அந்நிலத்திலுள்ள கொன்றை மரங்கள் மலர்ச்சி பெற்றிருந்தன; அம்மரங்களில் பொன் போன்ற மலர்கள் மலர்ந்து மணம் பரப்பின; பெண்டிரின் கூந்தலைப் போலக் காய்கள் காய்திருந்தன; அம்மரங்களிலுள்ள மலர்களில் வண்டுகள் துத்தமென்ற பண்ணைப்பாடின. இவைகளெல்லாம் கார்காலத்தின் வரவே. அவ்வரவு கண்டு தலைவியின் மனம் துயர்நிலை எய்கிறது. அதற்குக் காரணம் தலைவன் வருவதாகச் சொல்லிப் பிரிந்த கார்காலம் அது. அக்காலத்தில் தலைவன் வாராததால் தலைவி வருத்தமுற்றாள். அதனைக் கணிமேதாவியார்,

"கார்தோன்றிப் பூவற்ற காந்தள் முகைவிளக்குப்
பீர்தோன்றித் தூண்டுவாள் மெல்புரல்போல்–நீர் தோன்றித்
தன்பருவம் செய்தது கானம் தடங்கண்ணாய்
என்பருவம் அன்று என்றி இன்று"[88]

என்பர். வீட்டு விளக்கானது மங்கி எரிவதால் பீர்க்கம் கொடியின் பொன்நிறம் பெற்று விளங்குகிறது. அதனைத் தூண்டி எரியச் செய்பவளது மென்மையான விரலைப் போன்று காந்தள் அரும்புகள் கார்த்திகை மலர்கள் மீது பொருந்தி நிற்கின்றன. மழையால் முல்லை நிலம் நிரம்பப் பெற்றுக் கார்பருவத்தை விளக்கலாயிற்று. இவைகளெல்லாம் கார்காலத்தில் நிகழ்வன. அவற்றைக் கண்ணுற்ற நீ யான் வருந்துவேனென உண்மையை மறைத்து இது கார்காலமன்று எனப் பொய்யுரைக்கின்றாய் எனத்தலைவி தோழியிடம் பேசுகிறாள். தலைவி தலைவன் பால் கொண்ட அன்பின் மிகையாலே அவன் வராத காலத்துத் துன்பம் பல பெறுகிறாள் என்பது கருத்து. தலைவியின் மனத்தவிப்பை ஈண்டு காணமுடிகிறது.

தலைவி கார்காலத்தில் மலர்ந்துள்ள வெண்காந்தள் மலரினைக் கண்ணுற்றாள், அதனால் துன்பம் பெற்றாள். அந்நிலையைக் கணிமேதாவியார்,

“உகவும்கார் அனறென்று ஊரார் அதனைத்
தகவ தகவன்றென் றோரேன் – தகவேகொல்
வண்துடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்
வெண்குடையாம் தண்கோடல் வீந்து”[89]

எனக்கூறுவர். வெண்காந்தள் துடுப்பு போல் அரும்பி, பாம்பைப் போல் நீளம் பெற்று, கைவிரல் போல் விரிந்து வெண்மையான குடைபோன்று காணப்படுகிறது. அதனைப் பொய்யெனக் கூறுகிறாயா? எனத் தலைவி தோழியிடம் வன்புறை எதிரழிகிறாள். வெண்காந்தள் கார்காலத்தில் மலரும் தன்மையது என்பதை இக்கருத்து உணர்த்தும்.

தலைவி வன்புறை எதிரழிந்து பேசுவதற்குக் காரணம் தோழி உண்மையை மறுத்துப் பொய் கூறுவதேயாகும். தோழி பொய் கூறுவது தலைவியின் நலன் கருதியே. தலைவியின் உயிர்க்கு ஏதும் இடர்பாடு – இன்னல் நேரிட்டுவிடக்கூடாது என்றெண்ணி தோழி செயல்படுகிறாள்; தலைவி உள்ள நிலையை அமைதியுறச் செய்ய முயல்கிறாள். ஆனால் அது இயலாமல்

*போகிறது. தலைவி உண்மை நிலையறிந்து உள்ளத்தவிப்புக்கு ஆளாகிறாள் என்பது கருத்தாகும்.*

*கார்காலத்தில் பெய்யும் மழை, அக்காலத்தில் இன்புற்றுத் திரியும் அன்றில் பறவை, அக்காலத்தில் எழும் ஆம்பல் குழல் ஓசை, கடலின் ஓசை ஆகியன கண்டுத் தலைவி துன்பம் எய்துகிறாள். அவள் துன்புற்று எதிரழிந்து மொழிவதைக் கணிமேதாவியார்,*

*"ஒருத்தியான் ஒன்றல பல்பகை என்னை*
*வீர்தியாக் கொண்டன வேறாய்–பொருந்தின்*
*மடலன்றில் மாலை படுவசி ஆம்பல்*
*கடலன்றிக் காரூர் கறுத்து"*[90]

*எனக் கூறுவர். தலைவியின் துன்ப உணர்வும், ஏக்க உணர்வும் ஈண்டு வெளிப்படுகின்றது.*

*மழை பெய்தலால் மரம், செடி முதலியன தழைத்தன; அதனால் என் மேனி ஒளி கெட்டது; கண்கள் ஒலி இழந்தன; தலைவனைப் பிரிந்தமையால் நலத்தை இழந்துவிட்ட என் விரல்கள் நாட்களை எண்ணித் தேய்கின்றன; என் தோள்களும் அழகை இழந்துவிட்டன எனக்கூறித் தலைவி வருந்துகிறாள். பருவம் அல்லாப் பருவத்திற்கு என் உயிரைப் பருவம் என்று எண்ணி கண்ணீரை நீராய் கொண்டு தாரை வார்த்துத் தந்தேன் எனக் கவன்றாள் தலைவி. அதனைக் கணிமேதாவியார்,*

*"ஒருவந்த மன்றா லுறைமுதிரா நீராற்*
*கருமந்தான் கண்டழிவு கொல்லோ – பருவந்தான்*
*பட்டின்றே என்றி பணைத்தோளாய் கண்ணீரால்*
*அட்டினேன் ஆவி அதற்கு"*[91]

*எனச் சுட்டுவர். தலைவியின் வருத்தத்தினை இப்பாடல் ஈண்டு சுட்டுகிறது.*

ஈச்சம் பழத்தின் நிறமுடைய மேகமானது, கடல்நீரை அருந்தி ஐந்து நிறங்களை உடைய வானவில்லை எழுதி வைத்தாற் போன்று நான்கு திசைகளிலும் ஒன்றாய் பரவி இடிகளை முழங்கும். அப்பொழுது எழுகின்ற வானவொளியைப் போல பூத்து நின்றது கொன்றை மரம். அம்மரத்திடம் தனது துன்பத்தைத் தலைவி வெளிப்படுத்துகிறாள். அதனைக் கணிமேதாவியார்,

"ஐந்துருவின் வில்லெழுதி நாற்றிசைக்கு முந்நீரை
இந்துருவின் மாந்தி இருங்கொண்மூ – முந்துருவின்
என்றாய் உருமுடைத்தாய்ப் பெய்வான் போற் பூக்கென்று
கொன்றாய் கொன்றாய்எற் குழைத்து"[92]

என மொழிவர். தலைவி பேசாப்பொருளிடம் பேசி தன் வருத்தத்தைத் தீர்க்கிறாள் என்பது கருத்து.

உனக்குக் கண் இருப்பது உண்மையானால், என் துன்பம் கண்டு சிரிப்பதை விடு; இது கார்காலமன்று என நீ கூறும் சொல் என்னை ஆற்றுவித்தற்காகவேயன்றி உண்மையில் எனக்கு ஆதரவாக இல்லை எனத் தலைவி தோழியிடம் உரைப்பதைக் கணிமேதாவியார்,

"கண்ணுள வாயின் முல்லையல்லை காணலாம்
எண்ணுள வாயின் இறவாவா – லெண்ணுளவாம்
வன்றொழிய நோய் மொழிச்சார் வாகா துருமுடைவான்
ஒன்றொழிய நோய்செய்த வாறு"[93]

எனப் புலப்படுத்துவர். தோழியின் பேச்சைத் தலைவி உண்மையென நம்பவில்லை; அதனை ஆறுதலாகவே கொள்கிறாள் என்ற கருத்து ஈண்டு உணர்த்தப்பட்டுள்ளது.

**மாலைக்காலத்தின் வரவும் தலைவியின் துன்பமும்**

மாலைக்காலத்தின் வரவால் தலைவி துன்பம் பல பெறுகிறாள். அவள் துயராற்றாது மொழிவதாக இருபாடல்கள் "திணைமாலை

நூற்றைம்பதில்”[94] உள. தலைவனைப் பிரிந்துறையும் தலைவிக்கு மாலைக்காலம் துயரினை ஏற்படுத்தியதாக இலக்கியங்கள் மொழிகின்றன. அதனைக் கணிமேதாவியார்,

“இருள்பரந்து ஆழியான் தன்னிறம்போல் தம்முன்
அருள்பரந்த வாய்நிறம் போன்று – மருள் பரந்த
பால்போலும் வெண்ணிலவும் பையர வல்குலாய்
வேல்போலும் வீழ்துணையி லார்க்கு”[95]

எனக் கூறுவர். தலைவியின் உள்ளத்தில் தலைவன் குறித்த உணர்வுகளை மாலைப்பொழுது ஏற்படுத்தியது. வேல் பாய்ந்தவன் துயில் மறந்தது போல யான் மாலைப் பொழுதின் வரவால் தாழாத துன்பம் பெறுகிறேனெனத் தலைவி கூறுகிறாள். வேல்பாய்ந்தவன் துயில் மறந்ததற்குக் காரணம் அதன் துன்பமே. அதுபோல மாலைப்பொழுதால் தலைவி துன்பமடைகிறாள். வேலும், மாலைப்பொழுதும் இங்கு துன்பத்திற்குக் காரணமாக அமைந்தன.

தலைவன் பொருள் தேடச் செல்கிறான். அப்பிரிவைத் தாளாதத் தலைவி தோழியிடம் தன் வருத்தத்தை வெளிப்படுத்துகிறாா். அதனைக் கணிமேதாவியார்,

“கள்ளிசார் காரோமை நாரில்பூ நீள்முருங்கை
நள்ளியவேய் வாழ்பவர் நண்ணுபவோ – புள்ளிப்
பருந்து கழுவோடு வம்பலர்ப் பார்த்தாண்டு
இருந்துறங்கி வீயு மிடம்”[96]

என்பர். புள்ளிகளையுடை பருந்துகள் கழுகுடன் சேர்ந்து புதிதாக வழியில் வருபவனின் பொருளைக் கவர்ந்து செல்ல எதிர்நோக்குவது போலப் பாலை நிலப்பகுதியில் கள்வர்கள் இருப்பர். இவ்விடத்தே நல்வாழ்வை வாழ முடியுமா? எனத் தலைவி தன் வருத்தத்தைத் தோழியிடம் உரைக்கிறாள்.

**மாலைப்பொழுது கண்டு துயருறாதாளாய்ச் சொல்லியது**

இத்துறையில் ஒரு செய்யுள் அமைந்துள்ளது (தி.மா.நூ.123). அதில் தலைவி குறித்த பருவத்தின் கண் வந்த தலைமகனைப் புணர்ந்திருந்தாள். அந்நிலையில் அவளது உள்ளத்தில் மகிழ்ச்சி பெருகியது. அம்மகிழ்ச்சியினால் அவள் மொழிவதனைக் கணிமேதாவியார்,

"இம்மையாம் செய்ததை இம்மையே யாம்போலும்
உம்மையே ஆம்என்பா ரோரார்கா – அம்மை
எளிய ரெனநலிந்த ஈர்ங்குழலா ரேடி
தெளியச் சுட்டப்பட்ட வாறு"[97]

என வெளிப்படுத்துவர். தலைவன் வாராத காலத்தில் மாலைக்காலத்துக் குழலோசை என்னை வருத்தியது. இப்பொழுது தலைவன் உரிய காலத்தில் வந்ததால் அக்குழலோசையால் யான் துயர்பெறவில்லை என்பதுபடத் தலைவி மொழிகிறாள். தலைவியின் உள்ளத்தில் இன்ப உணர்வு நிலை பெற்றிருத்தலை ஈண்டு காணமுடிகிறது. நிகழ்காலத்து இன்ப உணர்வு, கடந்தகால துன்ப உணர்வை நினையத் தூண்டியது என்பது கருத்து.

**தலைவி ஆற்றியிருப்பேன் என்பதுபட மொழிந்தது**

தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவள் என்பதுபட மொழிந்ததாக "எட்டுப் பாடல்கள்"[98] ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் அமைந்துள. இப்பாடல்களில் தலைவன் கடந்து சென்ற வழியின் அருமைப்பாடும், தலைவியின் நிலைப்பாடும் கூறப்பட்டுள்ளன. தலைவன் சென்ற வழியிடத்துள்ள மூங்கில் புதர்களில் காட்டுப்பூனை தன் குட்டிக்கு இறைதேடும்; புறாக்கள் எழாலுடன் போர் செய்யும்; நிலத்தூர் வாயில்கள் தோறும் அச்சம் தரும் உடுக்கைகள் ஒலிக்கும்; விற்போரால் வாழ்வை நடத்தும் மறவர்களின் ஊர் இடையிடையே காணப்படும்; யானைகள் குடிப்பதற்கு நீர் இல்லாது வீழ்ந்து கிடக்கும்;

வேடர்கள் கொள்ளக்கூடிய வில்லுடன் வழியில் செல்பவரைத் தாக்கித்திரிவர் வேடர்கள் வழியிடையே கொன்று குவித்த மானையும், அவற்றின் கொழுப்பினையும் உண்ட பேய்கள் அங்குள்ள நடுகல்லின் நிழலில் துயிலும் என்கிறாள் தலைவி.

அவ்வழியிடைப் பிரிந்து சென்ற தலைவனை நினைத்து என் கொங்கைகள் தளர்கின்றன; தோள்கள் வளையல்களுடனே சேர்கின்றன; தலைவன் தளர்ச்சி இல்லாதவர் ஆயின் நானும் தளர்ச்சியின்றி இருப்பேன்; தலைவன் பிரிந்து சென்ற பாலை நிலத்தின் கொடுமை நினைத்து யான் வருந்துகின்றேனன்றி அவன் பிரிவாற்றாமையால் அன்று; அவர் பிரிந்து சென்றவிடத்து எவ்வித இடையூறுமில்லாமல் விரைவாக மீள்வார் என்ற நம்பிக்கையில் நான் ஆற்றியிருக்கிறேனெனத் தலைவி உரைக்கிறாள். தலைவியின் வருத்தத்தினை மூவாதியார்,

"முள்ளுடை மூங்கில் பிணங்கிய சூழ்படப்பை
புள்ளி வெருகுதன் குட்டிக்கு இரைபார்க்கும்
கள்ளர் வழங்கும் சுரமெண்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி"[99]

எனச் சுட்டுவர்.

**பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி உடன்படாது சொல்லியது**

ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் இத்துறையில் "ஒன்பது பாடல்கள் அமைந்து காணப்பெறுகின்றன"[100] தலைவியின் துன்ப உணர்வு இப்பாடல்களில் வெளிப்படுகிறது.

"மூங்கில் முத்துக்களைச் சிந்துவன போல யான் அணிந்துள்ள வளையல்கள் கழன்று வீழ்கின்றன; என் உள்ளம் நாணத்தை இழந்து இறவாது உயிருடன் சென்று தலைவனைப் பார்க்க விரும்புகின்றது எனத் தலைவி வருந்துகிறாள்"[101].

“பொருளைவிட அருள் பெரியது எனத் தலைவன் பிரிந்து சென்றுள்ளான். கொடுமையுடைய காட்டு வழியே சென்ற தலைவன் வெற்றி அடைவான். எனவே, பொருள் வயின் பிரிதல் பொல்லாத ஒன்றாகும்; அறிவுடையார் யாரும் பாலை நிலக்காட்டின் தன்மை உணர்ந்து செல்லமாட்டார். ஆதலால் தலைவன் செல்வது நல்லதாகாது எனத் தலைவி தலைவன் பிரிவிற்கு உடன்படாது மொழிகிறாள்”[102].

தலைவன் தன்னைப் பிரிந்து பொருள் தேடுவதற்காகச் செல்லக்கூடாது எனத் தலைவி நினைக்கிறாள். தலைவன் பிரிந்து செல்லும் காட்டுவழியின் கொடுமையைக் கண்டு தலைவியின் உள்ளம் அச்சமுறுகிறது. அவ்வச்சமே, பொருளைவிட அவன் உயிருடன் வாழ்தலே நலம் பயப்பதாகுமென அவளை அவ்வாறு மொழிய வைக்கிறது.

**தலைவி காய்ந்து கூறியது**

பொருள்வயிற் பிரிந்து போன தலைமகனைக் காய்ந்து தலைமகள் தானே கூறுவதாக ஒரு செய்யுள் அமைந்துள்ளது (ஐந்.எழு.29). இதில் தலைவியின் மனத்தவிப்பை உணரமுடிகிறது. அதனை மூவாதியார்,

“பேழ்வா யிரும்புலி குஞ்சரம் கோள்பிழைத்துப்
பாழூர்ப் பொதியில் புகப்பார்க்கும் ஆரிடைச்
சூழாப் பொருள்நசைக்கட் சென்றோ ரருணினைந்து
வாழ்த்தியோ மற்றோ உயிர்..”[103]

என்பர். வலிமை மிகு புலி யானையைக் கொள்வதற்காகத் தப்பிச்சென்று ஊரின் மன்றத்தில் புகுந்து உணவை நாடி நிற்கும். அக்கொடுமையுடைய பாலை நிலத்தின்கண் சென்ற தலைவனின் அருளை விரும்பி இன்னும் சாகாமல் இருக்கிறேன் எனத் தலைவி தனக்குத்தானே புலம்புகிறாள். தலைவனிடத்துத் தலைவி கொண்ட அன்பின் மேன்மையை இதனால் உணரமுடியும்.

எட்டுத்தொகை நூல்களில் தலைவி கூற்றாக அமைந்த பிரிவுப் பாடல்கள் பல. கற்பியலில் தொல்காப்பியர் கூறும் தலைவி கூற்றுப் பாடல்கள் முழுவதையும் அடக்க இளம்பூரணராலும், நச்சினார்க்கினியராலும் இயலவில்லை. அடக்கவியலாத பாடல்களில் காணப்படும் கூற்றுக்களை இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே"[104] என்றும் "ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்"[105] எனக்குறிப்பர். பொருள் முதலியவற்றிற்காகப் பிரியும் தலைவனை நினைந்து வேட்கைப் பெருகிய நிலையிலும், வாழ்க்கையின் இன்றியமையாத பொருள்வயிற் பிரிவின்போதும், இன்பமும், துன்பமும் ஒருசேர உணர்ந்த நிலையிலும் தலைவியிடத்துக் கூற்று நிகழ்வதைச் சங்க இலக்கியம் உணர்த்தும்.

**தொகுப்புரை**

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் சிறப்புப்பெறும் தலைவியின் களவு, கற்புப் பாக்கள் நூற்று அறுபத்தொன்பதாக உள.

மறைத்தவள் காண்டல், மறைந்த ஒழுக்கம் எனச்சுட்டப்பெறும் களவுக் கூற்றுப்பாடல்கள் முப்பத்தொன்பதாகும். ஆய்வுக்குட்பட்ட அக இலக்கியங்களில், தலைவி கூற்றாக உள்ள களவுப் பாக்களின் பொருண்மைகள் அறத்தொடு நிற்றல், காமம்மிக்கக் கழிபடர் கிளவி, வரைவு வேட்கை, வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிந்த காலத்து எழுந்த வருத்தம் எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

எட்டுத்தொகையில் தலைவி அறத்தொடு நிற்கும் பாக்கள் உள. அவை இச்செறித்து மேனி வேறுபட்ட நிலை, நொதுமலர் வரைவு வழி நிலை, வேற்று வரைவு நிலை என்ற நிலைகளில் வெளிப்படுகின்றன. பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் தலைவி அறத்தொடு நிற்பதாக இரண்டு பாடல்கள் உள. அவற்றை எட்டுத்தொகை இலக்கியங்களோடு

ஒப்பிட்டுக் காணுகையில் இச்செறித்து மேனி வேறுபட்ட நிலையில் மட்டும் அவை பொருந்தியுள்ளன.

காமம் மிக்க கழிபடர் கிளவியைத் தொல்காப்பியர் காமஞ் சிறப்பினும் பாற்கிளவி என்று கூறுவர். இதற்கு இளம்பூரணர் மூன்று செய்யுளினை மேற்கோளாகக் காட்டுவர். அவற்றுள் இரண்டு செய்யுட்கள் பதினென் கீழ்க்கணக்கு அகநூல்களில் அமைந்தவை. நச்சினார்க்கினியர் நான்கு செய்யுள்களைக் காட்டுவர். அவற்றில் ஒன்று ஐந்திணை ஐம்பதில் இடம் பெற்றுள்ளதாகும்.

காமமிக்கக் கழிபடர்க்கிளவி எனும் துறையிலமைந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள. தலைவி குருகு முதலியவற்றை நோக்கிக் கூறுவதாக ஐந்து பாடல்களும், திங்கள், பொழுது, கடல், நண்டு, தும்பி, ஆறு ஆகியவற்றைக் கண்டு நெஞ்சொடு கூறுவதாக ஆறு பாடல்களும் சங்க இலக்கியத்தில் அமைந்துள்ளன. பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் மேற்குறித்த துறையில் ஏழு பாடல்கள் அமைந்துள்ளன. அவை தலைவி நண்டு, நெஞ்சு, கடல், புறா, நாரை ஆகியவற்றை நோக்கிக் கூறுவதாகக் காணப்படுகின்றன.

வரைவு வேட்கைக் கூற்றுக்களாகத் தொல்காப்பியர் மொழிவன ஒன்பதாகும். பொழுது ஆறும் புரைவது அண்மையின் அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும் எனும் கூற்றிற்கு இளம்பூரணர் இரண்டு செய்யுட்களையும், நச்சினார்க்கினியர் மூன்று செய்யுட்களையும் சுட்டுவர். எட்டுத் தொகையில் மேற்குறித்த கூற்றிற்குப் பத்துப்பாடல்கள் அமைந்து காணப்பெறுகின்றன. ஆயின், பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் (ஐந்திணை எழுபதில்) ஒரு பாடல் மட்டும் இடம் பெற்றுள்ளது.

களவறிவுரினும் எனும் கூற்றிற்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் ஓர் இலக்கியத்தை மேற்கோளாகக் காட்டுவர். எட்டுத்தொகையில் ஒன்பது பாடல்கள் இக்கூற்றிற்கு, மேற்கோளாய் அமைந்துள்ளன. அவை அலர்,

மேனிவேறுபாடு, தந்தை உணர்ந்தமை, அன்னை அறிந்தமை ஆகிய சூழல்களில் காணப்பெறுகின்றன. ஆனால், கீழ்க்கணக்கு அகநூல்களில் அலர் எனும் சூழலில் மட்டும் ஒரு செய்யுள் அமைந்துள்ளது.

வரைவிடை வைத்த காலத்து வருந்தினும் எனும் கூற்றிற்கு இளம்பூரணர் ஒரு செய்யுளைச் சுட்டுவர். நச்சினார்க்கினியர் தொடுத்த மொழியான் வகுத்தனர் கோடல் எனும் தந்திர உத்திகளாகக் கொண்டு பத்துச் செய்யுட்களைக் காட்டுவர்.

வரைவிடை மெலிவு, வரைவிடை ஆற்றாள், கனவு கண்டு வருந்தியது, வன்பொறை எதிரழிந்தது ஆகிய சூழல்களில் தலைவி வரைவிடை வருந்துவதாக எட்டுத் தொகையில் நாற்பத்தைந்து செய்யுட்கள் காணப்படுகின்றன. இக்கருத்தமைவு நிலையில், கீழ்க்கணக்கு அகநூல்களில் பதினாறு பாடல்கள் உள்ளன. அவை தலைவியின் உள்ளத் தவிப்பைப் புலப்படுத்துகின்றன.

கற்பில் தலைவியின் ஊடலுக்குரிய கூற்றுக்களாகத் தொல்காப்பியர் மொழிவது பதினாறாகும். அவற்றுள் ஐந்து கூற்றுக்கான அகப்பாடல்கள் மட்டுமே கீழ்க்கணக்கு அகநூல்களில் அமைந்துள.

கொடுமை ஒழுக்கம் தோழிக்குரியவை எனத் தொடங்கிவரும் கூற்றிற்கு இளம்பூரணர் ஐந்து செய்யுட்களையும், பல வேறுபட்டு வரும் நிலையின் கண்ணும் என்பதற்கு நச்சினார்க்கினியர் இருபத்தேழு செய்யுட்களையும் காட்டுவர். இவற்றிற்கு உரியதாக எட்டுத்தொகை நூல்களில் 28 செய்யுட்களும், கீழ்க்கணக்கு அகநூல்களில் ஆறு செய்யுட்களும் உள்ளன.

வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ என்பதற்கு ஆறு செய்யுட்களை இளம்பூரணர் கூறுவர்; நச்சினார்க்னியர் பத்துச் செய்யுட்களைக் கூறுவர். அவை பாணன், தோழி, ஆடை கழுவுவாள் ஆகியோர் வாயிலாக

வந்ததையும், ஆற்றாமை வாயிலாக வந்ததையும் விளக்கும். ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் உள்ள பாடல்கள் பாணனுக்கு வாயில் மறுத்தல், வாயில்களுக்கு வாயில் மறுத்தல், தோழிக்கு வாயில் மறுத்தலும், நேர்தலும், ஆற்றாமையால் கூறல் ஆகிய நிலைகளில் அமைந்துள்ளன.

தலைவன் பொருள் முதலிய காரணங்களால் பிரியும் நிலைகளில் தலைவிபால் நிகழும் கூற்றுக்களாகத் தொல்காப்பியர் கூறுவன இரண்டு.

பருவமன்றென்று வற்புறுத்திய தோழிக்குத் தலைவி வன்புறை எதிரழிந்து சொல்லியதாக ஒன்பது பாடல்கள் உள. அவை, கார்காலத்தின் வரவும் தலைவியின் துன்பமும், மாலைக்காலத்தின் வரவும் துன்பமும், மாலைப்பொழுது கண்டுத் துயருற்றாளைச் சொல்லியது, தலைவி ஆற்றிருப்பேன் என்பதுபட மொழிந்தது எனப் பகுக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி உடன்படாது கூறியதாகப் பதினைந்து பாடல்கள் உள. அவை தலைவியின் உள்ளப் போராட்டத்தையும், மனத்துயரினையும் வெளிப்படுத்துவனவாக அமைந்துள.

மாறன் பொறையனார், மூவாதியார், கணிமேதாவியார், புல்லங்காடனார் ஆகிய நால்வர் மட்டுமே தலைவி கூற்றுப் பாடல்களை இயற்றியுள்ளனர். அவர்களுள் தலைவி கூற்றுக் களவுப் பாடல்களை புல்லங்காடனாரும் (ஏழு பாடல்கள்), கற்புப் பாடல்களை கணிமேதாவியாரும் (பதினைந்து பாடல்கள்) மிகுதியாகப் பாடியுள்ளனர்.

தலைவி ஆற்றாமை மீதுரக் கூறியதாக அமைந்த களவுத் துறைக் குறிப்புப் பாடல்களே தலைவி கூற்றில் மிகுதியாக (பத்துப் பாடல்கள்) இடம்பெற்றுள்ளன.

பருவங்கண்டு தலைவி தோழிக்குக் கூறியதாகக் கற்புத்துறைப் பாடல்களே தலைவி கூற்றில் மேன்மையுற்று (முப்பத்தாறு பாடல்கள்) விளங்குகின்றன.

## சான்றெண் விளக்கம்

*1. மு.வரதராசன், இலக்கிய வரலாறு, ப.10*

*2. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், கற்பியல் 5*

*3. காண்க: அட்டவணை 1, 2, 3*

*4. மேலது, 2*

*5. ந.சுப்பு ரெட்டியார், அக்திணைக் கொள்கைகள், ப.155*

*6. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.68*

*7. தொல். பொருள். கள. 24*

*8. மேலது, 29*

*9. நாற்கவிராசநம்பி, நம்பியக்பொருள். 48*

*10. மேலது, 176*

*11. தொல். கள. 1058:3*

*12. தொல். பொருள். 112:3*

*13. ஐந்.ஐம்.20, ஐந். எழு. 13*

*14. ஐந்.ஐம். 20*

*15. ஐந். எழு. 13*

*16. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல், பொருள், களவு, நச்சினார் உரை. 440*

*17. ஐந். ஐம். 42, 43. தி.மா.நூற். 38, 74, கைந். 50, 51, 52*

*18. ஐந். ஐம். 42*

*19. அகநா. 170:7–8, 12–14*

*20. ஐந். ஐம். 43*

*21. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.180*

*22. தி.மா.நூற். 38*

*23. குறுந். 163*

24. தி.மா.நூற். 74

25. கைந்.50, 51, 52, 54, 58

26. கைந். 50

27. மேலது, 51:3–4

28. குறுந். 24:3–6

29. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் (இரண்டாம் பகுதி), ப.142

30. இராம.பெரியகருப்பன், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள்,ப.118

31. நா.பாலகிருட்டிணன், தொல், பொருள் வழி நற்றிணை ஓர் ஆய்வு, ப.167

32. தொல், பொருள், 2

33. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல், பொருள், களவு, நச்சி, உரை, ப.690–91

34. தொல். கள. 1057

35. தொல். பொருள். 111. 31–32

36. தொல். பொருள். களவு. 1058

37. மேலது, 1054

38. காண்க: அட்டவணை 2

39. ஐந். எழு. 14

40. தொல், பொருள், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, ப.206

41. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல். பொருள், களவு, நச்சிஉரை, ப.435

42. நா.பாலகிருட்டிணன், தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை ஓர் ஆய்வு, ப.60

43. ஐந், ஐம்.45

44. நற்.17, 136, குறுந்:13, 38, 311, 316, 320. ஐங்:133, அகம்:328

45. தொல். பொருள், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, ப.209

46. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல். பொருள். களவு. நச்சிஉரை, ப.440

47. கைந்.3

48. மேலது, 2

49. மேலது, 6

50. மேலது, 1

51. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல். பொருள். களவு. நச்சிஉரை, பொருள். 243, ப.753

52. மேலது, (நூ.241), ப.751

53. தொல். பொருள். கற்பு. 1088

54. மேலது, 12

55. காண்க: அட்டவணை, 2

56. தொல். பொருள். கற்பு. 1093

57. தொல். பொருள். இளஉரை. ப.272

58. சி.கணேசையர் (உ.கு.ஆ.) தொல். பொருள். களவு. நச்சிஉரை. ப.581

59. தி. மா. நூற். 152

60. தொல். பொருள். கற்பு. 1093

61. தி. மா. நூற். 128, 137, 147, 148, 153

62. ஐந். எழு. 42

63. தி. மா. நூ. 128

64. மேலது, 137

65. ஐந். எழு. 42

66. குறுந்.106, 293, 349, ஐங்.14, 17, 156, 167, 170, 271

67. தொல். கற்பு. 1139

68. மேலது, 1136

69. மேலது, 1057

70. மேலது, 1056

71. மேலது, 1095

72. காண்க: அட்டவணை, 2

73. ஐந். ஐம். 21

74. தி. மா. நூற். 136

75. தி. ஐம். 39

76. ஐந். ஐம். 26

77. மேலது, 29

78. தொல். அகத். 27

79. மேலது, 30

80. தொல். கற்பு. 184

81. இறை. அகப்பொருள், 34

82. தொல். பொருள். அகத். 985

83. மேலது, களவு. 1038

84. காண்க: அட்டவணை, 2

85. தி. ஐம். 14

86. தி. மா. நூற். 111

87. மேலது, 99, 103, 108, 118, 119, 120, 121, 122

88. மேலது, 118

89. மேலது, 119

90. மேலது, 120

90. மேலது, 103

92. மேலது, 104

93. மேலது, 108

94. காண்க: அட்டவணை, 2

95. தி.மா. நூற். 96

96. மேலது, 91

97. மேலது, 123

98. காண்க: அட்டவணை, 2

99. ஐந். எழு. 34

100. ஐந்.ஐம்.36, ஐந்.எழு.28, 30, 32, 33, 36, 37, தி.மொ.ஐம்.11, 18, தி.மா.நூற்.83, 84, 86, 91, 92, கைந்.58

101. ஐந். எழு. 30

102. மேலது, 28

103. மேலது, 29

104. தொல். பொருள். 988

105. மேலது, 967

# தோழி கூற்றுப் பாடற்திறன்

தலைவனும் தலைவியும் ஒன்றுகூடி மறைந்து, இணைந்து வாழும் இல்லற வாழ்க்கையில் முக்கியப் பங்கு வகிப்பவள் தோழி. அவள் சிந்தனைத்திறம் மிக்கவளாகவும், உலகியலை உற்று நோக்கி அறியக் கூடியவளாகவும் இருக்கிறாள். அகவாழ்க்கையில் இணைகின்ற தலைவன், தலைவி எனும் இரு புள்ளிகளையும் இணைக்கும் இணைகோடாக விளங்குபவள் தோழி. இத்தகைய சிறப்பிற்குரிய தோழியின் கூற்றுக்கள் தலைமை இலக்கியமாகிய சங்க இலக்கியத்துளும், பதினெண் கீழ்க்கணக்கு அக இலக்கியத்துளும் நீக்கமற நிறைந்து காணப்பெறுகின்றன. அத்தகைய அகநூல்களில் காணப்பெறும் தோழியின் களவு, கற்புப் பாக்களின் திறனை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**பாக்களின் எண்ணிக்கை**

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் தோழி கூற்றாக அமைந்த பாக்களின் எண்ணிக்கை நூற்று தொன்னூறாகும். அவை முறையே,

| | | |
|---|---|---|
| ஐந்திணை ஐம்பது | – | 20 |
| ஐந்திணை எழுபது | – | 21 |
| திணைமொழி ஐம்பது | – | 32 |
| திணைமாலை நூற்றைம்பது | – | 57 |
| கார்நாற்பது | – | 32 |
| கைந்நிலை | – | 28 |
| மொத்தம் | – | 190 |

என அமைந்துள. தோழி கூற்றைக் கேட்பவர்களாகத் தலைவன், தலைவி, செவிலி போன்றோர் அமைகின்றனர். அவை களவில் 99 பாடல்களும், கற்பில் 91 பாடல்களும் அமைந்துள்ளன.

**அக இலக்கணங்களில் தோழி**

தோழி குறித்த செய்திகளை அக இலக்கண நூல்கள் தெளிவாக விளம்பியுள்ளன. அதனை,

"தோழி தானே செவிலியது மகளே"[1]

என்ற நூற்பா விளக்கும். தோழியானவள் செவிலியின் மகளாவாள். இதனை நம்பியகப் பொருளும் சுட்டுகிறது.

தலைவன் தலைவியின் நன்மைகளை ஆராய்ந்து விளக்கும் திறமுடையவளாகவும், இன்ப துன்பத்தில் அருகில் இருந்து ஆறுதல் நிகழ்த்தும் நறுந்துணையாகவும் தோழி செயல்படுபவள் என்பதனை,

"சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே"[2]

என்ற அடி விளக்கும். களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் எந்தந்த இடங்களில் தோழி கூற்று நிகழ்த்துவாள் என்பதனைத் தொல்காப்பியக் களவியல், கற்பியல் என்ற பகுதிகள் விளக்கும்.

**களவில் தோழி**

களவு என்பது மறைந்து ஒழுகின்ற ஒழுக்கம். களவு பிறர்குரிய பொருளை மறையிற்கோடல் என்று இளம்பூரணர் கூறுவர். அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் களவு என்பர் முன்னோர்கள். "பிணி மூப்புகளின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும் திருவும் பருவமும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமையுடையராய தலைமகனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும் விடுப்பவும் இன்றி ஊழ் வகையில் தாமே எதிர்பட்டுக் கூறுவது"[3] என்று ந.சுப்புரெட்டியார் கூறுகிறார். "களவு என்னும் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னும் சொற்கேட்டுக் காமம் தீதென்பதூவும் அன்று, மற்று அவை உண்டு."[4]

களவு என்பது ஆரிய எண்வகை மணமுறைகளுள் காந்தருவத்தை ஒத்தது என்பர். காந்தருவமாவது காந்தர்வ குமாரரும், அவர் மகளிரும் தம்முள் எதிர்பட்டு மனமியைந்து கூடுதல் போலத் தலைவன் தலைவியும் மனைமியைந்து கூடுதல் போலத் தலைவன் தலைவியும் மனமியைந்து கூடுவதாகும். இதனைத் தொல்காப்பியர்,

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக்கூட்டம் காணுங்காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமயோர் இயல்பே"[5]

என்ற நூற்பா சுட்டும். களவு என்பது நான்கு நிலைகளில் நிகழும் என அக இலக்கண, இலக்கிய நூல்கள் சுட்டுகின்றன. இதனை,

"காமப்புணர்ச்சியும், இடந்தலைப்படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே"[6]

என்ற நூற்பா உணர்த்தும். அது காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியர் கூட்டம் என நான்கு நிலைகளில் நிகழும் என்கிறார் தொல்காப்பியர். இக்கருத்தை நாற்கவிராசநம்பியும்

"இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு
பாங்கற்கூட்டம் பாங்கியற்கூட்டம் என்று
உணர்த்திய களவிற் புணர்ச்சி நால்வகைத்தே"[7]

என ஏற்று உரைப்பர்.

களவு நிகழ்வில் தோழியற்கூட்ட மரபுகளே பெரும்பங்கு வகிக்கின்றன. அம்மரபுகள் மதியுடம்பாடு, சேட்படை நிறுத்தல், குறியிடம் சுட்டல், வரைவு, அறத்தொடு நிற்றல், உடன்போக்கு என அமைகிறது.

"களவு காலத்தில் தோழி நிகழ்த்தும் கூற்றுக்களை முப்பத்திரண்டு வகைகளாகக் கூறுவர் தொல்காப்பியர்."[8] நாற்கவிராசநம்பி தோழியற் கூட்டத்துள் நிகழும் நிகழ்வுகளை மதியுடம்பாடு, இரந்து பின்னிற்றல், சேட்படை, மடற்கூற்று, மடல்விலக்கு, குரைநேர்தல், மடற்கூற்று ஒழிதல், குறைநயப்பித்தல், நயத்தல், கூட்டல், கூடல், ஆயங்கூட்டல், நயத்தல், பகற்குறி, இரவுக்குறி, குறியிடையீடு, வரைவுவேட்கை, வரைவுகடாதல், அறத்தொடு நிற்றல் எனக்கூறுவர்.

பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கிய நூல்களில், தோழி கூற்றுக்களாக அமைந்துள்ள களவுப் பாக்களின் தொகை 99. அவற்றை,

1. சேட்படை
2. குறை நயத்தல், நயப்பித்தல்
3. குறியிடம்
4. வரைவு கடாதல்
5. அறத்தொடு நிற்றல்

எனப்பகுத்து விளக்க இடமுண்டு. இவற்றில் வரைவு கடாதல் துறைச்சார்ந்த பாடல்கள் மேன்மையுறுகின்றன.

### 1. சேட்படை

அகத்துறைகளுள் ஒன்று சேட்படையாகும். இது பாங்கியற் கூட்டத்துள் நிகழ்வதாகும். தலைவனைத் தோழி சேய்மையிற் செல்லுமாறு செய்தலாகும். சேட்படைக்குரிய நிகழ்வுகளை நம்பியகப்பொருள்,

"தலைவன் உட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலும் தலைவன் தலைவி
தன்னை உயர்தலும் நன்னுதற் பாங்கி"[9]

என விளக்கும். இத்துறையினதாகத் திணைமொழி ஐம்பதில் மூன்று பாடல்கள் உள. அவற்றை,

i) காவல் மிகுதி

ii) உற்றார் வெகுண்டு உரைப்பர்

iii) யானை இங்கு இல்லை எனல் என பகுத்துணர்த்த முடியும்

**காவல் மிகுதி**

குறிஞ்சித்திணையில் பின்னின்ற தலைமகனைக் காவல்மிகுதி சொல்லிச் சேட்படுத்தியதைக் கண்ணன் சேந்தனார்,

"விரைகமழ் சாரல் விளையுனங் காப்பார்
வரையிடை வாரன்பின்ஐய! உரைகடியர்
வில்லினர் வேலர் விரைந்துசெல் அம்பினர்
கல்லிடை வாழ்ந ரெமர்"[10]

எனப்புலப்படுத்துவர். இம்மனையில் வாழும் எம்குலத்தவர்களாகிய வேடுவர்கள், இங்கு விளைந்துள்ள புனத்தினைக் காவல் காக்கும் பொருட்டு வேலையும் கையில் ஏந்திக் கொண்டுக் கடுமையான சொற்களைப் பயன்படுத்துபவர்கள்; இரவில் எந்நேரமும் காவல் புரிபவர்கள் ஆகவே தலைவியைச் சந்திக்க இம்மலைப் பக்கம் வரவேண்டாமெனக் காவல்மிகுதி கூறிச் சேட்படுத்துகிறாள் தோழி.

**உற்றார் வெகுண்டு உரைப்பர்**

தலைவியைச் சந்திக்க வருவதை அவனது உற்றார் கண்டால் வெகுண்டு மொழிவதுண்டு. அதனைக் கண்ணன் சேந்தனார்,

"யானை யுழலும் அணிகிளர் நீள்வரைக்
காணக வாழ்க்கைக் குறவர் மகளிரே
மேனவிளைய வரவுமற் றென்னைகொல்
காணிறுங் காவர ரெமர்"[11]

என்பர். யானைகள் உலவித்திரியும் மலையின்கண் வாழும் எம் குரவர் மகளிரைக் காண வருகிறாய். அதனால் வரும் பயனென்ன? நீ எம்மவரின் கண்ணில் பட்டால் உன்னை அவர்கள் வெகுண்டு பேசுவார்கள் எனத் தலைவனிடம் தோழி கூற்று நிகழ்த்துகிறாள். தலைவனைத் தோழி வரைவிற்குத் தூண்டுவது இக்கருத்தால் புலப்படும்.

**யானை இங்கு இல்லை எனல்**

தோழியின் மதிநுட்பத்தைக் கண்ணன் சேந்தனார்,

"வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்தோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்து குருதியொழுகமற் றிப்புறம்
போந்த திலையே களிறு"[12]

என விளக்குவர். வேங்கை மலர்கள் எல்லாம் பூத்து மணம் வீசும் இம்மலையிலே நீங்கள் தேடிவந்த குருதியொழுகும் ஆண் யானை இல்லை. வளைந்த மூங்கிலையொத்த மெல்லிய தோள்களையுடைய நாங்கள் வாழுகிற இடத்து நீங்கள் தேடுகிற யானை இல்லை. ஆதலால் வேறு இடங்களுக்குச் செல்க என்கிறாள் தோழி. தலைவனிடம் தோழி நுண்மதி மிக்கவள். ஆகவே தான் தலைவன் யானையைத் தேடி வரவில்லை. தன் அருகே இருக்கும் தலைவியைக் காணவே வந்திருக்கிறான் என அறிந்து கொண்டு சேட்படுத்துகிறாள். இது தோழியின் மதிநுட்பத்தைக் காட்டுகிறது. இக்கருத்தை ஒப்புநோக்கும் வகையில்,

“கான ணண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்கவுளிபுக்கு
மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர் செல்வன் காதன் மகனே”[13]

என்ற நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது. தலைவியின் குலமுறை கிளத்தலைக் கூறித் தலைவனைச் சேட்படுத்தும் நோக்கில் இது அமைந்துள்ளது.

**2. குறைநயப்பித்தல், நயத்தல்**

இது பாங்கியற் கூட்டத் துறைகளுள் ஒன்று. தலைவன் குறைவுற்றதைத் தலைவிக்குப் பாங்கி எடுத்துக் கூறுதலே குறைநயப்பித்தலாகும். அது வலிதாகச் சொல்லி குறை நயப்பித்தல், மெலிதாகச் சொல்லி குறைநயப்பித்தல் என இருவகைப்படும். இதனை,

“தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தலும்
மறுத்தற் கடுமை மாட்டலும் தலைவன்”[14]

என்ற நூற்பா உணர்த்தும். தலைவன் தலைவியைத் தேடியே தினைப்புணத்திற்கு வந்தான் என்பதை உணர்ந்து கொண்டாள் தோழி. அதனை வெளிக்காட்டாமல் தலைவியிடம் தோழி கூறுவதனை மாறன் பொறையனார்,

“புனை பூந்தலையல்குற் பொன்னன்னாய் காரற்
தினை காத்திருந்தேம் யாமாக – விளைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு”[15]

எனக் கூறுகிறாள். வேட்டையாடுதலைத் தொழிலாகக் கொண்ட ஒருவன் தினைப்புனத்தே தான் தப்பவிட்ட விலங்கைத் தேடிவந்தான். வந்தவன் தன்னிடம் வினவினான். அவன் வந்த காரணம் வேறாக இருக்கக்கூடுமெனத்

தோழி தலைவியிடம் உரைக்கிறாள். தோழியின் மதிநுட்பத்தினை இங்கு அறியமுடிகிறது.

**தோழியை நயத்தல்**

மலைநாட்டுத் தலைவன் பூந்தழைகளை அடிக்கடி எனக்கு வந்து தருகிறான்; உன்னால் முடியக்கூடிய காரியம் ஒன்றுளது எனக்கூறுகிறான். வேங்கை மரத்தை ஒத்த அவனது கருத்து, யாது என்பது எனக்குப் புலப்படவில்லை எனத் தோழி தலைவியிடம் கூறுவதை,

"தன்குறையி தென்னான் றழைகொணருந் தண்சிலம்ப
னின்குறை யென்று நினைப்பினாய் – பொன்குழையு
நாள்வேங்கை நிழலு ணண்ணா எனவன் கொலோ
கொள்வேங்கை யன்னான் குறிப்பு"[16]

என்ற பாடலில் விளக்குவர் கணிமேதாவியார். தலைவன் வந்த காரணம் தோழிக்குத் தெரியும். இருப்பினும் அதை வெளிக்காட்டாமலேயே அறியாதவள் போலச் செயல்படுகிறாள் தோழி என்பது கருத்து. தலைவன் தலைவியை விரும்புவதைத் தோழி அவளிடம் குறிப்பாகப் புலப்படுத்துவாள். அதனை நக்கீரர்,

"சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்"[17]

என்ற பகுதி சுட்டும்.

**3. குறியிடம்**

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவியர் சந்திக்கும் இடமே குறியிடமாகும். பகலிலே சந்திக்குமிடம் பகற்குறி என்றும், இரவில் சந்திக்குமிடம் இரவுக்குறி என்றும் குறி தப்புதல் அல்லகுறி எனவும் கூறப்பெறுகிறது. இதனைத் தொல்காப்பியர்,

“குறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக் கிளந்த ஆற்ற தென்ப”[18]

என விளக்குவர்.

### 3.1 பகற்குறி

ஊரின் மதிற்புறமாய்த் தலைமகள் அறிந்து இணைவதற்குத் தகுதியான இடமே பகற்குறியாகும். இதனை,

“பகற்புணர் களனே புறனென மொழிப
அளவறி உணர வருவழியான”[19]

என்பர் தொல்காப்பியர். பகற்குறிக்கண் வந்த தலைமகனைக் கண்டு தோழி கூறுவதனைக் கணிமேதாவியார்,

“சார்ந்த மெறிந்துழுத சாரற் சிறுதிணைச்
சாந்த மெறிந்த விதன்மிசைச் – சாந்தங்
கமழக் கிளிகடியுங் கார் மயிலன்னா
ளிமிழக் கிளியெழா வார்த்து”[20]

என உணர்த்துவர். சந்தன மரங்களை அழித்துத் திருந்திய நிலத்தில் உள்ள தினையைக் காவல் செய்யும் பொருட்டுத் தலைவி அங்கு வருவாள். அவளை நீ அங்கு வந்து சந்தித்துக் கொள்வாயாக எனத் தலைவனுக்குப் பகற்குறியிடம் அறிவுறுத்துகிறாள் தோழி.

தலைவி விளையாடுமிடத்தை உணர்த்திப் பகற்குறி சுட்டுகிறாள் தலைவி. இவ்வகையில் மூன்று பாடல்கள் (திணை.நூற்.29, 44, 51) உள. ஓங்கி உயர்ந்த பலா மரங்கள் அடர்ந்த, காட்டாறுகள் விரைந்தோடுகின்ற, காந்தள் பூக்கள் நிறைந்துள்ள இடத்திலே தலைவியானவள் விளையாடுவாள் என்கிறாள் தோழி. அதனைக் கணிமேதாவியார்,

“பலா வெழுந்த பால்வருக்கைப் பாத்தி யதனோர்
நிலாவெழுந்த வார்மனனீடிச் – சுலாவெழுந்து
கான்யாறு கால்சீத்த காந்தளம்பூந் தன்பொதும்பர்
தான்றெத் தாழ்ந்த விடம்”[21]

என்பர். தாழை மரங்களும், கோங்கு மரங்களும் உயர்ந்துள்ள பூஞ்சோலையிடத்து மீன்களை உலர வைத்துள்ளனர் பரதவர். அவ்விடத்தே எமது தலைவி விளையாடுவாள் எனத் தலைவனுக்குப் பகற்குறி சுட்டுகிறாள் தோழி. அதனைக் கணிமேதாவியார்,

“கடும்புலால் புன்னை கடியுஞ் துறைவ
படும்புலாற் புட்கடிவான்புக்க – தடம்புலாந்
தாழைமா ஞாலற் றதெந்துயர்ந்த தாம்பொழி
லேழைமா னோக்கி யிடம்”[22]

என்பர். கடற்கரை சோலையை அடுத்துள்ள மணற்பரப்பில் மீன்களை உலர்த்தியிருக்குமிடத்தில் தலைவி இருப்பாள் என்கிறாள் தோழி. அதனை கணிமேதாவியார்,

“கடும்புலால் வெண்மணற் கானலுறு மீன்கட்
படும்புலால் பார்த்தும் பாகாது – மடும்பொலஞ்
சாலிகை போல்வலை சாலப் பலவுணங்கும்
பாலிகை பூக்கும் பயின்று”[23]

என்ற பாடலில் புலப்படுத்துவர். இதே கருத்தைப் பிறிதொரு பாடலும் சுட்டும். அதனைக் கணிமேதாவியார்,

“மாயவனும் தம்முறும் போல மறிகடலுங்
காளலுஞ்சேர் வெண்மணலுங் காணாயோ – கானல்
இடையெலா ஞாழலுந் தாழையும் மார்ந்த
புடையெலாம் புன்னை புகன்று”[24]

என்பர். தலைவனுக்குத் தோழியால் ஈண்டு பகற்குறியிடம் உணர்த்தப்படுகிறது. அதன் நோக்கம் தலைவனை அங்கு வரவழைக்கும் பொருட்டேயாகும்.

பகற்குறி சார்ந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. (நற்.28, 58, 187, 304, குறுந்: 152, 202) இக்கருத்தைத் தழுவியே பதினெண்கீழ்க்கணக்குப் பகற்குறி பாடல்களும் விளங்குகின்றன.

**இரவுக்குறி**

தலைவனும் தலைவியும் பெற்றோர் அறியா வண்ணம் இரவு நேரத்தில் சந்திக்குமிடமே இரவுக்குறி எனப்படும். இது இல்லத்தினருகிலேயே நடக்கும். அதனைத் தொல்காப்பியர்,

"இரவுக்குறியே இல்லகத்துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே
மனையக் புகாஅக் காலையான"[25]

எனக்கூறுவர். இரவுக்குறி கூட்டமானது தலைவியின் வீட்டு எல்லையில், வீட்டில் உள்ளோர் பேசும் பேச்சுக் கேட்கும் அண்மையில் ஓரிடத்து நிகழ்வதாகும். தலைவன் தற்செயலாகச் செல்பவன் போல் தலைவியின் மனையகத்துச் செல்லாத காலத்திலாம்"[26] என்று ஆ.சிவலிங்கனார் இந்நூற்பாவிற்கு உரை பகர்கிறார். இவ்விரவுக்குறி குறித்த செய்திகள் பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் அமைந்துள்ளன.

தலைவனின் வருகைக் கூறித் தலைவியைத் தோழி தேற்றுவதனைக் கண்ணன் சேந்தனார்,

"பிணிநிறந்தீர்த்து பெரும்பனைந்தோள் வீங்க
மணிமலைநாடன் வருவான்கொள் தோழி
கணிநிறை வேங்கை மலர்ந்து வண்டார்க்கும்
அணிநிற மாலைப் பொழுது"[27]

என்பர். மூங்கில் போன்ற தோள்களைப் பெற்ற தலைவனின் பிரிவால் உன் மேனியிடத்துப் பசலை படர்ந்தது. அதனை நீக்குதற் பொருட்டுத் தலைவன் மாலைப்பொழுதில் உன்னைச் சந்திக்க வருவானெனத் தலைவியைத் தோழி தேற்றுகிறாள். இக்கருத்தினைப் பிறிதொருப்பாடல் விளக்குகிறது.

> "ஏன லிடத்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக்
> கானவர் மக்கள் கனாலனக் கைகாய்த்தும்
> வானுயற் வெற்பன் வருவான் கொலன் தோழி
> மேனி பசப்புக் கெட"[28]

என்பர். தலைவன் இரவுக்குறி வருவான் என்பதைத் தோழி தலைவிக்கு ஈண்டு புலப்படுத்துகிறாள். இதற்குமாறாகத் தலைவனை இரவுக்குறி மறுக்கவும் செய்கிறாள் தோழி. அதனைக் கணமேதாவியார்,

> "திரைமேற் போந்தெஞ்சிய தெண்கழிக்கானல்
> விரைமேவும் பாக்கம் விளக்காக – கரைமேல்
> விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தும்
> படுவா யிருளகற்றும் பாத்து"[29]

எனப் பகர்வர். முத்துக்கள் கிடைக்கின்றக் கடற்கரைப் பட்டினத்தில் எங்கு பார்த்தாலும் விளக்குகள் உள்ளன. ஆகவே, இங்கு இரவுக்குறிக்காக வருவதை நிறுத்துவாயாக எனத் தோழித் தலைவனை எச்சரிக்கிறாள். இதன் நோக்கம் தலைவனை வரைவிற்குத் தூண்டுவதேயாகும்.

**குறி மறுத்தல்**

திணைமாலை நூற்றைம்பதில் நெய்தல் திணையில் இரவுக்குறி மறுத்தல் குறித்த பாடல் இடம்பெற்றுள்ளது. இதனை

"எங்கு வருதி யிருங்கழித் தண்சேர்ப்ப
பொங்கு திரைஉதைப்பப் போந்தொழிந்த–சங்கு
நரன்றுயிர்த்த நித்தில நல்லிருள்கால் சீக்கும்
வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து"[30]

என மொழிவர். பெரிய உப்பழிங் கழிகளையுடைய தலைவனே முத்துக்களின் ஒளி பரவியிருக்கும் இரவு நேரத்திலே தலைவியைக் காண வராதே என்கிறாள் தலைவனிடம் தோழி.

மனம் ஒன்றுபட்ட தலைவன் தலைவியர் இரவிலே சந்திக்கும் இடம் இரவுக் குறியிடமாகும். தோழியானவள் தலைவன் தலைவியின் நன்மை கருதி அவர்களைத் தக்க இடத்தில் சந்திக்க வைக்கிறாள். அதேபோல் ஊரார் அறியாமல் ஒழுகும் ஒழுக்கமாதலால் ஊராருக்குத் தெரியாமல் இருக்க வேண்டும் என்பதற்காகக் குறி மறுக்கவும் செய்கிறாள் தோழி.

**அல்லகுறி**

பகலிலும், இரவிலும் தலைவன் தலைவியர் சந்திக்கும் இடம் குறியிடமாகும். அவர்களைச் சந்திக்கவிடாமல் சில நேரங்களில் இடையூறு ஏற்படுவதும் இயல்பு. இதனை அகநூல் வல்லோர் அல்லகுறி என உரைப்பர். இது குறித்து நாற்கவிராசநம்பி "இரவுக்குறி இடையீட்டினுள் நிகழும் நிகழ்ச்சி தலைவனால் நிகழ்த்தப்படாமல் பிற வகையான இயற்கையால் நிகழும் அடையாளக் குறிப்பு"[31] என விளக்கம் தருவர்.

**இடையீட்டால் தலைவி வருந்துதல்**

"அல்ல குறிப்பிட்ட தலைமகற்குச் சொல்லுவாளாய்த் தோழி தலைமகட்குச் சொல்லியது" எனும் துறையில் தோழி தலைவிக்குச் சொல்வதாக அமைந்த பாடல் நெய்தல் திணையது. அதனை மாறன் பொறையனார்,

"தெண்கடற் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்து
ஒண்தடங்கண் துஞ்சற்க ஒள்ளிழாய் – நண்படைந்த
சேவலும் தன்னருகிற் சேக்குமா லென்கொலோ
பூந்தலை யன்றில் புலம்பு"[32]

எனக்கூறுவர். ஒளியினைக் கொண்ட அணிகலன்களை அணிந்த தலைவியே, தெளிந்த கடலினை அடுத்து, துறைமுகத்தை உடைய தலைமகன் இரவுக்குறி இடையீடுபட்டதால், உன்னைப் பார்க்காமல் சென்றுவிட்டான். நீ தனிமை அடைந்ததால், உன்னுடைய ஒளி பொருந்திய கண்கள் உறங்காமல் இருக்கின்றது என்று வருத்தப்பட்டுத் தோழி தலைவியிடம் கூறுகிறாள். தலைவியின் உள்ளத் தவிப்பை இப்பாடல் உணர்த்துகிறது.

**தலைவனின் தெளிவின்மை**

'அல்ல குறிப்பட்டுப் பெயர்ந்தமை அறியத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செல்லியது' எனும் துறையில் அமைந்துள்ள பாடல் ஒன்று அல்ல குறி குறித்து இயம்புவதை மாறன் பொறையனார்,

"கொடுமுள் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த ஒண்பூ
இடையு ளிழுதொப்பத் தோன்றிப் புடையெலாம்
தெய்வம் கமழும் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் தெளியக் குறி"[33]

என்பர். கொடிய முள்ளையும், பெரிய ஏடுகளையும் உடைய தாழை மரத்தினது மலர்கள் மலர்ந்து விளங்குகின்ற ஒளியையுடைய பூவானது நாற்புறமும் தெய்வமணத்தைப் பரப்புகிறது. அப்படிப்பட்ட நாட்டையுடைய தலைவன் நம்மால் கண்டுகொள்ள முடியாத குறியினைச் செய்துவிட்டான் என்று தோழி தலைவியிடம் கூறுகிறான். இங்கு தலைவன் தெளிவில்லாமல் இருந்ததால் குறி தப்பியது என்கிறாள் தோழி. இத்தெளிவின்மைக்குக் காரணம் தலைவி பற்றிய மயக்கமேயாகும்.

**குறி மயக்கம்**

தலைவன் சிறைப்புறமாக இருக்க அல்லகுறி நிகழ்ந்த சூழலை விளக்குகிறாள் தோழி. அதனை மாறன் பொறையனார்,

"அணிகடல் தண்சேர்ப்பன் தேர்ப்பரிமாய் பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன் கனிவிரும்பும்
புள்ளரவம் கெட்டுப் பெயர்ந்தேன் ஒளியிழாய்
உள்ளுருகு நெஞ்சினே னாய்"[34]

எனச்சுட்டுவர். தலைவன் வரும் தேரில் பூட்டியிருக்கும் குதிரையின் மணியோசை போல் கேட்டதால் தலைவி இல்லத்தைவிட்டு வெளியே வந்து பார்த்தாள். அங்கே தலைவன் இல்லை. ஆனால், அங்கே பறவைகளின் ஒலியே மணியோசைபோல் ஒலித்தது. அதனால் அவள் ஏமாந்து இல்லத்துள் சென்றுவிட்டாள் என்று தோழி அல்ல குறிச்சூழலை விளக்குகிறாள். குறிமயங்கிய சூழலைத் தஞ்சைவாணன் கோவை,

"பேசத் தருவதொன றன்றுகண் டாயபிறிதோற்குறியை
நேசத் தவர்குறியென்று சென்றி யான் குறிநின்று வந்தேன்
வாசித் தமிழ்புனை தோளுடை யள்தஞ்சை வாணனொன்னார்
தேசத் தவருமெய் தாவெய்ய நோயெய்திச் சேயிழையே"[35]

எனக்கூறும்.

**வரும் வழி அச்சம்**

திணைமாலை நூற்றைம்பதில் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ள பாடலில் தோழி தலைவியின் குறிமறுப்பிற்கான காரணத்தைக் கணிமேதாவியார்,

"மானீல மாண்ட துகிலுமிழ்வது ஒத்தருவி
மானீல மால்வரை நாடகேண் – மாநீலம்

காயும்வேற் கண்ணாள் கணையிருளில் நீவர
வாயுமோ மன்றநீ யாய்”[36]

எனக்கூறுவர். பெரிய நீல மணிகளும், நீண்ட வெள்ளாடையையும் போல அருவிகள் கொட்டுகின்ற நாட்டிற்குத் தலைவனே, நீ வரும் வழியில் உனக்கு ஏதாவது நிகழ்ந்துவிடக்கூடாது என்பதற்காகத் தலைவி இரவுக் குறியை மறுக்கிறாள் என்கிறாள். வழியில் இரவு நேரத்தில் திரியும் விலங்குகளால் உனக்குத் துன்பம் நேரிடக்கூடுமெனத் தலைவி எண்ணுகிறாள். அதனால் குறிமறுக்கிறாள் எனத் தோழி மொழிவதைக் கணிமேதாவியார்,

“கறிவளர் பூஞ்சாரல் கைந்நாகம் பார்த்து
நெறிவளர் நீள்வேங்கை கொட்கும் – முறிவளர்
நன்மலை நாட இரவரின் வாழாள்
நன்மலை நாடான் மகள்”[37]

என்ற பாடல் புலப்படுத்தும். நல்ல மலைநட்டிற்குரிய தலைவனே! நீ வருகின்ற வழியானது பெரிய துதிக்கைகளையுடைய யானைகள் திரியும் காடு. அந்த யானைகளைக் கொல்வதற்காக எதிர்பார்த்து காத்திருக்கும் பதினாறடி வரை வளர்ந்து நிற்கும் பெரிய புலிகள் வசிக்கும் காடு. ஆகவே அச்சம் தரும் இக்காட்டின் வழியே வருவாயேயானால் உனக்கு ஏதாவது நேர்ந்துவிடுமோ என அச்சப்பட்டுத் தலைவி குறிமறுக்கிறாள் எனத் தோழி கூறுகிறாள். தலைவனிடத்துத் தலைவி கொண்ட அன்பின் மேன்மையை இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

**4. வரைவு கடாதல்**

தலைவன் தலைவியை விரைந்து மணந்துகொள்க எனக் கூறுதல் வரைவு கடாதல் ஆகும். இதனை நம்பியகப்பொருள் நால்வகைப்படுத்தி உரைக்கின்றது. அந்நூற்பாவாவது

“பொய்த்தல் மறுத்தல் கழறல் மொய்த்தல் என்
ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்”[38]

என்பதாகும். மேலும் அதன் பிரிவுகளாக (நம்பி.166) இருபதினை எடுத்துரைத்துள்ளார் நற்கவிராசர் நம்பி.

“தலைவன் இருவகைக் குறிகளிலும் பலகாலும் வந்தொழுகுங்கால் தோழிக்கும் தலைவனுக்கும் சில உரையாடல்கள் நிகழும். இனியும் இவ்வாறெல்லாம் களவிலேயே வந்து கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மனம் செய்து கொள்ள வேண்டும் என்று தலைவனை வேண்டிக் கொள்ளும் முறையில் இவ்வுரையாடல்கள் இடம்பெறும். இதுவே வரைவு கடாதல் என்பது”[39] என்பர் ந.சுப்பு ரெட்டியார்.

பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் உள்ள தோழி கூற்றுப் பாடல்களில் நாற்பது பாடல்கள் வரைவு கடாதல் துறையிலேயே அமைந்துள்ளது. தலைவன் தலைவி ஆகிய இருவரின் களவைக் கற்புக்கு நடத்திச் செல்லும் கடமை தோழிக்கு இருப்பதால் தோழி திருமணத்தை முன்வைத்தே மிகுதியாக உரை நிகழ்த்துவாள். ஆகவே தான் மிகுதியான பாடல்கள் வரைவு கடாதல் துறையிலேயே அமைந்துள்ளது எனலாம்.

**பகற்குறி வந்து செல்லும் தலைவனிடம் வரைவு கடாயது**

பகற்பொழுதிலே வந்து தலைவியைச் சந்தித்துச் செல்லும் தலைவனிடம் தோழி கூற்று நிகழ்த்துகிறாள். தலைவிக்கு ஏற்படும் இடையூறுகளைச் சொல்லி, தலைவனை வரைவிற்குத் தூண்டுகிறாள் தோழி. இவ்வகையிலேயே இவளது வரைவுகடாதல் துறையிலமைந்த பாடல்கள் விளங்குகின்றன.

**தலைவியின் நலம்அழிதல்**

அலைகள் வீசுவதால், அவ்வலைகளின் வழியாகக் கடற்கரைக்கு வந்து சேருகின்றன முத்துக்கள். அம்முத்துக்களைச் சிறு குழந்தைகள் எடுத்து தமது வீட்டிற்கு விளக்காகப் பயன்படுத்துகின்றனர். அத்தகைய வளப்பமான கடற்கரைக்குத் தலைவனே! நீ எமது தலைவியை வந்து பகலிலே சந்தித்துச் செல்வதால், எமது தலைவியின் மனம் வரைவு வேட்கையால் உள்ளப் போராட்டத்திற்குள்ளாகிறது. அதனால் அவளின் உடல் மெலிகிறது. ஆகவே விரைவில் வந்து மணமுடித்துக்கொள் என்கிறாள் தோழி. இதனை மாறன்பொறையனார்,

"ஓதந் தொகுத்த ஒலிகடல் தண்முத்தம்
பேதை மடவார்தம் வண்டல் விளக் கயரும்
கானலஞ் சேர்ப்ப தகுவதோ என்தோழி
தோணலந் தோற்பித்த நீ"[40]

எனச்சுட்டுவர். தலைவியின் உடல் மெலிவு கூறித் தலைவனை வரைவிற்குத் தோழி தூண்டுவது இதனால் புலனாகும்.

**இரவுக்குறி வந்து நீங்கும் தலைவனை வரைவு கடாயது**

இரவுக்குறியல் வந்து தலைவியைச் சந்தித்துச் செல்லும் தலைவனிடம் தோழி வரைவு கடாவுகிறாள். தலைவியை விரைந்து மணமுடிக்க வேண்டும் என்பதே இதன் முக்கிய நோக்கமாகும்.

**வழியின் அருமைப்பாடு**

வழியின் அருமைப்பாட்டைத் தலைவனுக்கு உணர்த்தி வரைவு கடாவுகிறாள் தோழி. அதனை ஐந்தினை ஐம்பதிலமைந்த குறிஞ்சித் திணைப் பாடலொன்று புலப்படுத்தும். அதனை மாறன்பொறையனார்,

*“கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பட்டு*
*மடிசெவி வேழம் இரீஇ – அடியோசை*
*அஞ்சி யொதுங்கு மதருள்ளி ஆரிருள்*
*துஞ்சா சுடர்தொடி கண்”*[41]

*என மொழிவர். தலைவனே நீ இரவிலே வந்து தலைவியைச் சந்தித்துவிட்டுச் செல்லும் வழியானது பெரிய புலியிடம் அடிபட்டு பெரிய காதுகளை உடைய யானை தன் சத்தம் கேட்காமல் நடக்கும் வழியாகும். எனவே நீ அவ்வழியில் செல்வதினால் உனக்கு எதுவும் ஆகிவிடுமோ? என எண்ணி தலைவி உறக்கமின்மையால் தவிக்கிறாள். ஆகவே, விரைவில் அவளை மணம் செய்து கொள்வாயாக எனத் தலைவனைத் தூண்டுகிறாள் தோழி.*

*திணைமொழி ஐம்பதில் உள்ள குறிஞ்சித் திணையில் இரவுக்குறியை விளக்கி வரைவு கடாயுகிறாள் தோழி. இதனைக் கண்ணன் சேந்தனார்,*

*“யாழும் குழலு முழவும் இயைந்தென*
*வீழும் அருவி விறன்மலை நன்னாட*
*மாழைமாள் நோக்கியு மாற்றா ளிரவரின்*
*ஊரறி கெளவை தரும்”*[42]

*எனக்குறிப்பர். யாழும் குழலும் முழவும் தம்முள் பொருந்து ஒலிப்பதைப்போல, வீழ்கின்ற அருவிகளின் நாட்டிற்குரிய தலைவனே! நீ இரவில் வருவாயானால் அது ஊருக்குள் தெரிந்து அலராகிவிடும். ஆகவே, விரைவில் தலைவியை மணமுடித்துக்கொள் என்கிறாள் தோழி.*

**இரவும், பகலும் வாராலென்று தலைமகனைத் தோழி வரைவு கடாயது**

*திணைமாலை நூற்றைம்பதில் நெய்தல் திணையிலே அமைந்துள்ள பாடலொன்று இத்துறையினது. இதனைக் கணிமேதாவியார்,*

"புலாலகற்றும் பூம்புன்னைப் பொங்குநீர்ச் சேர்ப்ப
நிலாவகற்றும் வெண்மணல்தண் கானற் – கலாவகற்றிக்
கங்குல்நீ வாரல் பகல்வரின் மாக் கவ்வையாம்
மங்குல்நீர் வெண்திரையின் மாட்டு"[43]

எனப் பகர்வர். புலால் நாற்றத்தைப் போக்கும் பூக்களை உடைய கடற்கரைக்குத் தலைவனே! நீ தலைவியைச் சந்திக்க இரவில் வராதே, பகலிலும் வராதே அலராகிவிடும் என்கிறாள் தோழி. தலைவியை இரவிலும், பகலிலும் சந்திக்க வரவேண்டாம்; அதனால் தலைவியைப் பெற வேண்டும் என்கின்ற வேட்கை உன் உள்ளத்து மிகும் எனத் தலைவனிடம் தோழி உரைப்பது ஈண்டு புலனாகும். இக்கருத்தைப் பிரிதொரு பாடலொன்றும் விளக்குகின்றது. அதனை,

"பகல்வரின் கவ்வை பலவாம் பரியாது
இரவரின் ஏதமு முன்ன – புகவரிய
தாழை துவளும் தரங்க நீர்ச் சேர்ப்பிற்றே
ஏழை நுளைய ரிடம்"[44]

என்பர் கணிமேதாவியார். நீ பகலிலேவரின் ஊரிலே அலர் மிகுமென்றும், இரவிலேவரின் உன் உயிருக்கு ஏதாவது நேரிடுமென்றும் தலைவி அஞ்சுகிறாள். ஆகவே, இருபொழுதும் வருவதைத் தவிர்த்து அவளை மணப்பதற்கு முயற்சிப்பாயாக எனத் தலைவனைத் தூண்டுகிறாள் தோழி. தலைவியின் அச்ச உணர்வினை ஈண்டு காணமுடிகிறது.

**தோழி செறிப்பறிவுறுத்தல்**

தோழி தலைவனிடம் நாங்கள் தற்பொழுது வீட்டிலேயே உள்ளோம். ஆதலால், நாங்கள் கானகத்திற்கு வரமாட்டோம் எனக்கூறி வரைவு கடாவுகிறாள். இதனை மாறன் பொறையனார்,

"எறிந்தெமர் தாமுழுத ஈர்ங்குரல் ஏலனல்
மறந்துங் கிளியினமும் வாரா – கறங்கருவி

மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவல் நெஞ்சத்துக் கொண்டு”[45]

என உணர்த்துவர். முழங்கி ஒலிக்கின்ற பெரிய நீர்வீழ்ச்சிகள் உடைய நாட்டிற்குரிய தலைவனே! எங்கள் தினைப்புனத்தில் கதிர் அறுத்து முடித்து உழவு செய்துவிட்டோம். ஆகவே, இனிமேல் தினைப்புனத்திற்குக் கிளிகள் வராது. ஆதலால் நாங்களும் வரமாட்டோம் எனக்கூறித் தோழி வரைவு கடாவுகிறாள். இதே கருத்தைப் பிறிதொரு பாடலும் விளக்குகிறது. அதனைக் கண்ணன் சேந்தனார்,

“கணமுகை கையெனக் காந்தள் கவின
மணமுகை என்றெண்ணி மந்திகொண்டாடும்
விறன்மலை நாட வரவரிதாங் கொல்லோ
புனமும் அடங்கின காப்பு”[46]

என்பர். இப்பாடல் குறிஞ்சித்திணையது. எங்களது தினைப்புனத்தில் கதிர்களைக் கொய்து எடுத்துவிட்டோம். ஆதலால் இனிமேல் தினைப்புனத்திற்கு வரமாட்டோம் என்கிறாள் தோழி.

தினைப்புனத்திற்குத் தினமும் காவல் காக்கத் தோழியும், தலைவியும் வருவார்கள். அங்கே தலைவியின் மேல் காதல் கொண்ட தலைவனும் தினமும் வந்து செல்வான். அவனிடம் தோழி இனிமேல் தலைவி தினைப்புனம் காக்க வரமாட்டாள்; அதனால் அவளை உன்னால் இனிப் பார்க்க இயலாது; அவளைத் தினமும் காணப்பெற வேண்டுமெனின் அவளை விரைவாகத் திருமணம் செய்துகொள் எனக் குறிப்பாக உரைத்தாள் என்பது கருத்து.

**புணர்ந்து நீங்கும்தலைவன்**

தலைவியை வந்து சந்தித்துச் செல்லும் தலைவனிடம் தோழி கூற்று நிகழ்த்துகிறாள். இதனை மூவாதியார்,

"வெறிகமழ் தன்சுனைத் தெண்ணீர் துளும்பக்
கறிவளர் தேமா நறுங்கனி வீழும்
வெறிகமழ் தண்சோலை நாட ஒன்றுண்டோ
அறிவின்க ணின்ற மடம்"[47]

என உணர்த்துவர். மாம்பழங்கள் வீழும் சுனைகள் நிறைந்த சோலையையும், மிளகுக் கொடிகளையும் உடைய நாட்டிற்குத் தலைவனே! நீ அறிவாளி என்பதால் தலைவியை விரைந்து மணக்க வேண்டும் என்பதை விளக்க வேண்டுமா? என்கிறாள் தோழி. தலைவன் தலைவியை நெடுநாளாகச் சந்திக்க வருகிறான். அவனை இடித்து உரைத்துத் திருமணம் முடித்துக் கொள் என்று நேரே கூறாமல் நயமாக மறைமுகமாகக் கூறுகிறாள் தோழி.

**சிறைப்புறமாக நின்ற தலைவனிடம் வரைவு கடாயது**

தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் சிறைப்புறமாக நின்றான். அவனைக் கண்டு கொண்ட தோழி அவனைக் காணாதது போல் சில பல செய்திகளைச் சொல்லி வரைவு கடாவுகிறாள். இதனைக்

"கண்ணுறு நெய்தல் கமழும் கொடுங்கழித்
தண்ணந் துறைவனோ தன்னிலன் ஆயிழாய்
வண்ணகைப் பட்டதனை ஆண்மை எனக்கருதிப்
பண்ணமைத் தேர்மேல் வரும்"[48]

எனக் குறிப்பிடுகிறார் மூவாதியார். ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்த தலைவியே! வளைந்த கடற்கரைகளை உடைய தலைவன்! பழையபடி நம்மைக் காண வராமல், அவன் கையில் நாம் அகப்பட்டுக் கொண்டதைத் தனது ஆண்மையின் பாற்பட்ட செய்தி என்று எண்ணி அவன் வரைதலை மேற்கொள்ளாமல் இருக்கிறான் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

*இதே கருத்தை மற்றொரு பாடலான திணைமொழி ஐம்பதில் கண்ணன் சேந்தனார்,*

*"பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவன்*
*எலவென் றிணைபயிரும் ஏகல்சூழ் வெற்பன்*
*புலவுங்கொல் தோழி புணர்வறிந் தன்னை*
*செலவும் கடிந்தாள் புனத்து"*[49]

*எனக் கூறுகிறார். களவொழுக்கம் தெரிந்ததால் செவிலித்தாய் நம்மைப் பகலிலே வெளியில் விடுவதில்லை. நன்றாக உள்ள பலாப்பழத்தினைப் பிடுங்கி எடுத்த ஆண் குரங்கானது தன் பெண் குரங்கிற்கு ஊட்டிவிடும் நாட்டிற்குரிய தலைவன் நம்மை மறந்திருக்க மாட்டான்; பிணங்க மாட்டான் எனத் தோழி தலைவியிடம் மொழிகிறாள். குரங்கின் அன்பு வாழ்க்கையினைக் காணுகின்ற தலைவன், உறுதியாக உன்னை வந்து மணம் முடித்துக் கொள்வான் எனத் தலைவியைத் தோழி தேற்றுவதனை இதனால் உணரமுடியும்.*

**தலைமகனைக் கண்ணுற்றவழி வரைவு கடாயது**

*தலைவியின் பண்பினைத் தலைவனிடம் உயர்வுபடச் சொல்லித் தோழி வரைவு கடாவுகிறாள். அதனைக் கண்ணன் சேந்தனார்,*

*"இனமீ னிருங்கழி ஓதம் உலாவ*
*மணிநீர் பரக்கும் துறைவ தகுமோ*
*குணநீர்மை குன்றாக் கொடி அன்னாள் பக்க*
*நினைநீர்மை யில்லா ஒழிவு"*[50]

*எனச்சுட்டுவர். இளமீன்கள் விளையாடும் நீல மணி போன்ற அலைகள் வீசும் கடற்கரையை உடைய தலைவனே! எங்கள் குலக்கொடியினை நீங்கி உறைதல் தகுமோ? எனக்கேட்கிறாள் தோழி. உன்னிடத்தே அன்பு கொண்டுள்ள தலைவியை மறந்திருப்பதற்கு உனக்கு மனம் எவ்வாறு வந்தது? எனக் குறிப்புத்தோன்றக் கேட்பதை இதனால் உணரமுடியும். இக்கருத்தை*

ஒத்த பிரிதொரு பாடலும் பதினெண்கீழ்க்கணக்கு அக நூலுள் காணப்பெறுகிறது. பம்பின் படத்தினை ஒத்த அழகிய அல்குல் உடைய நெய்தல் நிலப் பெண்கள் கடலிலே உண்டான அலைகள் கொண்டுவந்து போட்ட முத்துக்களாகிய மணிகளைச் சேர்த்து மாலையாகப் போட்டு விளையாடும் நிலத்திற்கு உரிய தலைவனே! என்னுடைய தோழி உன் பிரிவால் உடல் நோயுற்று வாடுகிறாள். ஆதலால், அவளை விரைந்து வந்து மணந்து கொள்வாயாக எனத் தலைவனை வரைவு கடாவுகிறாள் தோழி.

'புணர்ந்து நீங்கும் தலைவனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது' எனும் துறையில் திணைமாலை நூற்றைம்பதில் உள்ள நெய்தல் திணைப்பாடல் (பா.34) மேற்கண்ட செய்தியினை வலியுறுத்தி அமைந்துள்ளது. நீ விரைந்து தலைவியை மணமுடிக்கவில்லையெனில் அவள் உடல்நலம் அழிந்து பசலையுறுவாள் எனக்கூறுகிறாள். இதன் நோக்கம் தலைவியைத் தலைவன் விரைவில் மனம் முடிக்க வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும்.

**அருவியடித்ததால் கண்கள் சிவந்தன**

தாய் கேட்டதற்கு மறு மாற்றஞ் சொல்லுவாள் போலப் படைத்து மொழி கிளவியான் தோழி வரைவு கடாயது எனும் துறையில் அமைந்த பாடலொன்று ஐந்திணை ஐம்பதில் உளது. அது குறிஞ்சித் திணையது. இதனை மாறன் பொறையனார்,

"வேங்கை நறுமலர் வெற்பிடை யாம்கொய்து
மாந்தளிர்மேனி வயர்ப்பமற்று – ஆங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாம் சேயரிக்கண் தாம்"[51]

என மொழிவர். தலைவியும் நானும்மலையிடத்தே பூத்துள்ள வேங்கை மலரின் பூக்களைப் பறித்ததால், எங்கள் உடல் வியர்த்துவிட்டன. ஆகவே, அங்கு உள்ள அருவியின் நீர்வீழ்ச்சியில் குதித்து விளையாடினோம். ஆதலால் மெல்லிய சொற்களைப் பேசும் தலைவிக்குச் சிவந்த ரேகைகள், படர்ந்த கண்கள் சிவப்புநிறங் கொண்டன எனச் செவிலித்தாயிடம் தோழி கூறுகிறாள்.

**அன்னாய் கண்டாள்**

படைத்துமொழிக் கிளவியால் வரைவு கடாயது எனும் துறையில் திணைமாலை நூற்றைம்பதில் பாடலொன்று உள்ளது. அது குறிஞ்சித் திணையது. இதில், தலைவனைத் தோழி வரைவிற்குத் தூண்டுவது கருத்தாக அமைந்துள்ளது. அதனைக் கணிமேதாவியார்,

"பனிவரைநீள் வேங்கைப் பயமலைநன் னாட
இனிவரையாய் என்றெண்ணிச் சொல்வேன் – முனிவரையுள்
நின்றாள் வலியாக நீவர யாய் கண்டாள்
ஒன்றாள்காப்பு ஈயும் உடன்று"[52]

என மொழிவர். குவிந்த குவடுகளையும், நீண்டுயர்ந்த வேங்கை மரங்களையும் கொண்டு வளங்கள் சூழ்ந்த மலைநாட்டிற்குரிய தலைவனே! இதற்கு முன்பு வரையாவிட்டாலும், இனிமேலாவது வரைந்து கொள் என்கிறாள் தோழி. ஏனெனில் வெறுக்கத்தக்க மலையின் கண் நின் காணாதலே வலியாக இரவின் கண் நீ வர எம் அன்னை கண்டாள். இனி எங்களோடு பகைத்தும், வெகுண்டும் மிக்க கவலை எங்களுக்குத் தந்து விடுவாள் என்று தலைவனிடம் கூறுகிறாள். ஆகவே நீ தலைவியை விரைவில் மணமுடிக்கவில்லை எனில் தலைவியை உன்னால் சந்திக்க முடியாது என்கிறாள் தோழி.

**தோழி வரைவு கடாதல்**

காரணங்களைச் சொல்லித் தோழி வரைவு கடாதல் செய்தலோடு நேரடியாகவே தலைவனை வரைவு கடாவுகிறாள். இத்துறையில் மொத்தம் 13 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இதனை மாறன் பொறையனார் நெய்தல் திணையில்,

"எக்க ரிடுமணல்மேல் ஓதம் தரவந்த
நித்தில நின்றிமைக்கு நீள்கழித்தண்சேப்ப
மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தார்
ஒற்கங் கடைப்பிடியா தார்"[53]

எனச்சுட்டுகிறார். அலையானது கரையிலே வந்து மோதும் போது மணலிலே வந்து முத்துக்கள் சேரும். அப்படி முத்துக்கள் ஒளிவீசும் நீண்ட உப்பங்கழிகளையுடைய துறைமுகத்தை உடைய தலைவனே! தன்னை நெருங்கிப் பழகியவருக்குத் துன்பம் ஏற்படும் போது அதனைப் பார்த்துக் கொண்டு இருக்காமல் அதனை நீக்குபவரே சிறந்த மனிதர் என்கிறாள் தோழி. தலைவி மிகவும் வருந்துகிறாள். ஆகவே, அவளை வரைந்து கொண்டு வருத்தத்தைப் போக்க வேண்டும் என்ற கருத்து ஈண்டு உணர்த்தப்பட்டுள்ளது.

**நன்றி மறவாதே**

அவரைக் கொடிகள் படர்ந்து நின்றது. அங்கே பசிய கதிர்களை உடைய தினைப் பயிர்களை இளமையான கவரிமான்கள் மேய்ந்தன. அத்தகு வளமிகு நாட்டிற்குத் தலைவனே! விளங்குகின்ற அணிகலன்களை அணிந்த தலைவிக்கும் உனக்கும் இடையே நின்று கூட்டுறவு செய்த என்னை மறக்காமல் தலைவிக்கு நன்மை செய்வாயாக என்கிறாள். இதனை மூவாதியார்,

"அவரை பொருந்திய பைங்குர லேனல்
கவரி மடமா கதூஉம் படர்சாரல்
கானக நாட மறவல் வயங்கிழைக்கு
யானிடை நின்ற புணை"[54]

என உணர்த்துவர். இதில் 'நன்மை' என்பது தலைவியை மணந்து கொள்ளுதலைக் குறிக்கின்றது.

**உயிர் வாழ்தலின்றி மடிவாள் தலைவி**

தேனினை வேடுவர்கள் எடுத்துச் செல்லுதற்கு ஏதுவாக, வீழ்ந்து கிடக்கும் தித்திப்பான தேனிறால்களை மானின் கன்றுகள் தன் காலாலேயே மிதித்து நடக்கும் நாட்டிற்குரிய தலைவனே! களவுப் புணர்ச்சியில் ஈடுபட்ட நீ தலைவியை விரைவிலே மணந்துகொள். அப்படியில்லையாயின், எங்கள் தலைமகள் உயிர் வாழ்தலின்றி மடிவாள் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதனை மூவாதியார்,

"பிரைசங் கொளவீழ்ந்த தீந்தேன் இறாஅல்
மரையான் குழவி குளம்பிற் றுகைக்கும்
வரையக நாட வரையாய் வரின் எம்
நிரை தொடி வாழ்த லிலள்"[55]

எனச்சுட்டுவர். தலைவியின் உறுதிப்பாட்டை ஈண்டு தோழி தலைவனிடம் எடுத்துரைக்கிறாள்.

**வரைவு மலிதல்**

திருமணத்தை விரைந்து நடத்துவதற்கான முயற்சியின் இயல்பைச் சொல்வது வரைவு மலிவாகும். இதனை நம்பியகப்பொருள் நான்கு வகைப்படுத்திச் சுட்டுகிறது. அதனை, மூவாதியார்

"வரைவுமுயல் உணர்த்தல், வரவு எதிர் உணர்த்தல்
வரைவு அறிந்து மகிழ்தல், பராவல்கண்டு உவத்தல் என்று
ஒருநாள் வகைத்தே வரைவு மலிதல்"[56]

என்ற அடிகள் சுட்டும்.

**தலைவன் மணம் பேசிவருதல்**

இலைகள் நிறைந்த குளிர்ந்த காட்டு மல்லிகைக் கொடிகள் பொருந்திப் படர்ந்துள்ளன. சோலைகளினிடத்தே உள்ள காந்தள் பூவில் வண்டுகள் ஒலியெழுப்பி மொய்க்கும். அத்தகு மலைநாட்டுக்குரிய தலைவன் மணம் பேசி வருதலை மேற்கொள்கிறான். ஆகவே, செவிலித்தாயின் வருத்தம் போயிற்று எனத் தோழி தலைவியிடம் உரைக்கின்றாள். இதனை மூவாதியாரின்,

"இலையடர் தண்குளவி ஏய்ந்த பொதும்பில்
குலையுடைக் காந்தள் இனவண் டிமிரும்
வரையக நாடனும் வந்தான் மற்றன்னை
அலையும் அலைபோயிற் நின்று"[57]

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

முல்லைத் திணைப் பாடலொன்று தலைமகன் வரைவு மலிந்ததைத் தலைமகட்குத் தோழி சொல்லியதாய் அமைந்துள்ளது. அதனைக் கண்ணன் சேந்தனார்,

"அஞ்சனக் காயா மலரக் குருகிலை
ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொளத்
தண்கமழ் கோடல் துடுப்பீனக் காதலர்
வந்தார் திகழ்கநின் தோள்"[58]

எனக்கூறுவர். அஞ்சனம் போலக் காய்கள் மலர, குருக்கிலைகள், ஒண்கொடியுடைய நல்லார் முறுவல் போல அழகு கொள்ள, பூங்குலையைப் போல நம் காதலர் பெண் கேட்டு வந்தார். இனிமேல் நீ மகிழ்ச்சியாக இருப்பாயாக எனத் தோழி தலைவிக்கு உரைக்கிறாள். தலைவியின் வருத்தத்தை நீக்குவதற்குத் தோழி முயல்வதனை இதனால் உணரமுடியும்.

சங்க இலக்கியத்தில் ஐங்குறுநூறு பாடலொன்று அக்கருத்தை விளக்குவதை,

"எக்கர்ஞாழன் மலரின் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலைபெ‌ன நன்கினனாடே"[59]

தலைவன் தலைவியை மணமுடிக்க வரும் சூழலை மேற்கண்டவாறு பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கிய நூல்கள் உணர்த்துகின்றன.

**அறத்தொடு நிற்றல்**

களவு நாடகத்தின் இறுதிக்காட்சி அறத்தொடு நிற்றலாகும். மனம் பொருந்திய தலைவன் தலைவியர் தனது களவைக் கற்பாக மாற்றும் சூழல் அறத்தொடு நிற்றலாகும். அறம் என்பது முறைப்படி களவைக் கற்பாக்கும் சூழல் ஆகும்.

களவில் தோழி கூற்று நிகழும் இடங்களைக் கூறும் தொல்காப்பியர் அறத்தொடு நிலையிலும் குற்றந் தீர்ந்த கிளவியைத் தாய் மாட்டுப் புகவிடுதலும் தோழிக்குரியது என்கிறார். இதனை,

"முன்னிலை அறனெனப் படுதாலன் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"[60]

என்ற அடிகள் உணர்த்தும். தோழிக்குரிய அறத்தொடு நிற்றலையும் அதனைக் கேட்போராகத் தாயையும் காட்டுவர். மேலும் அறத்தொடு நிற்றலை ஏழுவகைப்படுத்துவார். அவை,

"எளித்தல் ஏத்தல்வேட்கையுரைத்தல்
கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என் மனார் புலவர்"[61]

என்பவையாகும். தலைவனைத் தம்மாட்டு எளியவன் என்று கூறுதல், தலைவனை உயர்த்திக் கூறுதல், தலைவனிடம் தலைவி வேட்கையும், தலைவியிடம் தலைவன் வேட்கையும் கூறுதல், தலைவனுக்குத் தலைவியைக் கொடுக்க வேண்டுமெனக்கூறல், வெறியாட்டும் கழங்கம் இட்டுறைத்தவழி வேலனோடாதல், பிறரோடதல், தோழி வினாவுதல், யாதானும் ஏதுவை இடையீட்டுக் கொண்டு தலைப்பட்டுக் கூறுதல், உள்ளபடி கூறுதல் என்ற முறையில் அறத்தொடு நிற்பாள். நக்கீரரின்

"அறம் என்பது தக்கது; தக்கதலைச்
சொல்லி நிற்றல்"[62]

என்ற கருத்து ஈண்டு நினையத்தக்கது. அறத்தோடு நிற்கும் முறையை நாற்கவிராசநம்பி மிகத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார். அதனை,

"தலைவி பாங்கிக்கு அறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு
நிற்கும் என்ப நெறி உணர்ந்தோரே"[63]

என்ற அடிகள் தெளிவுபடுத்தும்.

**செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்றல்**

குறிஞ்சித் திணையைச் சேர்ந்த பாடலில் தலைவியின் வேறுபாடு கண்டு செவிலி வினவுகிறாள். அதற்குத் தோழி தலைவியின் களவு நெறியைக் கூறி அறத்தொடு நிற்கிறாள். இதனைப் புல்லங்காடனார்,

“கருங்கை கதவேழம் கார்பாம்புக் குப்பங்
.........................................................
பெருங்கல் மலைநாடன் ணேி வரினே
சுருங்கும் இவள் உற்ற நோய்”[64]

எனச்சுட்டுவர். இக்கருத்தைத் திணைமாலை நூற்றைம்பதில், குறிஞ்சித் திணையில் கணிமேதாவியர்,

“சுள்ளி சுனைநீலந் சேபர் லிகைசெயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து – தெள்ளி
இதனாற் கடியொடுங்கோ ஈர்ங்கடா யானை
உதனாற் கடிந்தாள் உளான்”[65]

எனப் பதிவு செய்துள்ளார். நறவ மலரையும், சுனை நீல மலரையும் அசோக மலரையும் அணிந்து கொண்ட தலைவன் ஒருவன் உளன் அவனே உன் மகளின் மனதில் இருப்பவன் எனச் செவிலிக்குத் தோழி உணர்த்துகிறாள்.

**வெறி விலக்கி அறத்தொடு நிற்றல்**

காதல் வயப்பட்ட தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ணுற்ற செவிலி மற்றும் உற்றார்கள், அவளுக்குத் தெய்வத்தின் மேல் வெறிபிடித்துவிட்டது என உணர்ந்து முருகன் மேல் வெறியாட்டு நடத்தப் போகிறார்கள். அதனை மறுத்து செவிலியிடம் தோழி இவள் பெற்றிருக்கிற நோய்க்குக் காரணம் தெய்வம் அல்ல, நெடும்பனைத் தோள்களை உடைய தலைவன் ஒருவன், ஒருநாள் ஆற்றில் இழுத்துச் செல்லப்பட்ட இவளைக் காப்பாற்றினான். அதனால், அவன்மேல் காதல் கொண்டாள். அவனை அவள் சேராததே இவளுடைய உடல்நோய்க்குக் காரணம் எனக்கூறி அறத்தொடு நிற்கிறாள். இதனைக் கணிமேதாவியார்,

"வேலனார் போக மறிவிடுக்க வேரியம்
பாலனார்க் கீக பழியிலாள் – பாலால்
கடும் புனலின் நீந்திக் கரைவைத்தாற் கல்லால்
நெடும் பணைபோல் தோள்நேராள் நின்று"[66]

என விளக்குவர்.

அறத்தொடு நிற்றலில் அமைந்த பாடல்கள், சங்க இலக்கியங்களில் விரவிக்கிடக்கின்றன. அதனை,

"மெய்ம்மணல் முற்றல் கவின்பெற இயற்றி
மலைவான் கொண்ட சிளைஇய வேலன்
கழங்கினான் அறிகுவது என்றால்
நன்றால் அம்ம நின்ற இவர் நாளே"[67]

"அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக் கோப்பு அன்னநல் நெடுங்கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நல்நெடுங்குன்றம் பாடிய பாட்டே"[68]

என்ற பகுதிகள் மெய்ப்பிக்கும்.

பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் களவு வாழ்வில் இடம் பெற்றுள்ள கூற்றுக்களின் வழி தோழியின் செயல் திறத்தையும், அறிவுச் சிறப்பையும், கூர்மதியையும், பிறர்மனம் புண்படாமல் பேசும் திறத்தையும் கண்டு தெளியலாம்.

**கற்பு வாழ்வு**

தலைவனும், தலைவியும் உற்றார் உறவினர் அறியத் திருமணம் செய்து கொண்டு இல்லறத்தில் ஈடுபடுதலே கற்பாகும். "மறவுக் காதலர்கள்

ஊரில் இருப்பினும் ஊர்விட்டு ஓடினும் வரைவு எனும் பெருவேலிக்கு உட்பட்டு கணவன் மனைவி என்று பலர் வெளிப்படையாகச் சொல்லும் இயல்பு நிலையே ஒருநாள் அடைதல் வேண்டும். இந்நிலைப்பேறு அடையும் அன்புக் களவைத்தான் பெற்றோரும் போற்றி வரவேற்பர். சமுதாயமும் நல்லொழுக்கம் என உடன்பாடு அளிக்கும். களவின் முடிவு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானது"[69] என்பர் வ.சுப.மாணிக்கம்.

தொல்காப்பியர் 'கற்பு' என்பதனை,

"கற்பெனப்படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[70]

என உணர்த்துவர். கற்பு என்று குறிப்பிடப்படுவது கரணத்தோடு பொருந்தி, மணந்து கொள்வதற்குரிய இயல்பினையுடையது. தலைவன் தனக்கு உரிமையுடைய தலைவியைக் கொடுத்தற்குரிய சுற்றத்தார் கொடுப்ப ஏற்று மனஞ்செய்து கொள்ளும் முறைமையாகும்.

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் தோழி கூற்றுக் கற்புப் பாடல்களாக விளங்குவன **91**. அவற்றை,

1. தலைவிக்குப் பருவம் காட்டி வற்புறுத்தல்
2. தலைவியை ஆற்றுவித்தல்
3. தலைவனது பரத்தமைப் பண்பை எடுத்துரைத்தல்
4. தலைவனின் செலவினை உணர்த்துதல்
5. தலைவனுக்கு வாயில் மறுத்தல்
6. தலைவனைப் புகழ்தல்
7. தலைவனைச் செலவழுங்குவித்தல்

எனப் பாகுபடுத்த இடமுண்டு.

**தலைவிக்குப் பருவங்காட்டி வற்புறுத்தல்**

*வினைக்காகப் பிரிந்து சென்ற தலைவன் குறித்த பருவத்தில் வராமையால் வருந்துகிறாள் தலைவி. வருந்திய தலைவியைத் தோழி 'அவர் குறித்த பருவம் இப்பொழுதுதான் வருகிறது. அவர் வெகுதொலைவில் இருப்பாரேயாயினும், விரைவில் வந்து விடுவார்' எனக்கூறித் தலைவியைத் தேற்றுவதே பருவங்காட்டி வற்புறுத்தலாகும்.*

*பதினெண்கீழ்க்கணக்கு அக இலக்கியத்தில் காணப்பெறும் தோழிக் கூற்றுப் பாடல்களில் பெரும்பான்மையானவை, தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்திய (51) துறையில் அமைந்துள.*

**கார்காலம் வந்தது**

*கரையை மோதும் கடலினது நிறத்தினை உடைய திருமால், மார்பில் அணிந்த பூமாலை போல இந்திரவில்லைக் குறுக்காக நிறுத்தி விழா நிற்க வருவோம் எனச் சொல்லிச் சென்ற தலைவர் வரவில்லையே எனத் தலைவி தோழியிடம் வருந்துகிறாள். அதற்குத் தோழி, வானம் கார்பொழுதுதாகக் கருக்கொண்டிருக்கிறது; மழை விழுவதற்குள் வந்துவிடுவார் எனக்கூறித் தலைவியைத் தேற்றுகிறாள். அதனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,*

*"பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போல்*
*திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் தாழ*
*வருதும் என மொழிந்தார் வாரார்கொல் வானம்*
*கருவிருந் தாலிக்கும் போழ்து"*[71]

*எனக்கூறுவர். வானத்தின் நிலையே, தலைவிக்கு முன்னொரு நாள் தலைவன் உரைத்ததை நினைவிற்குக் கொண்டுவந்தது; அவளை வருத்தத்தில் ஆழ்த்தியது என்பது கருத்து.*

**பசலைக்கு மருந்து**

தலைவன் பிரிவால் தலைவிக்குப் பசலை பாய்ந்தது. அப்பசலை நோய்க்கு மருந்தாகுபவன் தலைவனே ஆவான். அதனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

*"ஆடு மகளிரின் மஞ்ஞை யணிகொளக்*
*காடுங் கடுக்கை கவின்பெறப் பூத்தன*
*பாடுவன் டூதும் பருவம் பணைத்தோளி*
*வாடும் பசலை மருந்து"*[72]

என மொழிவர். கூத்தாடும் மகளிர் போல மயில்கள் அழகுற ஆடும் காடுகளில், கொன்றை மலர்கள் அழகுற மலர்ந்தன; பாடுகின்ற வண்டுகள் பூக்களில் உள்ள தேன்களை உண்ணாது நிற்கின்றன. இத்தகைய கார் பருவம் இனிதே வந்தது. இப்பருவமே, வாடும் பசலை நோய்க்கு ஏற்ற மருந்தாகும். அக்காலத்தில் அவர் உன்னைச் சேர்வதால் அந்நோய் உன்னிடமிருந்து நீங்குமெனத் தோழி தலைவிக்கு உரைக்கிறாள்.

**பொருள் தேடச் சென்றவர் மீள்வார்**

இல்லற வாழ்க்கையை வளமைப்படுத்துவதற்குப் பொருள் தேவை. அதனை ஈட்டுவதற்காகத் தலைவன் தலைவியைவிட்டு பிரிந்து செல்கிறான். உரிய பருவத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் அப்பருவத்தில் வராமையால் தலைவி புலம்புகிறாள். அந்நிலையில் தோழி தலைவியைத் தேற்றுகிறாள். அதனைக் கண்ணங்கூத்தனார்,

*"இகழுநர் சொல்லஞ்சிச் சென்றார் வருதல்*
*பகழிலோ லுண்கண்ணாய் பொய்யன்மை ஈண்டைப்*
*பவழஞ் சிதறி யவைபோலக் கோபம்*
*தவழும் தகைய புறவு"*[73]

*எனப்புலப்படுத்துவர். இந்திரக்கோபப் பூச்சிகள் காட்டிலே ஊர்கின்றன. இது கார்காலத்தின் வெளிப்பாடு. ஆகவே பிறர்பழிக்கு ஆளாகாமல் தலைவன் விரைந்து வருவாரெனத் தலைவியைத் தேற்றுகிறாள் தோழி. தலைவன் பழிக்கு அஞ்சும் பண்புடையவன் என்ற கருத்து ஈண்டு புலப்படுகிறது.*

*பொருள் ஈட்டச் சென்ற தலைவனின் சூழலைச் சங்க அக நூல்களும் விளம்புகின்றன. அதனை,*

*“நட்டோர் ஆக்கம் வேண்டியும், ஒட்டிய*
*நின்தோள் அணிபெற வரற்கும்*
*அன்றோ தோழி அவர் சென்ற திறமே”[74]*

*எனும் பாடல் சுட்டுகிறது. மேலும் இக்கருத்தினை வலியுறுத்தும் வண்ணம்,*

*“ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்*
*செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு*
*அம்மா அரிவையும் வருமோ*
*எம்மை உய்த்தியோ? உரைத்திசின் நெஞ்சே”[75]*

*என்ற குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.*

**2. தலைவியை ஆற்றுவித்தல்**

*தலைவன் பிரிந்து சென்றதைக் கண்ட தலைவி வருந்துகிறபோது தோழி அவளை ஆற்றுவிக்கிறாள். தலைவனது பிரிவால், தலைவி மன வெறுப்பிற்குள்ளாகாமல் பார்த்துக் கொள்பவள் தோழியாவாள். அத்தகைய உயரிய பணியினைத் தலைவியின் நலன் கருதியே அவள் செய்கிறாள்.*

**பொய்யாக நீர் உறிஞ்சும் மான்கள்**

*ஆண், பெண் கலைமான்கள் இரண்டும் சிறிய சுனையில் இருந்த தண்ணீரைத் தாகத்திற்காக குடித்தன. அவ்வாறு குடிக்கும்போது, ஆண் மான் தனது பெண் மான் குடிக்கட்டும் எனக் குடிப்பது போலப் பாவனை செய்தது.*

அதேபோல் ஆண் மான் குடிக்கட்டுமெனப் பெண்மான் பாவனை செய்தது. அத்தகைய பாலைநில வழியில் தலைவன் சென்றுள்ளான் எனத் தோழி தலைவியிடம் உரைக்கிறாள். அதனை,

"சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென்று எண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக் – கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி"[76]

என மாறன் பொறையனார் சுட்டுகிறார். தலைவன் தான் செல்லும் வழியில் விலங்குகளின் அன்புடைக் காட்சியைக் காணக்கூடும். அந்நிகழ்ச்சி அவனை உன்னிடத்து விரைவில் கொணர்ந்து சேர்க்குமெனத் தோழி தலைவியிடம் உணர்த்துவதை ஈண்டு அறியமுடியும்.

தலைவன் பொய்த்தானாகக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்ததனை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

"புகர்முகம் பூழிப்புரள உயர்நிலைய
வெஞ்சின வேழம் பிடியோடு இசைந்தாடும்
தண்பதக் காலையும் வாரார் எவன் கொலோ
ஒண்தொடி யூடு நிலை"[77]

என மொழிவர். உயர்நிலையை உடைய வெஞ்சினமிக்க வேழமாகிய ஆண் யானைகள், புழுதியில் புரண்டு தன் பெண் யானைகளுடன் விளையாடும். அவ்வழிச் செல்லும் தலைவன் அதனைக் காணக்கூடும். ஆகவே, அவர் உறுதியாக நம்மைக் காண வருவார். எனவே நீ கலங்காதிரு எனத்தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள். இக்கருத்தினைச் சங்கப் பாக்களும் உணர்த்தும். அதனை,

"கானல் அம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வான்உயர் நெடுமனல் ஏறி, ஆனாது

காண்கம் வம்மோ – தோழி

செறிவளை நெகிழ்ந்தோன் ஏறிகடல்நாடே”[78]

“கேளார் ஆகுவர் தோழி கேட்பின்

விழுமிது கழிவது ஆயினும் நெகிழ்நூல்

பூச்சேர் அணையின் பெருங்கவின் தொலைந்தநின்

நாள்துய்கெடப்பின நீடலர்மாதோ

ஒலிகழை நிவந்த ஓங்கு மலைச்சாரல்

புலிபுகா உறுத்த புலவுநாறு கல்அளை

ஆறுசெல் மாக்கள் சேக்கும்

கோடு உயர் பிறங்கல் மலை இறந்தோரே”[79]

என்ற செய்யுட்கள் புலப்படுத்தும். தலைவியே ஒன்றோடொன்று உராய்ந்து ஒலிக்கின்ற மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ளன. அப்படிப்பட்ட மலைப்பக்கத்தில் புலிகள் தன் வேட்டையாடிய உணவுபோக மீதமிருக்கும் உணவை அவ்விடத்திலே விட்டுச்செல்வதால் புலால் நாற்றமடிக்கும். சிறந்த பொருள் பெறுவதாக இருப்பினும் நெகிழ்ந்த நூலால் மலர்களால் சேர்ந்த படுக்கையினிடத்தே துயில்வதாக இருப்பினும் வருந்துகின்ற பெரிய அழகு நீங்கிய நினது இன்றைய துயரம் கெடும்படி இன்னும் தாமதியாமல் உடனே வருவார் எனப் பூங்கண்ணனார் புலப்படுத்துகிறார்.

தலைவன் பொருள்வயிற் பிரிந்தான். அதனால் தலைவி துன்பமடைந்தாள். அத்துன்பத்தை நீக்கும் வகையில் தோழி அவளிடம் உரை நிகழ்த்துகிறாள். அதனைப் புல்லங்கடனார்,

“அரங்கார்ந்த ஓமை அரிபடு நீழல்

செருக்கில் கடுங்களிறு சென்றுறங்கி நிற்கும்

பரற்கானம் பல் பொருட்டுச் சென்றார் வருவார்

நுதற்கு இவர்ந் தேறும் ஒளி”[80]

எனக்கூறுவர். அரக்கினது நிறத்தைப்போல் உள்ள ஓமை மரத்தின் நிழலின்கீழ் களிப்பில்லாத கடுங்களிறு தூங்கி நிற்கும். அப்படிப்பட்ட பரற்கற்கள் நிறைந்த காட்டுவழியில் பொருள் தேடச்சென்ற தலைவன் விரைவில் வருவார்; அவர் செலவை நீடிக்கமாட்டார் எனத்தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

தலைவன், தலைவியற்குப் பண்டைக் காலத்திலும், அதற்குப் பின்பும் இளம்வயதிலே திருமணங்கள் நடைபெற்றன. ஆகவே, அவன் குடும்பம் நடத்த பொருள் தேடவேண்டும். கற்புக் காலத்தில் தலைவியை விடுத்துத் தலைவன் பிரிந்து சென்றே ஆகவேண்டும். எனவே பிரிவு அக்காலத்தில் தவிர்க்க இயலாததாகவே இருந்திருக்கிறது. தலைவன் பிரிவால் தலைவி செய்வதறியாது திகைத்து நிற்பாள். அவளுக்குத் தேறுதல் மொழிகள் பலவற்றைச் சொல்லி தேற்றுவிப்பாள் தோழி என்பது கருத்து. தலைமகனது செலவுக் குறிப்பறிந்து ஆற்றாளாய தலைவியைத் தோழி உலகினது இயற்கை கூறியதனைக் கணிமேதாவியார்,

"ஆண்டகன் ஆமாற்றை ஆயுங்கால் ஆடவர்க்குப்
பூண்கடலைப் போற்றிப் புரிந்தமையால் பூண்கடனாச்
செய்பொருட்குச் செல்வராற் சில்மொழி நீ சிறிது
நைபொருட்கண் செல்லாமை நன்று"[81]

எனும் பாடலை அமைத்துள்ளார். சிலவாகிய தீஞ்சொற்களை உடைய தலைவியே ஆண்களுக்குக் கடமையாக ஆராய்ந்து கூறுவோமாயின் பொருளீட்டுதலேயாகும். ஆகவே நம் காதலர் நிச்சயமாகப் பொருளீட்டச் செல்பவரே ஆவார். ஆதலால் நீ தலைவன் பிரிவுக்காக வருந்தாதே எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

சங்க இலக்கியத்தில் உள்ள குறுந்தொகைப் பாடலொன்று இக்கருத்தையே வலியுறுத்துகிறது. அதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ,

"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்
மனையுறை மளிர்க்கு ஆடவர் உயிர்என
நமக்கு உரைத்தோரும் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே"[82]

எனக்கூறுவர். தோழி கூற்றாக வருகிற இப்பாடலில் தலைவன் பிரிவை எண்ணி வாடுகின்ற தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. தொழில் தான் ஆண் மக்களுக்கு உயிராகும். இல்லத்தில் இருந்து ஓம்பும் மகளிருக்கு கணவன் உயிராவர். எமக்கு எடுத்து உரைத்தவரும் நம் தலைவரே. ஆதலால் அழுதலை ஒழிவாயாக. நீ அழுதாயானால் தலைவன் செல்லமாட்டார். ஆகவே, வருந்தாதே என்கிறாள் தலைவியிடம் தோழி. இதேபோன்று ஐங்குறுநூற்றிலும் (178, 196) பாடல்கள் உள்ளன.

**3. தலைவனது பரத்தமைப் பண்பை எடுத்துரைத்தல்**

கற்பு வாழ்வில் நிகழும் பிரிவுகளாகத் தொல்காப்பியர் ஆறினைக் கூறுகிறார். அவற்றுள் உள்ள பரத்தமைப் பிரிவை எல்லோர்க்கும் உரியதாகக் கூறுவர் தொல்காப்பியர். அதனை,

"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்து அகன்று உறையார் என்மனார் புலவர்
பரத்தையின் பிரிந்த காலையான"[83]

என்ற நூற்பா சுட்டும். இதனை அடியொற்றித் தோன்றிய நம்பியகப்பொருள் பரத்தமைப் பிரிவு குறித்து விரிவாகப் பேசுகிறது. கணவன், மனைவிக்கு இடையே ஊடலை ஏற்படுத்துவதில் பரத்தைமைக்கு முழுமையான பங்குண்டு என்பதைச் சங்க அகநூல்கள் கூறும்.

**ஆண்மையாகுமோ? என வினவுதல்**

பரத்தைமைக் குறித்த கருத்தினை மூவாதியார்,

“உண்துறைப் பொய்கை வராஅல் இனமிதியும்
தண்டுறையூர தகுவதோ ஒண்டொடியைப்
பாராய் மனைதுறஞ் தச்சேரிச் செல்வதனை
ஊராண்மை யாக்கிக் கொளல்”[84]

என வெளிப்படுத்துவர். விரால் மீன்கள் தடாகத்திலே உணவுக்கு உரைந்து வாழும் அத்தகைய வளமிகு மருதநிலத்திற்குரிய தலைவனே! நீ தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையற் வசிக்கும் சிற்றூர்க்குச் செல்கிறாய். இதனைப் பெரிய காரியமாகக் கொள்வது உனது ஆண்மையாகுமா? எனத் தோழி தலைவனை வினவுகிறாள். விரால் மீன்கள் ஒரே இடத்திலேயே உண்டு உறைந்து வாழ்கின்றன. ஆனால், நீ நிலம் விட்டு நிலம் தாவிப் பரத்தமை மேற்கொள்கிறாயே எனத் தலைவனைத் தோழி சாடுவது இதனால் புலனாகும்.

**மாயமொழி உரைக்கும் மங்கை**

பரத்தையிற் பிரிந்து தலைமகனின் வரவினை கேட்டுத் தோழி தலைமகட்குக் கூறியது எனும் துறையில் அமைந்த பாடல் தோழி கூற்றாக வருகிறது. இதனை மூவாதியார்,

“வளவய லூரான் மருளுரைக்கு மாதர்
வளைஇய சக்கரத் தாழி – கொளைபிழையா
வென்றிடை யிட்டு வருமேல்நின் வாழ்நாட்கள்
ஒன்றி யனைத்து முளேன்”[85]

எனச் சுட்டுவர். பலவித வளத்தால் சிறந்த வயல்களால் சூழப்பட்ட மருத நிலத்திற்குரிய தலைமகன் மாய மொழிகளைக் கூறி மயக்கும் பரத்தையரிடம்

சென்றுள்ளான். அவர்களது வளைந்த சக்கரம் போன்ற கையினால் கொள்ளப்படாமல் நம்மிடம் திரும்பி வருவானாயின், வருங்காலத்திலே அவனைச் சாருவித்து வேண்டியனவெல்லாம் பெற்றவர் போல மகிழ்வேன் என்று தோழி தலைமகளிடம் கூறுகிறாள்.

இதேபோல் சங்க இலக்கியத்தில் மருத்திணையில் தோழி கூற்றாக 'வடம் வண்ணக்கன் தாமோதரனார்' எழுதிய பாடலொன்று பரத்தமை ஒழுக்கம் குறித்துக் கூறுகிறது. அதனை,

"யாரினும் இனியன் பேர் அனபினனே
உள்ளூர்க் குர்இத் துள்ளுநடைச் சேவல்
சூல் முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்
தேம் பொதிக் கொண்ட தீம் கழைக் கரும்பின்
நாறா வெண் பூக் கொழுதும்
யாணர் ஊரன் பாணன் வாயே"[86]

என்ற பாடலடிகள் உணர்த்தும். ஓர் ஊரில் வாழும் துள்ளல் நடையை உடைய ஆண் குருவி, கருப்பம் முதிர்ந்த பெண் குருவிக்குக் கரு உயிரோடு இருக்கும் இடத்தை அமைக்கும் பொருட்டுச் சாது பொழிந்த இனிய சோலையுடைய கரும்பினது மனம் வீசாத வெள்ளிய பூவைக் கோதி எடுத்து வந்து கூடு அமைக்கும். அப்படிப்பட்ட ஊருக்குத் தலைவன் என வாயில் வேண்டி வந்த பாணனிடம் எடுத்துரைக்கிறாள்.

இனிய தேணடையும், திங்களையும் உணவாகவும் மணமும் நன்னிறமும் இல்லாத கரும்பின் பூவைக்குருவி கொத்தும் ஊரான் என்றது. கற்புடைய தலைவி இரந்தும் அவள்பால் அன்பின்றி, அன்பும் கற்பும் இல்லாத பரத்தையரை விரும்பினான் என்று குறிப்பால் உணர்த்துகிறாள் தோழி.

சங்க காலச் சமூகத்தில் பரத்தமை ஒழுக்கம் நீக்கமற நிறைந்திருந்தது. அதனை அக்காலத்து எழுந்த இலக்கியங்கள் மெய்ப்படுத்தும். சங்க மருவிய

காலம் நீதியைப் போற்றிய, சட்டத்தை மதித்த சமூகமாகும். ஆதலால் தான் பரத்தமை குறித்த பாடல்கள் மிகுதியாக இடம்பெறவில்லை.

அக்காலச் சமூகம் பிறன்மனை நயத்தலை மகாப் பாவமாகக் கேடாகக் கருதியது. அது அச்சம் தரும்; இன்பம் தராது. இதனை அக்காலத்தில் தோன்றிய திருக்குறள் உணர்த்தும். அதனை,

"இருமணப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திரு நீக்கப்பட்டார் தொடர்பு"[87]

என்ற பகுதி விளக்கும். கள்ளுக்குடித்தல், சூதாடல், பரத்தையர் ஒழுக்கம் ஆகியன தீய ஒழுக்கங்களாகும் என்கிறார். இத்தகைய தீய பழக்கங்களினால் வரும் கேடுகளை,

"பகை பாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண்"[88]

என்ற குறள் உணர்த்தும். பரத்தமை பண்பால் நல்ல இன்பம் கிடைக்காது; அது பெருமை தராது. அதனால் பகை, பாவம், அச்சம், பழி வரும் என்று கூறுகிறார்.

**4. தலைவனின் செலவினை உணர்த்துதல்**

தலைவன் திருமணத்திற்குப் பிறகு ஆறு காரணங்களுக்காகப் பிரிந்து செல்வான் எனத் தமிழ் இலக்கண நூல்கள் இயம்புகின்றன. அவை முறையே ஓதல், தூது, வேந்தர்க்குற்றுழி, பொருட்பினி, காவல், பரத்தை ஆகியவை அமைகின்றன. இப்படிப் பிரியும் போது தலைவன் தலைவியிடம் சொல்லியும் பிரிவான், சொல்லாமலும் பிரிவான். ஆனால் தோழியிடம் சொல்லித்தான் பிரிவான்.

தலைமகளிடம் நேரடியாகச் சொன்னால் எங்கோ தலைமகள் தன்னைப் போகாமல் தடுத்து விடுவாளோ! அவளது அன்பின் மிகுதியால் தாமும் போகாமல் இருந்து விடுவோமோ என அஞ்சிய தலைவன் தோழியிடம் கூறிப் பிரிவான். தோழியும் தலைவியிடம் பக்குவமாகச் சொல்லித் தலைவியைத் தேற்றுவாள்.

'தலைமகன் செலவினைத் தலைமகட்குத் தோழி உணர்த்தியது' எனும் துறையில் உள்ள பாலைத் திணைப் பாடலில் செலவு குறித்த செய்தி அமைந்துள்ளது. இதனை மூவேதியார்,

"எழுத்துடைக் கல்நிரைக்க வாயில் விழுத்தொடை
அம்மா றலைக்குஞ் சுரநிரைத்தம்மா
பெருந்தகு தாளாண்மைக் கேற்க வரும்பொருள்
ஆகுமவர் காத லவா"[89]

எனப் புலப்படுத்துவர். பெருமையினையும், தகுதியினையுமுடைய ஊக்கத்தினுக்குப் பொருத்தமாக அருமையென பொருளைத் தேடுவதற்குத் தலைவன் செல்கிறான். அவன் செல்கின்ற வழியானது நடுகற்கள் வரிசையாக நடுவதற்குக் காரணமாகச் சிறப்பாக அம்பு தொடுக்கும் கொடையாலே பழமையாகிய தம் பகைவர்களை மறவர்கள் வருவதற்கு இடமாகிய பாலை நில வழியிலே ஒழுங்காகச் சொல்லுதலை உடையது எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

அகநானூற்றுப் பாடலொன்று தலைவன் பொருள் தேடச் செல்லும் சூழலை,

"நட்டோர் இன்மையும், கேளிர் துன்பமும்
ஒட்டாது உறையுநர் பெருக்கமும், காணூஉ
ஒருபதி வாழ்தல் ஆற்றுபதில்ல
பொன் அவிர் சுணங்கொடு செறிய வீங்கிய

மென்முலை முற்றம் கடவா தோர் என
நள்ளென் கங்குலும் பகலும் இயைந்து இயைந்து
உள்ளம் பொத்திய உரம்சுடு கூர்எரி
ஆள்வினை மாரியின் அவியா, நாளும்
கடறு உழந்து இவணம் ஆக...”[90]

என விளக்குகிறது. நட்டோர் மிடியையும், உறவினர் துயரத்தையும் பகைவர்களின் எக்களிப்பையும் உள்ளூரில் இருந்தே பார்த்துக் கொண்டிருப்பர்; அவர் யாரெணன், பொன்னிறச் சுணங்கும் திரட்சியும் வீக்கமும் மென்மையும் பொருந்திய முலைத் தடத்தை விட்டு அகலமாட்டாத ஆடவர்கள், யானும் இக்கூட்டத்தாருள் ஒருவனாக ஆகி விடுவேனோ? என அச்சத்தீ யாமத்தும் பகலும் உண்டானது. அதனை மாற்றும் பொருட்டு வீட்டைவிட்டு இதோ காட்டில் நடக்கின்றேன். இவ்வாறு பொருள் தேடப்பிரிந்து செல்லும் சூழலை செங்கண்ணனார் விவரிக்கிறார்.

**தலைவனுக்கு வாயில் மறுத்தல்**

தலைவியை விட்டுப் பிரிந்து சென்றுப் புறவொழுக்கம் நாடுகின்ற தலைவனை வாயில் மறுத்தலும் உண்டு. இதனைக் கண்ணன் சேந்தனார்,

“கடையாயர் நட்பே போல் காஞ்சிநல் லூர்
உடைய இளநல முண்டாய் – கடையக்
கதிர்முலை ஆகத்துக் கண்ணன்னார் சேரி
எதிர்நல மேன்று நின்றாய்”[91]

என உணர்த்துவர். காஞ்சி மரங்கள் மிகுந்த நல்ல மருதநிலத் தலைவனே! இடைப்பட்டவர்களாகிய கீழ்மக்களின் நலனோடு கூடிய காலத்துத் தலைமகளானவள் இளமை நலத்தால் ஏற்பட்ட தலைவியைக் கைக்கொண்டான். இப்பொழுது அவளைக் கைவிட்டு ஒளியினையுடைய முலையினையும், மேனியையும் கொண்ட உனக்குக் கண் போன்றவர்களாகிய

பரத்தையைச் சேர்ந்து சிற்றூர் சென்று அவர்களோடு வாழ்ந்தார். பின்பு இங்கு வருகிறாய் என வாயில் மறுக்கிறாள். புற ஒழுக்கம் நாடிச் சென்ற தலைவனைத் தோழி இடித்துரைத்து இல்லத்திற்கு உள்ளே விடாமல் மறுக்கிறாா். இப்பொருண்மையில் கைந்நிலையிலும் பாடல்கள் (பா.40, 44) அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் குறுந்தொகையில் பரணர் பாடிய பாடல் 'தோழி வாயில் மறுத்தல்' துறையில் அமைந்துள்ளது. அதனை,

"பாஅடி உரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவறலும் நுவருப்ப
அழிவது எவன்கொல், இப்பேதை ஊர்க்கே
பெரும்பூண் பொறையன் பேஎம்எதிர்கெல்லிக்
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல் இயல் பாவை அன்ன இம்
மெல் இயல் குறுமகள் பாடினாள் குறினே"[92]

என்ற அடிகள் சுட்டும். நற்றிணையில் ஆலங்குடி வங்கனார் எழுதிய பாடல் தோழி தலைமகனை வாயில் மறுத்தல் துறையில் அமைந்துள்ளது. அதனை,

"தட மருப்பு எருமைப் பிணர்ச் சுவல் இரும்போத்து
மட நடை நாரைப் பல் இனம் இரிய
நெடு நீர்த் தண் கயம் துடுமெனப் பாய்ந்து,
நாட் தொழில் வருத்தம் வீட, சேண் சினை
இருள் புனை மருதின் இன் நிழல் வதியும்
யாணர் ஊர! நின் மாண் இழை மகளிரை
எம் மனைத் தந்து நீ தழீஇயினும், அவர்தம்
புன் மனத்து உண்மையோ அரிதே; அவரும்
பைந் தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்த

நன்றி சான்ற கற்போடு

எம்பாடு ஆதல் அதனினும் அரிதே”[93]

என்ற அடிகள் கூறும். வளைந்த கொம்பையும், வலிமையான பிடரியையும் உடைய கரிய எருமைக்கடா, இள நடையையுடைய பல நாரைகள் கூட்டமெல்லாம் பயந்தோடும்படி நீர் நிரம்பிய குளிர்ச்சியான பொய்கையிலே திடுமென விழும். தன் அயர்ச்சி நீங்கிய பின் நீண்ட கிளைகளை உடைய இருள் நிரம்பிய மருத மரத்தின் இனிய நிழலின் கண்ணே தங்கும். அத்தகைய நாட்டிற்குரிய தலைவனே!

நின்னுடைய மாட்சிமை பொருத்திய அணிகலன்களை அணிந்த பரத்தை மகளிரை எம் மனையன் கண்ணே அழைத்து வந்து நீ குலமகளிரைப் போல மணந்து தழுவியிருந்தாலும் அவருடைய புன்மையான மனதிலே கரைவில்லாதபடி மெய்ம்மை தோன்றுதல் அரிதேயாகும். அவளும் பெரிய வளையணிந்த புதல்வியரையும், புதல்வரையும் ஈன்று நன்மையமைந்த கற்புடனே எம்பக்கத்து அமர்தலும் எனச் சினம் காட்டித் தலைவனைத்தோழி வாயில் மறுக்கிறாள். இதுபோன்ற படல்கள் சங்க இலக்கியத்தில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

### 6. தலைவனைப் புகழ்தல்

தலைவியோடு இணைந்து வாழ்கின்ற தலைவனைத் தோழி புகழ்தலும் உண்டு. இதனைத் தலைவனைப் பாங்கி புகழ்தல் என்று கூறுவர்.

#### புளியம்பழ வேட்கை

குளிர்ந்த குளத்திலே மலர்ந்துள்ள தாமரைப் பூவிலே உறைந்திருக்கிற பெரிய ஆண் அன்னப் பறவையினைக் கீழ்படிதலால் பெண் அன்னப் பறவையானது நீரிலிருந்து நினைக்கும்படியான கழனிகள் சூழப்பெற்ற மருத நிலத்திற்குரிய தலைவனே! வளப்பம் பொருந்திய குளத்தினைப் போன்ற உன்னுடைய மார்பானது உன்னோடு கூடி வாழும் இவளுக்கு மயக்கத்தைத்

தரும்; நீங்காத காம நோய்க்கு மருந்தாகும். அவளது அந்த விருப்பமானது எப்படியானது எனின் புளியம்பழத்தின் கண் மக்கள் கொள்ளும் விருப்பம் போல் மேலும் மேலும் விரும்பும் மேன்மையினைக் கொண்டதாகும். இதனைக் கணிமேதாவியார்,

“தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை
புண்கயத்து உள்ளும் வயலூர – வண்கயம்
போலும்நின் மார்பு புளிவேட்கைத்து ஒன்றிவண்
மாலுமா றாநோய் மருந்து”[94]

என மொழிவர். தலைவன் மிது தலைவி இடைவிடாத விருப்பம் உடைவளாய் இருக்கிறாள். அவளின் காதல் ஆழமானது அவளோடு நீ இணைந்திருக்கும் போது அவள் மகிழ்வோடு இருக்கின்றாள் எனத் தலைவியைப் புகழ்கிறாள். புளிப்புச் சுவையை ஒரு முறையை நாக்கில் சுவைத்தால் மறுபடி மறுபடி எனச் சுவைக்கத் தோனும். அதேபோல் தலைவியும் உன்னோடு மயங்கி இருக்க எண்ணுகிறாள் எனத் தோழி குறிப்பில் உணர்த்துகிறாள்.

**7. தலைவனைச் செலவழுங்குவித்தல்**

தலைவியை விடுத்துப் பிரியக் கருதிய தலைமகனை, “நீ பிரியாதே பிரிந்தால் தலைவி இறந்து படுவாள் எனக்கூறித் தலைவனைச் செலவிற்குப் போகவிடாமல் தடுத்தல்” செலவழுங்குவித்தல் ஆகும். இதனைக் கணிமேதாவியார்,

“பொருள்பொரு ளென்றார்சொற் பொன்போலப் போற்றி
அருள்வொரு ளாகாமை யாக – அருளான்
வளமை கொணரும் வகையினான் மற்றோர்
இளமை கொணர இசை”[95]

என நவில்வர். இவ்வுலகத்தில் உள்ள எல்லாவற்றையும் நிறைவேற்றுவது பொருளே. இதை யாவரும் கருத்திற்கொள்ள வேண்டும் என்று

உமக்குச் சொன்னவர்களின் சொல்லை நீ பொன்னே போல் போற்றுகிறாய். ஆனால், நீ தலைவியின் மீது கொண்டுள்ள அன்பின் மீதாகிய அருளின் மீதும் அக்கறை வேண்டும். நீ அப்படிக் கருதாமல் பொருள்தேடச் சென்றாயேயானால் தலைவியின் இளமை நலன் எல்லாம் அழிந்து போய்விடும் எனத் தலைவியின் இயல்பைக்கூறி தலைவனைச் செலவழுங்குவிக்கிறாள் தோழி.

இதேபோன்று நற்றிணையில் மதுரைக் காருலவியங் கூத்தனார் கூறும் பாடலும் இதே பொருண்மையில் அமைந்துள்ளது. அதனை,

"கவிதலை எண்கின் பரூஉ மயிர் ஏற்றை
இரை தேர் வேட்கையின் இரவில் போகி
நீடு செயல் சிதலைத் தோடு புனைந்து எடுத்த
அரவாழ் புற்றம் ஒழிய, ஒய்யென
முரவாய் வள் உகிர் இடப்ப வாங்கும்,
ஊக்கு அருங் கவலை நீந்தி மற்று – இவள்
பூப்போல் உண்கண் புதுநலம் சிதைய
வீங்கு நீர் வரக் கண்டும்
தகுமோ? – பெரும! – தவிர்க நம் செலவே"[96]

என்ற அடிகள் விளக்கும். பெருமானே! இவளுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்களின் புதிய அழகு சிதையும்படி மிக்க கண்ணீர் வடிப்பாள். கவிந்த தலையையும் பருத்த மயிரையுமுடைய ஆண் கரடி தான் இரைதேடி உண்ணும் விருப்பத்தினால் இரவிலே சென்று மேலும் நீடிய செய்கையை உடைய கரையான் கூட்டம் செய்துயர்த்திய புத்துக்களில் பாம்புகள் குடியிருக்கும். அப்படிப்பட்ட காட்டு வழியில் செல்லாதே என்கிறாள் தோழி.

கரையானின் புற்றிலே பாம்பு குடிபோவதால் கரையான்கள் எல்லாம் இறந்துவிடும். அதுபோல, நீ தலைவியைவிட்டு பிரிவதால் இவளுடைய

காமவேட்கையானது அவளுடைய உயிரைக் கொன்றுவிடும். ஆதலால் செல்லாதே எனத் தவிர்க்கிறாள் தோழி.

குழந்தை ஈன்றெடுத்த மனைவியை விடுத்து பிரிய விரும்புகிறான் தலைமகன். அதனைத் தோழி மறுக்கிறாள். இது ஐங்குறுநூற்றில்,

"புறவணி நாடன் காதல் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீகெலின் தெண்ணீர்ப்
போதவீழ் தாமரையன்ன நின்
காதலம் புதல்வின் தூழுமினி முலைக்கே"[97]

என அமைந்துள்ளது. தலைவனே! நீ பிரிந்தாயானால் குழந்தை பாலுக்காக அழும் எனத் தோழி கூறுகிறாள். நீ பிரிவாயாயின் தலைவி உயிரை விடுப்பாள். குழந்தையும் பாலின்றி இறக்கும் எனத் தோழி செலவழுங்கிறாள். இப்பொருண்மையில் சங்க இலக்கியங்களில் நிறைய பாடல்கள் உள. அதனை,

"பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறு இருங் கதுப்பும்
போதும் பனையும் போலும் யாழநின்
மாதர் உண்கணும் வனப்பின் தோளும்
இவை காண்தோறும் அகம் மலிந்து
.....................................................
.....................................................
யாதனின் பிரிகோ மடந்தை
காதல் தானும் கடலினும் பெரிதே"[98]

என்ற நற்றிணைப் பாடல் சுட்டும். ஈண்டு தலைவன் தலைவியின் உறுப்பு நலனைப் பாராட்டி மொழிகிறான். நின்னைக் காண்தோறும் அறம் நிலை பெற்றேன்; சான்றோர் அறநெறி வாழ்ந்து அதன் பயனை இயல்பாக

துய்க்குமாறு யானும் துய்த்தேன். நீயும் புதல்வனும் சிறந்த கிடைத்தற்கரிய பேறுகளாக இருப்ப இனி எதன் பொருட்டுப் பிரிவேன் எனத் தலைவன் கூறுகிறான். தலைவியிடத்துத் தலைவனுக்குள்ள அன்பின் மேன்மையை இதனால் உணரமுடியும்.

தலைவியை விடுத்து தலைவன் பிரியக் கருதினான். அதனைத் தோழியிடம் கூறினான். அதுகேட்ட அவள் தலைவனிடம் மொழிவதை மாறன்பொறையனார்,

"கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ணர்
ஆட்டிவிட் டாறலைக்கும் அத்தம் பல நீந்தி
வேட்ட முனைவயிற் சேறிரோ ஐயநீர்
வாட்டங்கண் மாதரை நீத்து"[99]

எனச்சுட்டுவர். கடத்தற்கரிய வழியினைக் கடந்து வேட்டையாடச் செல்கிறாய். அவ்வாறு செல்லும் நீ திரும்பி வருவாயோ? இல்லை மாட்டாயோ? எனத் தலைவி வருந்துகிறாள் எனத் தோழி தலைவனிடம் உரைக்கிறாள். தலைவியின் நிலையினையும், வழியின் அருமைப்பாட்டையும் கூறி ஈண்டு தலைவனின் செலவினைத் தோழி தடுக்க முயல்வது புலனாகும்.

**தொகுப்புரை**

சங்க மருவிய கால பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் உள்ள தோழி கூற்றுப் பாடல்களின் தொகை 190. அவற்றுள் 99 களவிலும், 91 கற்பிலும் அமைந்துள்ளன.

பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் உள்ள தோழி கூற்றுக் களவுப் பாடல்கள் ஐந்து நிலையில் வெளிப்படுகின்றன. அவை சேட்படை, குறை நயத்தல், நயப்பித்தல், குறியிடம், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல் என்பனவாகும். அவை தோழியின் திறப்பாட்டை விளக்குகின்றன.

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் உள்ள தோழி கூற்றுக் களவுப் பாடல்களைப் பாடிய புலவோர் தொகை ஐவர் ஆவார்.

சேட்படை துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை மூன்று. இவற்றைப் பாடிய புலவர் கண்ணன் சேந்தனார் ஆவார்.

குறை நயத்தல், நயப்பித்தல் துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை மூன்றாகும். இவற்றைப் பாடிய புலவர் இருவராவர். அவர்கள் மாறன் பொறையனாரும், கணிமேதாவியரும் ஆவார்.

குறியிடம் எனும் துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை இருபத்தெட்டாகும். இதனைப் பாடிய புலவர் ஐவராவார்கள். அவர்கள் மாறன்பொறையனார், மூவாதியார், கண்ணன்சேந்தனார், கணிமேதாவியார், புல்லங்காடனார் என்போராவர்.

வரைவு கடாதல் எனும் துறையில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை நாற்பதாகும். இவற்றைப் பாடிய புலவோர் நால்வர். அவர்கள் மாறன் பொறையனார், மூவாதியார், கண்ணன் சேந்தனார், கணிமேதாவியார் என்போராவார்.

அறத்தொடு நிற்றல் துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை ஆறாகும். இவற்றைப் பாடிய புலவோர் மூவர். அவர்கள் மூவாதியார், கணிமேதாவியார், புல்லங்காடனார் ஆகியோராவார்.

திணைமொழி ஐம்பதில் சேட்படைத் துறையிலமைந்ததாக மூன்று பாடல்கள் உள்ளன. மலைவாழ் வேட்டுவர்களின் காவல் மிகுதியையும், கடிய சொற்களையும் காரணம் காட்டித் தலைவனைச் சேட்படுத்துகிறாள் தோழி.

தலைவன் தினைப்புனத்திற்கு வந்ததையும், அவன் தன்னிடம் வினவியதையும், தனக்கு அடிக்கடி பூந்தழைகள் தந்து இரந்து நின்றதையும்,

தோழி தலைவியிடம் மொழிகிறாள். இத்தன்மையிலமைந்த குறை நயத்தல், நயப்பித்தல் பாடல்களாக மூன்று உள்ளன. அவை ஐந்திணை ஐம்பதில் ஒன்றும், திணைமாலை நூற்றைம்பதில் இரண்டுமாக உள.

தலைவனும், தலைவியும் களவில் சந்திக்கும் இடமே குறியிடமாகும். இது குறித்த செய்திகள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் உள்ளன. பகற்குறி குறித்து ஒன்பது பாடல்களும், இரவுக்குறி குறித்து பதிமூன்று பாடல்களும், அல்லகுறி குறித்து ஆறு பாடல்களும் உள்ளன.

தலைவி எவ்விடத்தில் பகற்பொழுதில் விளையாடுவாள் என்பதைத் தலைவனுக்கு உணர்த்துகிறாள் தோழி. கடற்கரையை அடுத்த பூஞ்சோலையிலும், மணற் பரப்பிலும் பரதவர் மீன்களை உலர வைப்பர். அவ்விடத்துத் தலைவி விளையாடுவாள் எனக் கூறுகிறாள்.

இரவுக்குறி குறித்த பதின்மூன்று பாடல்களில் தலைவியின் மேனியிடத்துப் படர்ந்துள்ள பசலையை நீக்குவதற்காகத் தலைவன் மாலைக் காலத்து வருவான் என்கிறாள் தோழி. கடற்கரைப்பட்டினத்தில் விளக்குகள் எல்லாவிடத்தும் எரிவதால் நீ அங்கு வரவேண்டாமெனவும், முத்துக்களின் ஒளி பரவியிருக்கும் காலத்தில் நீ அங்கு வரவேண்டாமெனவும், இரவில் நீ வரும் வழியிடைத் திரியும் விலங்குகளால் உனக்கு ஏதாவது துன்பம் நேரிடுமெனத் தலைவி வருந்துவதால் நீ இங்கு வரவேண்டாமெனவும் தோழி தலைவனுக்கு இரவுக்குறி மறுக்கிறாள்.

தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வந்தான். வந்தவன் அல்லகுறிபட்டு அவளைச் சந்திக்காது சென்றதையும், தலைவன் குறியைத் தெளிவுபட நிகழ்த்தாதையும், தலைவி பறவைகளின் ஒலியைத் தேரின் ஒலியெனக் கேட்டு ஏமாற்றத்திற்குள்ளானதையும் அல்லகுறிப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

நம்பியகப்பொருள் வரைவு கடாதலை நான்கு வகையாகவும், அதன் பிரிவுகளை இருபதாகவும் கூறும். வரைவு கடாதல் துறையில் தோழி கூற்றாக அமைந்த பாடல்களின் தொகை நாற்பதாகும். அதனுள் தலைவியின் உடல் மெலிவு, வழியின் அருமைப்பாடு, ஊரிலெழுந்த அலர், இற்செறிப்பு, தலைவியின் அச்ச உணர்வு, தினைப்புனக் காவலின்மை ஆகியவற்றைத் தோழி தலைவனுக்கு உணர்த்தி வரைவு கடாவுகிறாள்.

நெருங்கிப் பழகியவரின் துன்பத்தை நீக்குதலே சிறப்பு எனவும், தலைவிக்கு நன்மை செய்வீராக எனவும், வரையாவிடின் அவள் இறப்பாள் எனவும் கூறித் தலைவனை வரைவிற்குத் தூண்டுகிறாள் தோழி.

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் உள்ள களவுப் பாக்களின் துறைகளுள் வரைவு கடாதலே மிகுதி பெறுகிறது. தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலை எழுவகையாகக் கூறுவர்.

மலர்களை அணிந்திருக்கும் தலைவனொருவனே உன் மகளின் மனத்தில் இருப்பவன் என்பதைச் செவிலியிடம் தோழிக் குறிப்பாள் மொழிகிறாள்.

ஆற்றில் இழுத்துச் செல்லப்பட்ட மகளை ஒருநாள் தலைவனொருவன் காப்பாற்றினான். அவன் மீது இவள் காதல் கொண்டாள். தற்போது அவனைச் சந்திக்க இயலாமல் உள்ளாள். இதனால் அவள் உடலில் நோய் மிகுந்தது என்ற கருத்தைத் தோழி செவிலியிடம் குறிப்பாகப் புலப்படுத்தினாள்.

பதினெண்கீழ்க்கணக்கு அகப்பாடல்களின் கற்புப் பாடல்கள் ஏழு நிலைகளில் அமைந்துள்ளன. அவை தலைவிக்குப் பருவங்காட்டி வற்புறுத்தல் ஐம்பத்து ஐந்து பாடல்கள், தலைவியை ஆற்றுவித்தல் ஒன்பது பாடல்கள், தலைவனது பரத்தமைப் பண்பை எடுத்துரைத்தல் ஒரு பாடலும், தலைவனின் செலவினை உணர்த்துதல் ஒரு பாடலும், தலைவனுக்கு வாயில்

மறுத்தலில் ஐந்து பாடல்களும், தலைவனைப் புகழ்தல் ஒரு பாடலும், தலைவனைச் செலவழுங்குவித்தல் இரண்டு பாடல்கள் என்பனவாகும். இவற்றில், தலைவிக்குப் பருவங்காட்டி வற்புறுத்தல் என்ற துறையிலமைந்த பாடல்களே மிகுதியாக (ஐம்பத்து ஐந்து பாடல்கள்) உள்ளன.

தலைவிக்குப் பருவம் காட்டி வற்புறுத்தல் எனும் துறையிலமைந்த பாடல்களைப் பாடிய புலவோர் எண்ணிக்கை ஐந்து. அவர்கள் மாறன் பொறையனார், கண்ணன் சேந்தனார், கணிமேதாவியார், மதுரைக் கண்ணங்கூத்தனார், புல்லங்காடனார் என்போராவர்.

தலைவியை ஆற்றுவித்தல் எனும் துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை ஒன்பதாகும். இவற்றைப் பாடிய புலவோர் மூவராவர். அவர்கள் மாறன் பொறையனார், மதுரைக் கண்ணங்கூத்தனார், கணிமேதாவியார் ஆகியோராவார்.

தலைவனின் பரத்தமைப் பண்பை எடுத்துரைத்தல் எனும் துறையிலமைந்த பாடல் ஒன்றாகும். அதனை மாறன் பொறையனார் இயற்றியுள்ளார்.

தலைவனின் செலவினை உணர்த்துதல் என்ற துறையில் ஒரு பாடல் அமைந்துள. அதனை இயற்றியவர் மூவாதியாராவார்.

தலைவனுக்கு வாயில் மறுத்தல் எனும் துறையிலமைந்த பாடல்களின் எண்ணிக்கை ஐந்தாகும். இதனைப் பாடிய புலவோர் மாறன்பொறையனார், கண்ணன் சேந்தனார், புல்லங்காடனார் என்பவராவார்.

தலைவனைப் புகழ்தல் என்ற துறையலமைந்த பாடல் ஒன்றாகும். இதனைப் பாடிய புலவர் கணிமேதாவியார் ஆவர்.

தலைவனைச் செலவழுங்குவித்தல் எனும் துறையிலமைந்த பாடல்கள் இரண்டாகும். இவற்றை மாறன்பொறையனார், கணிமேதாவியார்

ஆகிய இருவரும் பாடியுள்ளனர். தலைவியின் நலனழிவும், இறந்துபடுவாள் தலைவி எனவும் கூறித் தலைவனைச் செலவழுவிக்கிறாள் தோழி.

மழைவருவதற்குள் தலைவர் வருவர் எனவும், கார்காலம் வந்ததால் தலைவர் வந்து உன்மேனிப் பசலை போக்குவர் எனவும், தலைவன் பழிக்கு அஞ்சுபவனாதலால் உன்னை விரைந்து வந்து காண்பானெனவும் கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி.

பொய்மொழி கூறும் பரத்தையர் பால் பிரிந்து சென்று வந்துள்ளாய். இது உன் ஆண்மைக்குப் பெருமை தருமா? என வினவுகிறாள் தோழி.

சங்க இலக்கியத்தில் பரத்தையொழுக்கப் பாடல்கள் மிகுதியாக உள. அக்காலத்தில், அவ்வொழுக்கம் மேன்மையுற்று இருந்தது. நீதி இலக்கிய காலத்தில் அறக்கருத்துக்கள் சமூகத்தில் உயிர்நிலையாக இருந்தது. அதனால் அச்சமூகத்தில் பரத்தையொழுக்கம் குறைந்திருந்தன. இதனால் அக்காலத்தில் எழுந்த இலக்கியங்களில் இது குறித்த பாடல்கள் குறைவாக இடம்பெற்றன எனக் கருத இடமுண்டு.

வரைவு கடாதல் எனும் துறையிலமைந்த களவுத் துறைப் பாடல்களே தோழி கூற்றில் மிகுதியாக (நாற்பது பாடல்கள்) இடம் பெற்றுள்ளன. கணிமேதாவியார் இத்துறைப் பாடல்களை மிகுதியாக இயற்றியுள்ளார்.

தலைவிக்குப் பருவங்காட்டி வற்புறுத்தல் எனும் துறையிலமைந்த கற்புத் துறைப் பாடல்களே தோழி கூற்றில் மிகுதியாக (ஐம்பத்து ஐந்து பாடல்கள்) இடம்பெறுகின்றன. இத்துறையிலமைந்த பாடல்களை மிகுதியாக அமைத்தவர் மதுரைக் கண்ணங்கூத்தனாரே ஆவார்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.கள.1071
2. மேலது, 1072
3. ந.சுப்பிரெட்டியார், தொல்காப்பியர் கட்டும் வாழ்க்கை, ப.19
4. நக்கீரர், இறையனார் களவியல் உரை. 1
5. தொல்.கள. 1
6. தொல்.செய். 178
7. அகப்பொருள் விளக்கம், 25
8. தொல்.கள. 1060
9. நம்பி.அகப். 144
10. தி.மெ.ஐம். 5
11. மேலது, 6
12. மேலது, 8
13. நற்.15
14. நம்பி. அகப். 114
15. ஐந்.ஐம். 14
16. தி.நூற்.31
17. இறை.கள.12
18. தொல்.கள.40
19. தொல்.கற்.42
20. தி.மா.நூற்.3
21. மேலது, 29
22. மேலது, 44
23. மேலது, 51
24. மேலது, 54
25. தொல்.கள.41

26. தொல்.உரைவளம், களவியல், ப.462

27. தி.ஐம்.9

28. மேலது, 4

29. தி.நூற். 48

30. மேலது, 49

31. நம்பி. அகப். 159

32. ஐந்.ஐம். 41

33. மேலது, 49

34. மேலது, 50

35. த.வா.கோ. 191

36. தி.மா.நூற். 6

37. மேலது, 7

38. நம்பி.அகப்.165

39. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.112

40. ஐந்.ஐம். 46

41. மேலது, 16

42. தி.மொ.ஐம்.7

43. தி.நூற். 35

44. மேலது, 50

45. ஐந்.ஐம். 2

47. ஐந்.எழு. 8

48. மேலது, 61

49. தி.மொ.ஐம்.10

50. மேலது, 44

51. ஐந்.எழு.6

52. மேலது, 7

53. ஐந்.ஐம். 48

54. ஐந்.எழு.1

55. மேலது, 10

56. நம்பி.அகப். 173

57. ஐந்.எழு.15

58. தி.ஐம்.21

59. ஐங். 147

60. தொல்.பொருள். 112

61. தொல். பொருள்.204

62. இறை,அகப், நக்கீரர் உரை. 29

63. நம்பி.அகப். 48

64. கைந். 8

65. தி.நூற்.21

66. மேலது, 22

67. ஐங். 248

68. குறுந். 23

69. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.76

70. தொல். கற்.1

71. கார். நாற்.1

72. மேலது, 4

73. மேலது, 5

74. நற். 286

75. குறுந். 63

76. ஐந்.ஐம். 38

77. கார். நாற். 38

78. ஐங். 199

79. குறுந். 253

80. கைந்.19

81. தி.மா.நூற்.52

82. குறுந். 89

83. தொல்.கற்.1133

84. ஐந்.எழு.52

85. மேலது, 54

86. குறுந். 85

87. திருக்குறள். 920

88. மேலது, 146

89. ஐந்.எழு.27

90. அகநா. 279

91. தி.மொ.ஐம்.35

92. குறுந்.89

93. நற்.330

94. தி.நூற்.142

95. மேலது, 85

96. நற். 325

97. ஐங். 424

98. நற். 166

99. ஐந்.ஐம். 34

# பிறர் கூற்றுப் பாடற்திறன்

அக வாழ்வில் பிறர் எனக் கருதப்படுவோர் பிற மாந்தர்களாகிய செவிலி, நற்றாய், பாங்கன், காமக்கிழத்தி, வாயிலோன், மக்கள், கண்டோர் ஆகியோர் ஆவர். பதினெண் கீழ்க்கணக்கு அக நூல்களில் இத்தகைய பிற மாந்தர்களின் கூற்றுக்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றைக் கைகோள் அடிப்படையில் ஆராய்ந்து விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**பிற மாந்தர்களின் கூற்றுக்கள்**

பதினெண் கீழ்க்ணக்கு அகநூல்களில் பிறமாந்தர்களின் கூற்றுக்களாக இருபத்தோரு பாடல்கள் உள. அவை "ஐந்திணை ஐம்பதில் இரண்டும்"[1] "ஐந்திணை எழுபதில் இரண்டும்"[2] "திணைமொழி ஐம்பதில் ஒன்றும்"[3] "திணைமாலை நூற்றைம்பதில் பதினாறுமாக அமைந்துள்ளன."[4] இவற்றைக் கூற்று அடிப்படையில் பகுத்து விளக்க முடியும். அவை "பாங்கன் கூற்றில் மூன்றும்" "நற்றாய் கூற்றில் ஏழும்" "செவிலி கூற்றில் இரண்டும்" "கண்டோர் கூற்றில் நான்கும்" "விறலி கூற்றில் ஒன்றும்" "அறிவர் கூற்றில் ஒன்றும்" "வாயில் கூற்றில் ஒன்றும்" 'காமக்கிழத்தி கூற்றில் ஒன்றும்', 'பாங்காயினர் கூற்றில்' ஒன்றுமாக அமைந்துள்ளன.

இவ்விருபத்தோரு பாடல்களைக் களவு, கற்பு எனும் இரு கைகோள் நிலைக்குள் அடக்க முடியும். அவற்றுள் 16 பாடல்கள் களவினதாகவும், ஐந்து பாடல்கள் கற்பினதாகவும் உள. இவை ஈண்டு கூற்று அடிப்படையில் விளக்க முறுகின்றன.

**பாங்கன்**

தலைவனின் உயிர்த்தோழன் பாங்கன் ஆவான். இடந்தலைப் பாட்டிற்குப்பின் தலைவன் பாங்கனின் துணை கொண்டு தலைவியைக் கூடுவான். இதனைத் தொல்காப்பியர் பாங்கற் கூட்டம் என்பர். களவு வாழ்வில்

தோழிக்குக் கொடுத்த சிறப்பினைத் தொல்காப்பியர் பாங்கனுக்குக் கொடுக்க இயலவில்லை எனக்கூற இயலும்.

"பாங்கொடு தழாஅல்"[5]

எனச் சுருங்கக் கூறுவது கொண்டு மெய்தொட்டுப் பயிறல் என்ற தலைவன் கூற்றில் வரும் "குற்றம் காட்டிய வாயில்"[6] என்பது பாங்கன் கூற்று என இளம்பூரணர் கூறுவர்.

அத்துடன் "தலைவன் மாட்டுச் சோர்வாலும் காதல் மிகுதியாலும் நேர்வற்ற பாவங்களை எடுத்துக்கூறும் பாங்கன்"[7] என்பர் இளம்பூரணர்.

தலைவியை நெறிப்படுத்துகையில் தோழி எவ்வாறு செயல்படுகிறாளோ அதுபோல் தலைவனை நெறிபடுத்தும் பாத்திரம் பாங்கன் ஆவான். அவன் நிமித்தம் குறித்துத் தொல்காப்பியர் "பாங்கன் நிமித்தம் பன்னிரண்டு என்ப"[8] என்பர். அதற்கு நச்சினார்க்கினியர் "பாங்கன் துணை கொண்டு கூடும் கூட்டம் பன்னிரண்டு. அவை பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், இவை நான்கும் கைக்கிளைக்குரியது. அசுரம், இராக்கதம், பைசாசம் இவை மூன்றும் பெருந்திணைக்குரியது. மற்றவை ஐந்தும் அன்பின் ஐந்திணைக்குரியது. கைக்கிளை, பெருந்திணை, அன்பின் ஐந்திணை ஆகிய மூவிடத்தும் பாங்கனுக்குக் கூற்று நிகழும் என விளக்கம் பகர்வர்"[9] இவ்விளக்கம் தமிழ் மரபுக்கு ஒவ்வாது என வ.சுப.மாணிக்கம் கூறுவர்.

**கீழ்க்கணக்கு அகநூல்களில் பாங்கன்**

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் பாங்கன் கூற்றாக அமைந்த பாடல்கள் மூன்று. அவை இரண்டு நிலைகளில் அமைந்துள. அவற்றை,

1. குறிவழியில் தலைவியை வியந்தது
2. தலைவியைத் தலைவனிடம் வியந்தது

எனப் பகுத்து விளக்கமுடியும்.

### *1. குறிவழியில் தலைவியை வியந்தது*

*தலைவியின் நீண்ட கண்களைக் கண்டு மீண்டு வந்த தலைவன் மலையைப் போன்ற நெஞ்சினன் ஆவான் என வியக்கிறான் பாங்கன். இதனை கணிமேதாவியார்,*

*"எறிந்துழுவார் தங்கை இருந்தடங்கண் கண்டு*
*மறிந்துழல்வா னோஇம் மலை"*[10]

*என விளக்குவர். தலைவியின் அழகிய கண்களைப் பார்த்துத் திரும்பிய தலைவன் சிறிதும் குற்றம் இல்லாதவன் எனப் பாங்கன் மொழிவதனைக் கணிமேதாவியார்,*

*"இணையடி நில்லா இருந்தடங்கன் கண்டும்*
*துணை நாடி னன்தோ மிலன்"*[11]

*என உணர்த்துவர்.*

### **2. தலைவியைத் தலைவனிடம் வியந்தது**

*தலைவன், தான் விரும்பிய தலைவி குறித்துப் பாங்கனிடம் கூறினான். அத்தலைவியைப் பாங்கன் கண்ணுற்றான். அந்நிலையில் அவனிடத்து வியப்புத் தோன்றியது. அதனால், அந்த தலைவியை கணிமேதாவியார்,*

*"பண்ணாது பண்மேற்றே பாடும் கழிக்கானல்*
*எண்ணாது கண்டார்க்கே ஏரணங்கால் எண்ணாது*
*சாவார்சான் றாண்மை சலித்திலா மற்றிவளைக்*
*காவார் கயிறுரீ இவிட் டார்"*[12]

*எனப் புகழ்கிறார். கொல்லேறு போலத் தலைவியை அவளது பெற்றோர் போக விட்டுள்ளனர் எனத் தலைவனிடமே தலைவியின் அழகைப் புகழ்ந்துரைக்கிறான் பாங்கன். தலைவனிடமே தலைவியைப் புகழ்ந்துரைக்கும் பாடல்கள் எட்டுத்தொகை நூல்களில் காணப்பெறவில்லை.*

**நற்றாய்**

நற்றாய் தலைவியைப் பெற்ற தாய் ஆவாள். சங்க இலக்கியத்தில் செவிலிக்கு அடுத்த நிலையில் அவள் சிறப்பிற்கு உரியவளாவாள். செவிலிக்குக் கூறிய கூற்றுக்கள் யாவும் நற்றாய்க்கும் உரியதாகும் என்பர் தொல்காப்பியர். அதனை,

"தாய்க்கும் வரையார் உணர்வுடன் படினே"[13]

என்ற அடி உணர்த்தும். நற்றாய் கூற்றாகப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஏழு படல்கள் உள. அவற்றை,

1. அறத்தொடு நிற்றல்
2. தனக்குள் வருந்தியது
3. படிமத்தானை வினவியது

என்ற நிலைகளில் பகுத்து விளக்க முடியும்.

**அறத்தொடு நிற்றல்**

தலைவியை மணந்து கொள்ள எண்ணிய தலைவன் மணம் பேச சான்றோரை அனுப்பிய நிலையில், நற்றாய் தலைவியின் தந்தைக்கும், தமையனுக்கும் உண்மையை,

"வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்க்கொடுப்பின் அல்லது – கோடா
எழிலும் முல்லையும் இரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து"[14]

என எடுத்துரைக்கிறாள். குறைவில்லாத தலைவனின் வடிவை ஏற்றுக் கொண்டவராய் உடன்பட்டு நீரை வார்த்துத் தருதலான மணமுறையில் மகளாகத் தரவேண்டும். தலைவியின் அழகிற்கு இவ்வுலகம் பரிசாகக்

கொள்ளாது மாறுபடாத காதலை விலையாது மதிக்க வேண்டும் என்று நற்றாய் அறத்தொடு நிற்பது புதுமையான சான்றாகும்.

**தனக்குள் வருந்தியது**

தலைவி தலைவனுடன் உடன்போக்கில் சென்றாள். அவன் சென்றதறிந்த நற்றாய் வருத்தம் மிக்குற்றாள். பாலை நிலத்தின் வெப்பத்தையும், அவ்வழியிடை வாழும் மலைப்பாம்புகளையும் பொருட்படுத்தாது அவன் பின் தொடர்ந்தாள் தலைவி என்பதே நற்றாயின் மன வருத்தமாகும். அதனைக் கணிமேதாவியார்,

“எரிந்து சுடுமிரவி ஈடில் கதிரால்
விரிந்து விடுகூந்தல் வெஃகா – புரிந்து
விடுகயிற்றின மாசுமை வீயுளீள் அத்தம்
அடுதிறலான் பின்சென்ற ஆறு”[15]

என்ற அடிகள் விளக்கும். நற்றாய் தலைவியிடத்துக் கொண்ட அன்பின் மிகையால் இது வெளிப்படுகிறது. தலைவியைப் பிரிந்த நிலையில் ஒரு தாய் எய்தும் மனப்போராட்டத்தை ஈண்டு காணமுடிகிறது. மகளைப் பிரிந்த எல்லாத் தாய்க்கும் இவ்வுணர்வு பொதுமையான ஒன்றாகும்.

பாலை நிலத்தில் தலைவனுடன் சென்ற தலைவி தான் விளையாடப் பயன்படுத்திய பொம்மை, பந்து, பசுங்கிளி ஆகியவற்றையும், தோழியரையும் எண்ணிப் பார்க்கவில்லை. அதனை மாறன் பொறையனார்,

“பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு
ஆயமு மொன்று மிவை நினையாள் – பால்போலும்
ஆய்ந்த மொழியினாள் செல்லுங்கொள் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு”[16]

என்பர். பொருளைவிடத் தலைவனே தனக்கு உரிமையுடையவன் எனத் தலைவி கருதியதே அவள் எதைப் பற்றியும் எண்ணாதற்குக் காரணமெனக்

கருத வாய்ப்புண்டு. தலைவனிடத்துத் தலைவி கொண்ட அன்பின் மேன்மையை இதனால் உணரமுடியும்.

தலைவனுடன் தலைவி உடன் சென்றாள். அவள் சென்ற நிலம் பாலை நிலம். அந்நிலத்தில் பருந்துகள் வாழ்கின்றன. அவைகளின் நிழல் பாலை நிலத்தில் வீழ்கின்றது. அப்பருந்துக் கூட்டத்தினைக் கண்ட தலைவி, அச்சத்துடன் அவ்வழியிடையே தலைவனுடன் செல்வாளோ? எனத் தாய் வருந்துவதைக் கண்ணன் சேந்தனார்,

“ஏற்றிய வில்லின் எயினர் கடுஞ்சுரம்
பாற்றினஞ் சேரப் படுநிழற் கண்டஞ்சிக்
கூற்றன வல்வில் விடலையோடு என்மகள்
ஆற்றுங்கொ லைய நடந்து”[17]

என்ற அடிகள் புலப்படுத்தும். கற்கள் நிரம்பிய பாலை வழியில் செல்லும் தலைவி சோர்வு எய்தாமல் தலைவனைத் தொடர்ந்து செல்வாளோ? அல்லது தொடர்ந்து செல்லயியலாது வருந்துவாளோ? என நற்றாய் வருத்தமுறுவதனை ஈண்டு விளக்கியுள்ளார். மகள் தனக்குத் தெரியாமல் பிறன் ஒருவனுடன் உடன்போக்கில் சென்றதற்காகச் சினமேதும் கொள்ளாமல், மாறாக அவளது நிலை எப்படி இருக்குமோ? என இரங்குகிறாள். ‘பெற்றமனம் பித்து’ என்ற கூற்று ஈண்டு மெய்ப்படுகிறது. தலைவியிடத்து தாய் கொண்ட அன்பின் மேன்மையை ஈண்டு உணரமுடிகிறது. மகளைப் பிரிந்து தாய் எய்தும் துயரினைச் சங்க அக இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் பறை சாற்றும்.

**படிமத்தானை வினவியது**

தலைவியைத் தலைவன் உடன் போக்கில் அழைத்துச் சென்றான். அது அறிந்த நற்றாய் படிமத்தானிடம் தன் உள்ளத்து உணர்வை வெளிப்படுத்துகிறாள். தலைவியை அழைத்துச் சென்றவன் தன் இல்லிற்கு

மணவிழாச் சிறக்கும் பொருட்டு வருவானா? இல்லை அவனது இல்லிற்கு அவளை அழைத்துச் செல்வானா? என வினவுகிறாள். அதனை கணிமேதாவியார்,

"வேறாக நின்னை வினவுவேன் தெய்வத்தால்
கூறாயோ கூறும் குணத்தினனாய் – வேறாக
என் மனைக் கேறக் கொணருமோ வெல்வளையத்
தன்மனைக்கே உய்க்குமோ தான்"[18]

எனப் புலப்படுத்துவர். தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்கே வந்து அவளை முறையாங்கு திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனத் தாயின் உள்ளம் விரும்புவதையும், அதற்கு மாறாக எதுவும் நிகழக்கூடாது என அவளது மனம் எதிர்நேக்கியிருப்பதையும் ஈண்டு காணமுடிகிறது. தாயின் மனம் இருநிலைப்பட்ட நிலையில் போராடுவதை இங்கு உணரமுடிகிறது. அதற்குக் காரணம் தலைவி மீது தாய் கொண்ட அன்பின் மிகையேயாகும். அதனைத் தொல்காப்பியர்,

"ஆய்பெருஞ் சிறப்பின அருமறை கிளத்திலின்
தாயெனப் படுவாள் செவிலியாகும்"[19]

என்பர். "செவிலி அறிவில் சிறந்தவளாகவும், பெருமை சான்றவளாகவும் தலைவியின் களவினை வெளிப்படுத்தும் பொழுது நற்றாயிடம் அறத்தொடு நிற்பவளாகவும், உடன்போக்கில் தலைவியைத் தேடிச் செல்பவளாகவும் காணப்படுகிறாள்."[20]

**செவிலி**

செவிலி நற்றாயின் தோழியாக வளர்ந்து பின் தோழியின் தாயாகவும் தலைவியின் வளர்ப்புத் தாயாகவும் வாழும் குடும்ப உரிமை உடையவள். அத்துடன் இறந்த காலத்திலும், எதிர்காலத்திலும் தன் குலத்தில் உள்ளோர்

வழிக்கொள்ளுமாறு நல்லவை கூறுதலும் அல்லவை கடிதலும் செவிலிக்கு உரியது எனத் தொல்காப்பியர் கூறுவர். அதனை,

"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக்குரிய ஆகும் என்ப"[21]

என்ற அடிகள் புலப்படுத்தும். கீழ்க்கணக்கு அகநூல்களில் செவிலி கூற்றாக இருபாடல்கள் உள. அவை,

1. குராமரத்தோடு பேசுதல்
2. தலைவியின் இல்லற மாண்பு உரைத்தல்

என்ற நிலைகளில் வெளிப்படுகின்றன.

### 1. குராமரத்தோடு பேசுதல்

தலைவி உடன்போக்கில் சென்றாள். அவளைத் தேடிக்கொண்டு செவிலி பாலை நிலம் அடைந்தாள். அங்குள்ள குராமரத்தை நோக்கி

"தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
ஈன்றாய் நீ பாவை இருங்குரவே – ஈன்றாள்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டாய் ஈதென்று வந்து"[22]

எனச் செவிலி கூற்று நிகழ்த்துகிறாள். செவிலி தலைவியின் மீது கொண்டிருந்த அன்பின் மிகையைக் கணிமேதாவியார், இக்கருத்தால் உணர்த்துகிறார்.

### 2. தலைவியின் இல்லற மாண்பை உரைத்தல்

தலைவனுடன் தலைவி இல்லறம் மேற்கொள்வதனைச் செவிலி கண்ணுற்றாள். தான் கண்ணுற்றதைச் செவிலி,

"தேங்கமழ் பொய்கை அகவயல் ஊரனைப்
பூங்கண் புதல்வன் மிதித்துழக்க – வீங்குத்

தளர்முலை பாராட்டி யென்னுடைய பாவை
வளர்முலைக் கண்ஞெமுக்கு வார்"[23]

எனக் கூறுகிறாள். தலைவி பாவையன்ன மகவு பெற்றாள். இந்நிலையில், அவளது கொங்கைகள் முன்னோக்கித் தளர்ந்தன. அக்கொங்கைகளைத் தழுவி தலைவன் மகிழ்ந்திருந்தான் என்கிறாள் செவிலி. தலைவன், தலைவியரது அன்புடை வாழ்க்கையைக் கண்ணுற்று மகிழ்ந்துள்ளாள் செவிலி. அம்மகிழ்வை அவளது தாயும் பெற வேண்டும் என்பதே செவிலியின் எண்ணம். அதனாலேயே தான் கண்டதை நற்றாயிடம் வெளிப்படுத்துகிறாள். அன்புடை வாழ்க்கையை இருவரும் மேற்கொள்கின்றனர் என்ற கருத்தை நற்றாய்க்கு புலப்படுத்தவே செவிலி இவ்வாறு கூற்று நிகழ்த்தினாள் என்பது கருத்து.

தலைவன் தலைவி இருவரும் அன்புடை வாழ்க்கை மேற்கொண்டு வருதலைச் சங்க இலக்கிய செவிலிக் கூற்றுப் பாடல்கள் புலப்படுத்தும். இப்பாடல்களின் கருத்தாக்கத்தையொட்டியே இப்பாடல்கள் இயற்றப் பட்டிருக்கக் கூடும் என்பது கருத்தாகும்.

**கண்டோர்**

"தலைவனும், தலைவியும் உடன்போக்கின் போது இடைச்சுரத்தில் சந்திக்கும் மாந்தரே கண்டோர். இது தலைமக்களின் களவொழுக்கம் வெளிப்பட்டு கற்பொழுக்கமாக மலர்ந்த சூழலில் நிகழும். எனவே, தான் கண்டோரைக் கற்பின்கண் கூற்றுக்குரிய மாந்தராகக் கூறியுள்ளார் என்பர்"[24] சு.இராசாராம்.

"தொல்காப்பியர் கண்டோர் பேசுவதாக ஏழு"[25] இடங்களைக் கூறுவர். இவையாவையும் உடன்போக்குத் தொடர்பானவை. அவை,

1. பொழுது ஆறும் உட்குவரத் தோன்றி
   வழுவினாகிய குற்றங் காட்டலும்
2. ஊரது சார்புஞ் செல்லும் தேயமும்
   ஆர்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும்

3. புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெரிர் கூறி விடுப்பினும்

4. ஆங்கத் தாய் நிலை கண்டு தடுப்பினும்

5. விடுப்பினும்

6. சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும்

7. விரவினும்

ஆகியனவாகும்.

கண்டோர் கூற்றாகப் பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் அமைந்த பாடல்கள் நான்கு. அவை இரு நிலைகளில் வெளிப்படுகின்றன. அவை,

1. தலைமகனிடம் கூற்று நிகழ்த்துதல்

2. செவிலியிடம் கூற்று நிகழ்த்துதல்

என்பனவாகும்.

**தலைமகனிடம் கூற்று நிகழ்த்துதல்**

தலைவன் தலைவியை உடன் போக்கில் அழைத்துச் சென்றான். அவர்களைக் கண்ட கண்டோர்,

“அத்த நெடிய அழழ்கதிரோன் செம்பாகம்
அத்தமறைந் தானிவ் அணியிழையோடு – ஒத்த
தகையினால் எஞ்சீ றூர்த் தங்கினிராய் நாளை
வகையினி ராய்ச் சேறல் வனப்பு”[26]

எனக் கணிமேதாவியார் மொழிந்துளர். தலைமக்கள் செல்ல வேண்டிய வழிகள் நீண்டுள்ளன. கதிரவன் மறையும் வேளை வந்ததால், அவ்விருவரும் சிற்றூரிடத்தே தங்கி மறுநாள் காலைச் செல்லலாமென முடிவெடுத்தனர் எனப் பகர்கின்றார். இதனால், கண்டோரின் செய்தியை முறைப்படுத்தும் திறன் புலனாகும். இச்செய்தி தொல்காப்பியர் மொழியும் “ஊரது சார்வுஞ் செல்லும் தேயவும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும்”[27] என்பதற்கு

மேற்கோளாகவும் அமைகிறது. சிற்றூரில் தங்கியிருக்கும் தலைமக்களைக் கண்ணுற்ற பெண்கள் அவர்களிடத்து இரக்கம் கொண்டனர். அதனை ஓதலாந்தையார்,

"எல்லிடை அசைந்த கல்லென் உறூர்ப்
புனையிழை மகளிர் பயந்த
மனைகெழு பெண்டீர்க்கு நோவுமார் பெரிதே"[28]

எனக் கூறுவர். வழிச் சென்றோரைக் கண்டோர் கூட்டிச் சென்று தங்க வைத்தனர் எனும் குறிப்புக் காணப்பெறவில்லை.

**கண்டோர் செவிலியிடம் பேசுதல்**

சுரத்திடைச் சென்ற தலைமகனையும், தலைமகளையும் கண்ட கண்டோர் செவிலியிடம் கூறுவதனைக் கணிமேதாவியார்,

"அஞ்சுடர் நீன் வாண்முகத்து ஆயிழையு மாறிலா
வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண்டு – அஞ்சி
ஒரு சுடரு மின்றி உலகுபா ழாக
இருசுடரும் போந்தன என்றார்"[29]

எனப் பகன்றனர். சந்திரனைப் போன்ற தலைவியும், வேலைப் போன்ற தலைவனும் பாலை வழியில் சென்றனர். அவர்களைக் கண்டஞ்சிய இரண்டு சுடர்களும் உலகம் முழுவதும் கெடுமாறு மறைந்தன. அவர்கள் நெடுந்தொலைவைக் கடந்து சென்றனர். இனி அவர்களைத் தேடிச் செல்லுதல் பயனற்ற ஒன்றாகுமெனக் கூறுகின்றனர். செவிலியின் உள்ளத்துணர்வை ஆற்றும் பாங்கில் கண்டோர் நிகழ்த்துவதனைக் கணிமேதாவியார்,

"முகந்தா மரைமுறுவல் ஆம்பல்கண் நீலம்
இகந்தார் விரல்காந்த ளென்றென்று – உகந்தியைந்த

மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே
ஏழைதான் செல்லும் இனிது”[30]

என மொழிகின்றனர்.

மலர்களை விரும்பி கூட்டமாக வண்டுகள் வாழும். அவைதரும் நிழலில் தலைவி சென்றாள். ஆகவே நீ வருத்தம் கொள்ளாதே எனச் செவிலியைத் தேற்றுகின்றனர். கண்டோர் அதனை “எண்ணிய எண்ணம் எளிததோ” எனக் கூறுகின்றனர். இதே நிலையினை ஐங்குறுநூறு செய்யுளொன்று,

“உன்மகள் யானையும் புலியும் திரியும்
மிக்க காட்டு வழியே தலைவனோடு கடந்துவிட்டாள்
ஆதலின் அவளைப்பற்றி நினைவை இனி நீ கைவிடுக”[31]

எனச் சுட்டும்.

**விறலி**

ஆடற்கலையில் வல்ல மங்கை விறலி. விறலி என்பதற்கு மெய்ப்பாடு எனப் பொருளுண்டு. கூத்தரைப்போல் எண் வகை மெய்ப்பாடும் புறத்தே தோன்ற நடிக்கும் ஆற்றல் வாய்ந்தவள் விறலி. நற்றிணைக்குத் துறை வகுத்தவர்கள் இவளைப் பரத்தையின் தோழியாகக் கொண்டுள்ளனர்.

கீழ்க்கணக்கு அகநூல்களில் விறலி கூற்றாக ஒரு பாடல் உளது. பல வாயில்களை மறுத்த தலைவி, எனக்கு வாயில் நேர்ந்தாள் என்கிறாள் விறலி. அதனைக் கணிமேதாவியார்,

“கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
பழமை பயனோக்கிக் கொல்லோ – கிழமை
குடிநாய்கர் தாம்பல பொற்றாரிற் கேளா
அடிநாயேன் பெற்ற அருள்”[32]

எனப் புலப்படுத்துவர். மிகவும் தாழ்மை கொண்ட யான்; தலைவியிடத்து வாயிலாகப்புக்கேன். என்னைத் தலைவி ஏற்று அருள் புரிந்தாள். அதனால், எனக்கு மகிழ்வு கிட்டியது எனத் தோழியிடம் விறலி கூறுகிறாள். எட்டுத்தொகை நூல்களில் விறலி கூற்றில் பாடல்கள் அமையப்பெறவில்லை.

**அறிவர்**

"அறிவரை இலக்கண விளக்கம் அறிஞர் என்று குறிக்கின்றது"[33] கலித்தொகை "சோதிடராகக் குறிப்பிடுகின்றது"[34] "தலைவன் தலைவி ஆகிய இருவருக்கும் உறுதிமொழிகளைக் கூறும் பெரியோரே அறிவர் என்கிறது நம்பியகப்பொருள்"[35] கற்பில் செவிலிக்கு உரியனவாகக் கூறப்பட்ட கூற்றுக்கள் இரண்டும் "அறிவர்க்கும் உரியன என்று தொல்காப்பியர் மொழிகின்றார்"[36] தலைவனும், தலைவியும் அறிவரது ஏவற்படி நடக்கும் இயல்புடையவர்கள். ஆதலால், அவர்கள் இருவரையும் இடித்துரைத்து ஒருவழி நிறுத்தும் செயல் அறிவர்க்கு உரியதாகும்"[37] எனத் தொல்காப்பியர் இயம்புவர்.

உணர்வு வயின் வராது ஊடல் தலைவிமாட்டு ஊடிய தலைவனிடம் அறிவர் கூற்று நிகழ்த்துவதாகத் திணைமாலை நூற்றைம்பதில் ஒரு பாடல் (149) உள்ளது. தலைவனிடம் தலைவி ஊடல் கொண்டாள். ஊடலில் அவள் உறுதியாக நின்றாள். அதனால், தலைவன் பிரிந்து போனான். தலைவனின் செயலினை உணர்ந்த அறிவர், அவனிடத்துத் தலைவி கொண்டுள்ள உண்மை அன்பை விளக்கினர்; அவளுடன் சேர்ந்து வாழுமாறு கூறினர். அதுவே 'உணர்ப்பு ஊடலின்று தெளிதல்' எனப்படும். அதனைக் கணிமேதாவியார்,

"புண்கிடந்த புண்மனுநின் நீத்தொழுகி வாழினும்
பெண்கிடந்த தன்மை பிறிதரோ – பண்கிடந்து
செய்யாத மாத்திரையே செங்கயல் போற் கண்ணினாள்
நையாது தான்நாவை மாறு"[38]

என மொழிவர்.

**வாயில்**

"தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, இளையோர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் ஆகிய பன்னிருவரும் வாயில்கள் ஆவர்" அவர்களுக்குரிய கூற்றுக்களைத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார்.

"தொல்காப்பியர் வாயில்கள் நிகழ்த்தும் கூற்றுத் தொடர்பாகச் சில மரபுகளையும் மொழிகின்றார். எல்லா வாயில்களும் தலைவன், தலைவியரின் மகிழ்ச்சியைப் பொருளாகக் கொண்டு கூற்று நிகழ்த்த வேண்டும்."[39]

"தலைவனிடம் கடுஞ்சொற் கூற வேண்டுமெனில் நேரடியாகக் கூறக்கூடாது. அவனைச் சிறைப்புறமாக வைத்துக் கூறுவது போலக் கூறல் வேண்டும்."[40] தலைவி முன்னர்த் தலைவனுடைய கொடுமைகளைக் கூறுதல் கூடாது. ஆயின் தலைவனுடைய கொடுமை கூறல் வருந்தும் தலைவிக்கு ஆறுதல் மருந்தாய் அமையும் என்றால் அதனைக் கூறலாம்.

தலைமகளின் இல்லில் புகுந்து பழகி அறியும் முறைமையுடைய வாயிலோன் தலைவியின் அன்பின் சிறப்பினைக் குறிப்பறிந்து முறைப்படி தலைவனுக்கு உரைப்பதைத் திணைமாலை நூற்றைம்பதில் கணிமேதாவியார்,

"மண்கிடந்த வையக்கோர் மற்றும் பெரியராய்
எண்கிடந்த நாளான் இகழ்ந்தொழுதப் – பெண்கிடந்த
தன்மை யொழியத் தரள முலையினாள்
மென்மைசெய் திட்டாள் மிக"[41]

எனக்கூறும். எளிமையும், இனிமையும் உடைய தலைவியின் அன்பை இல்வாழ்க்கையில் கைக்கொண்டு நடத்தல் வேண்டுமெனத் தலைவனிடம் வாயிலோர் உரைக்கின்றனர். கணவன், மனைவியர் இன்முகத்துடன் வாழ்வதே இல்லறச் சிறப்பிற்கு உகந்த வழியாகும்; அதனைக் கைக்கொண்டு வாழ்தல் நலம் பயக்குமெனத் தலைவனுக்கு வாயிலோர் அறிவுறுத்துகின்றனர்.

எட்டுத்தொகை இலக்கியங்களில் வாயிலோர் கூற்று காணப்பெறவில்லை. மாறாக வாயில்களிடம் பரத்தை, தோழி பேசுவதாக மட்டும் பாடல்கள் அமைந்துள்ளன.

**காமக்கிழத்தி**

தொல்காப்பியர் செய்யுளியலில் கூற்றிற்குரியவர்களைக் குறிப்பிடும் பொழுது காமக்கிழத்தியைப் பரத்தை" என்றும், கற்பியலில் இவளது கூற்றுக்களைத் தொகுத்து மொழியும் போது காமக்கிழத்தி"[42] என்றும் கூறுவர். அகத்திணைப் பாடல்களில் இவள் சிறப்புடையவளாகவே விளங்குகிறாள். காமக்கிழத்தியின் சிறப்புக் குறித்து நச்சினார்க்கினியர் "காமக்கிழத்தியராவர் கடனறியும் வாழ்க்கை உரையராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர்"[43] என விளக்குவர். இவ்விளக்கம் தொல்காப்பியரின் மனக்கருத்தின் வழிபட்டது.

தலைவன் யாதானும் ஒரு வினை குறித்துப் பிரியுங்கால் வருந்தும் தலைவியையும், காமக்கிழத்தியையும் ஆற்றிச் செல்வான் என்றும், பின்பு வினை முடிந்து மீண்டு வந்தவிடத்து அவ்விருவரிடமும் மகிழ்ந்து உரையாடுவான் என்றும் தொல்காப்பியர் கூறுவர். அக்கருத்தால், காமக்கிழத்தி தலைவியொடு ஒப்ப மதிக்கத்தக்கவள் என்பதும், தலைவனொடு இல்லறம் நிகழ்த்தும் உரிமையுடையவள் என்பதும் புலனாகும். காமக்கிழத்திக்குக் குழந்தைபெறும் உரிமை அக்காலத்தில் இல்லை. இற்கிழத்திக்கே இவ்வுரிமை இருந்தது.

காமக்கிழத்தி தலைவனைத் தன் தோழியிடம் இகழ்ந்து உரைக்கிறாள். அதனைக் கணிமேதாவியார்,

"என்கேட்டி ஏழாய் இருநிலத்தும் வானத்து
முன்கேட்டுங் கண்டு முடிவறியேன் – பின்கேட்டு
அணியிகவா நிற்க அவன்அணங்கு மாதர்
பணி இகவான் சாலப் பணிந்து"[44]

எனக் கூறுவர். தலைவியிடும் ஆணைகளைத் தலைவன் தவறாமல் செய்து முடிக்கிறான். அவனுக்குத் திருமணமானதை நான் பூலோகத்திலும், சொர்க்கத்திலும் ஒருபோதும் கேட்டறியவில்லை என வருந்துகிறாள் காமக்கிழத்தி. தலைவன் காமக்கிழத்தி சொல்வதைக்கேட்டு நடவாமல் இருந்திருப்பான். அதனால், மனம் வெகுண்ட காமக்கிழத்தி தன் தோழியிடம் தன் மன வேதனையை வெளிப்படுத்துகிறாள். தலைவனுக்குத் திருமணமானது காமக்கிழத்திக்குத் தெரியவில்லை. தலைவன் காமக்கிழத்தியை ஏமாற்றி மணம் முடித்திருப்பானோ? என்ற ஐயத்தை இக்கருத்து ஈண்டு முன்வைக்கிறது. சங்க இலக்கியத்திலும், நீதி இலக்கியத்திலும் இவ்வுணர்வு காமக்கிழத்திக்கு அமைந்துள்ளது கண்கூடு. ஆனால், திருமணமானவனை மணந்துவிட்டேனே என்ற சிந்தனை சங்க கால காமக்கிழத்திக்கு வந்ததாகத் தெரியவில்லை. அதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றில்லை. சங்கமருவிய காலத்தில் திருமணமான ஆணை திருமணமாகாதக் பெண் மணந்துள்ளாள் என்பது கருத்து.

**பாங்காயினார்**

கற்பில் கூற்று நிகழ்த்துதற்குரிய பன்னிருவருள் பாங்காயினார் குறித்துத் தொல்காப்பியர் கூறவில்லை. திணைமாலை நூற்றைம்பதில் ஒருபாடல் (144) பாங்காயினர் கூற்றில் அமைந்து காணப்பெறுகிறது. களவு வாழ்வில் தலைவனின் நண்பனாகப் பாங்கனையும், கற்பு வாழ்வில் பாணனையும் குறிப்பிடும் இலக்கணங்கள் பாங்காயினார் என்று ஒருவரைக் குறிப்பிட்டமையால் கற்பு வாழ்வில் தலைவனோடு தொடர்புடைய சிறப்பில்லாதத் தோழர்களைப் பாங்கயினார் எனக் குறித்தல் வேண்டும்.

தலைவி பூப்புற்றதைத் தெரிவிப்பதற்காகத் தோழியொருத்தியைச் செவ்வணி அணிவித்து, பரத்தைபால் சென்ற தலைவனிடம் விடுத்துள்ளனர். அதனைக் கணிமேதாவியார்,

"அரத்த முடீஇ அணிபழுப்பப் பூசிச்
சிரத்தையால் செங்கழுநீர் சூடிப் – பரத்தை
நினைநோக்கி கூறினும் நீமொழியல் என்று
மனைநோக்கி மாண விடும்"[45]

என்பர். செம்பட்டும், சிவந்த குவளை மலரும் முறையே உடுத்தியும் சூடியும் தலைவனைக் காண தோழி வந்தாள். வந்தவள் அவனை நோக்கி "மனைநோக்கி மாணவிடும்" என்றுரைத்தாள்.

**தொகுப்புரை**

அக வாழ்வில் பிறர் கூற்றுக்குரியோர் எனக் கருதப்படுவோர் செவிலி, நற்றாய், பாங்கன், காமக்கிழத்தி, வாயில், கண்டோர் ஆகியோராவார்.

பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் பிறமாந்தர் கூற்றுக்களாக அமைந்த பாடல்கள் இருபத்தொன்றாகும். பாங்கன் கூற்றில் மூன்று செய்யுளும், நற்றாய் கூற்றில் ஏழு செய்யுளும், செவிலி கூற்றில் இரண்டு செய்யுள்களும், கண்டோர் கூற்றில் நான்கு செய்யுள்களும், விறலி கூற்றில் ஒரு செய்யுளும், அறிவர் ஒரு செய்யுளும், வாயில் கூற்றில் ஒரு செய்யுளும், காமக்கிழத்தி கூற்றில் ஒரு செய்யுளும், பாங்காயினர் கூற்றில் ஒரு செய்யுளும் உள.

பிறர் மாந்தர் கூற்றுக்களாக உள்ள 21 பாடல்கள் கைகோள் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. அவை களவில் பதினாறும், கற்பில் ஐந்துமாக உள.

அகவாழ்வில் தலைவனுக்குத் துணையாகச் செயல்படுபவன் பாங்கன். அவன் கூற்றுப்பாடல்கள் தலைவியை வியத்தல், தலைவியின் அழகைத் தலைவனிடம் வியத்தலென இருவகையாகப் பகுத்து விளக்கப்பட்டுள்ளன.

நற்றாய் கூற்றுப்பாடல்கள் ஏழு. அவை அறத்தொடு நிற்றல், தலைவி உடன் போன நிலை, தாய் வருந்தியது ஆகிய மூன்று பகுப்புகளாகப் பகுத்து விளக்கப்பட்டுள்ளன.

களவுக் கற்புத் துறையில் அமைந்த 21 பாடல்களில் நற்றாய் கூற்றாக ஏழு பாடல்கள் அமைந்துள. அதனை மாறன் பொறையனார் (இரண்டு பாடல்கள்), மூவாதியார் (ஒரு பாடல்), கண்ணன் சேந்தனார் (ஒரு பாடல்), கணிமேதாவியார் (மூன்று பாடல்கள்) ஆகியோர் இயற்றியுள்ளனர். இவர்களுள் கணிமேதாவியாரே நற்றாய் கூற்றில் மிகுதியான பாடல்களை அமைத்துள்ளார்.

தலைவியின் வளர்ப்புத்தாய் செவிலி. அவள் கூற்றில் அமைந்த இரண்டு பாடல்கள் தலைவியின் இல்லற மேன்மையைக் கூறுவதாகவும், செவிலி குரா மரத்தொடு பேசுவதாகவும் அமைந்துள.

செவிலியோடு தலைமக்கள் பேசுவதாகவும், கண்டோரிடம் செவிலி பேசுவதாகவும் செவிலி கூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன. மூவாதியார், கணிமேதாவியார் ஆகிய இருவரும் செவிலி கூற்றுப் பாடல்களை இயற்றியுள்ளனர்.

எட்டுத்தொகை நூல்களில் இடம் பெறாத விறலி பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களில் இடம் பெற்றிருப்பது கண்டறியப்பட்டுள்ளது.

கற்பு வாழ்வில் ‘வாயில்’ என்ற கூற்றாளர் இடம் பெற்றுள்ளது ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது. இக்கூற்றாளர் எட்டுத்தொகை இலக்கியங்களில் இடம்பெறவில்லை. இது ஒரு புதுவகை வளர்ச்சியேயாகும். வாயிலின் பெயர் இங்கு சுட்டப்பெறவில்லை.

கற்பு வாழ்வில் அறிவர் கூற்று நிகழ்த்துவதை எட்டுத்தொகை நூல்களில் காணமுடியவில்லை. பதினெண்கீழ்க்கணக்கு நூலான

திணைமாலை நூற்றைம்பதில் அறிவர் கூற்று இடம் பெற்றுள்ளமை ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

திணைமாலை நூற்றைம்பதில் மட்டும் காமக்கிழத்தி, பாங்காயினார் கூற்று இடம்பெற்றுள்ளது. ஏனைய நூல்களில் அவளது கூற்று இடம் பெறவில்லை.

கண்டோர் (நான்கு பாடல்கள்), பாங்கன் (மூன்று பாடல்கள்), பாங்காயினார் (ஒரு பாடல்), விறலி (ஒரு பாடல்), காமக்கிழத்தி (ஒரு பாடல்), வாயில் (ஒரு பாடல்), அறிவர் (ஒரு பாடல்) ஆகிய கூற்றாளர்களின் 12 பாடல்களை கணிமேதாவியாரே இயற்றியுள்ளார். இவை அனைத்தும் திணைமாலை நூற்றைம்பதில் இடம்பெற்றுள்ளன. மூவாதியார், கணிமேதாவியர் ஆகிய இருவரே செவிலி கூற்றுப் பாடல்களை (இரண்டு பாடல்கள்) இயற்றியுள்ளனர்.

மாறன் பொறையனார், மூவாதியார், கணிமேதாவியார், கண்ணன் சேந்தனார் ஆகிய நால்வரும் நற்றாய் கூற்றுப் பாடல்களை (ஏழு பாடல்கள்) யாத்துள்ளனர்.

கண்டோர், பாங்கன், பாங்காயினார், விறலி, காமக்கிழத்தி, வாயில், அறிவர் ஆகிய எழுவரின் கூற்றிலமைந்த 12 பாடல்களைக் கணிமேதாவியார் ஒருவரே இயற்றியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. ஐந்.ஐம்.33, 37
2. ஐந்.எழு.40, 45
3. தி.மொ.ஐம்.20
4. தி.நூற்.15, 28, 45, 47, 65, 69, 71, 72, 89, 75, 90, 134, 135, 144, 146, 149
5. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள், ப.202
6. மேலது, 1
7. மேலது, களவு, 1060
8. தொல். களவு. 13
9. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல். பொருள், ப.92
10. தி.நூற். 28
11. மேலது, 45 (3–4)
12. மேலது, 47
13. தொல். களவியல். 26
14. தி.நூற். 15
15. மேலது, 75
16. ஐந்.ஐம். 33
17. தி.ஐம். 20
18. தி.நூற். 90
19. தொல்.பொருள். களவியல், 122
20. தி.ரமா, தொல் – திருக்குறள், களவியல் ஒப்பீடு, ப.54
21. தொல்.பொருள். கற்பியல், ப.151
22. தி.நூற். 65
23. ஐந்.எழு. 45

24. சு.இராசாராம், சங்க அகப்பாடல்களில் கண்டோர் கூற்று, ப.95
25. தொல். கற்பு, 1099
26. தி.நூற். 69
27. தொல். அகம். 986
28. ஐங்.382 : 3–4
29. தி.நூற். 71
30. மேலது, 72
31. ஐங்.386
32. தி.நூற். 134
33. இலக்கண விளக்கம், ப.69
34. கலித். 35
35. நம்பியகப்பொருள், 108
36. தொல். கற்பு. 1139
37. தொல். அகம். 938
38. தி.நூற். 149
39. தொல். கற்பு. 1127
40. மேலது, கற்பு, 1124
41. தி.நூற். 146
42. தொல். செய்யு. 1145
43. மேலது, 1146
44. தி.நூற். 135
45. மேலது, 144

# சமுதாய நிலை

இலக்கியமும், சமுதாயமும் நெருங்கிய தொடர்புடையவை "சமுதாயத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்"[1] என்பர் டி.போனல்ட். படைப்பாளன் தான் வாழும் சமுதாயத்தில் வாழும் ஓர் அங்கம். அந்தச் சமுதாயத்திற்காக அவன் உருவாக்கும் நுண்கலையே இலக்கியம். "இலக்கியங்கள் என்பவை மக்கள் நன்மைக்காகவே படைக்கப்பட்டவை. கலை கலைக்காகவே என்று கண்மூடிக் கொள்வதைப் போல இலக்கியம் இலக்கியத்திற்காக அன்று மக்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவதற்காகவே எழுந்தவை"[2] என்று சாமி சிதம்பரனார் குறிப்பிடுவார்.

சங்க காலச் சமுதாயத்தை அறிந்துகொள்ளச் சங்க இலக்கியங்கள் பெரிதும் துணை செய்கின்றன. இலக்கியங்களினால் சமுதாயம் தோன்றவில்லை. "மக்கள் பலர் கூடி வாழும் சமுதாயக் கூட்டுறவிலிருந்து இலக்கியம் முகிழ்க்கும்"[3] என்பர் வ.சுப. மாணிக்கனார். இலக்கியங்கள் தம் காலத்திய சமுதாயத்தைத் தெரியப்படுத்துவனவாக உள்ளன. புலவர்கள் இலக்கியங்கள் படைக்கும் போது தம் வாழ்வில் நிகழ்ந்த அனுபவங்களையும் சமூகத்தில் நிகழ்ந்தவற்றையும் மையமாகக் கொண்டே இலக்கியம் படைக்கின்றனர். அவ்வகையில், நீதி இலக்கிய காலகட்டத்தில் நிகழ்ந்த சமூக நிகழ்வுகளை அக்காலத்துத் தோன்றிய இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அவற்றை ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## சமுதாயம்

சமுதாயம் என்பன பற்றிச் சமூகவியலார் பல விளக்கங்களை அளித்துள்ளனர். பழக்க மரபு, செயலாற்றும் முறை, அதிகார வலிமை, ஒருவருக்கொருவர் உதவுதல் ஆகியவற்றின் ஓர் அமைப்பு பல குழுமங்கள் பிரிவுகள் ஆகியவற்றை நெறிப்படுத்தும் ஒழுங்கு முறையாகவும் இருப்பது எதுவோ அதுவே சமூகம்"[4] என்று மெக்காலியர் பேக் என்பார் கூறுகின்றார்.

வ.சுப.மாணிக்கம் தமிழர் கண்ட அகவிலக்கியக் கட்டிடத்திற்கு வேண்டும் துணைக் கூறுகளும் தமிழ்ச் சமுதாயத்திலிருந்தே கிடைத்தன”[5] என்று கூறுகின்றார். இதனால், இலக்கியமும் சமுதாயமும் நெருங்கிய தொடர்புடையன என்பது புலனாகிறது.

படைப்பாளியும் அவன் சார்ந்த சமுதாயத்தின் உறுப்பினன் ஆவான். அவன் அதிலிருந்து தனிப்பட்டவனல்லன். அவனுக்கென்று ஒரு வாழ்க்கை உண்டு. அவனும் ஒரு சமூக உயிர் தான். படைப்பாளன் தனது வாழ்வில் தான் காணும் அகப்புறக் காட்சிகளைத் தனது கற்பனையுடன் இணைத்துக் கலைப் படைப்பாக்குகிறான்.

“இலக்கிய ஆசிரியர்கள் சமூகத்தைப் புறக்கண்களாலும், அகக் கண்களாலும் ஆழ்ந்து நோக்குகின்றனர். இதனால் சமூகவியல் வல்லுநர்களைவிட இலக்கிய ஆசிரியருக்குச் சமூகத்தைக் கூர்ந்து நோக்கும் திறமை உண்டு என ச.முத்துச்சிதம்பரம் கூறுகிறார்.”[6] இலக்கிய ஆசிரியர்கள் சமூகத்தைத் தனது எழுத்தின் மூலம் கலைப் படைப்பாக்குகின்றனர்.

ஓர் எழுத்தாளன் அவன் காணும் புறக்காட்சிகளுடன் தன் அனுபவத்தையும், கற்பனையையும் கலந்து கலைப் படைப்பாக உருவாக்குகிறான். தான் வாழும் சமுதாயத்தில் இருந்து கொண்டு அந்தச் சமுதாயத்திற்கு அவன் உருவாக்கும் நுண்கலையே இலக்கியம். அவ்வகையில், நீதி இலக்கியங்களில் அக்காலத்து மக்களின் வாழ்வியல் உண்மைகள் புலப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றைத் தொழில், விளையாட்டு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் என்ற நிலைகளில் பாகுபடுத்தி விளக்க இடமுண்டு.

**தொழில்**

சங்க காலச் சமுதாய மக்களின் வாழ்க்கை நிலையைத் தொழில் அடிப்படையில் பாகுபடுத்த இடமுண்டு. அரசர், அந்தணர், வணிகர்,

வேளாளர் என்ற நிலையில் மக்களின் வாழ்க்கைத் தரம் பிரிக்கப்பட்டது. அவர்கள் வாழ்வாதார அடிப்படையில் தொழிலைப் பகுத்தனர் என்பது ஈண்டு நோக்கத்தக்கதாகும்.

**உழவுத் தொழில்**

உழவுத் தொழிலைச் செய்வோர் உழவர். இவர்கள் இவ்வுலகத்தைத் தாங்கும் அச்சாணியாகத் திகழ்கின்றனர் என்பதில் ஐயமில்லை. இவ்வுலகில் வாழும் எவரும் உழவருக்கு அடுத்த நிலையில் வைத்தே எண்ணப்படுவர். அதனை,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"[7]

என்ற வள்ளுவரின் வாய்மொழி மெய்ப்படுத்தும். தமிழக மக்கள் வேளாண் தொழிலையே பெரிதும் நம்பியுள்ளனர்.

ஐந்திணை ஐம்பதிலுள்ள குறிஞ்சித்திணைப் பாடல் ஒன்று குறவர்கள் உழவுத் தொழில் செய்ததைக் கூறுகிறது. குறவர்கள் மரஞ், செடி கொடிகளை வெட்டி ஒழுங்குபடுத்தி உழவுத் தொழில் செய்து பயிரிட்ட செய்தியினை மாறன் பொறையனார்,

"எறிந்தெமர் தாமுழுத ஈர்ங்குரல் ஏலனல்
மறந்துங் கிளியினமும் வாரா – கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவல் நெஞ்சத்துக் கொண்டு"[8]

என விளக்குவர்.

**தினைப்புனம் காத்தல்**

குறிஞ்சிநில மக்கள் குறவர்கள் என அழைக்கப்படுவர். இவர்களது தொழில் கிழங்கு கிள்ளுதல், தேனெடுத்தல், மலை நெல் விளைவித்தல்

போன்றவை. மலைநாட்டு மகளிர் தினைப்புனம் காவல் காக்கும் தொழிலிலும் ஈடுபடுபவர்கள். சங்க இலக்கியங்களில் குறிஞ்சித்திணையில் தினைப்புனம் காத்த செய்தியானது இடம்பெற்றுள்ளது. சான்றாகப் பத்துப்பாட்டில் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டில் தோழி,

"நெற்கொள் நெடுவெதிர்கு அணந்த யானை
முத்துஆர் மருப்பின் இறங்கு கை கடுப்ப
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்
நல்கோட் சிறுதினைப் படுபுள் ஒப்பி
எல்பட வருதியர் என நீ வீடுத்தலின்
கலிகெழு மரமிசைச் சேணோன் இழைத்த
புலி அஞ்சு இதணம் ஏறி அவனை
சாரல் சூரல் தகைபெற வலந்த
தழலும் தட்டையும் குளிரும் பிறவும்
கிளிகடி மரபின் ஊழ் ஊழ் வாங்கி
உரவுக் கதிர் தெறுஉம் உருப்பு அவிர் அமையத்து"[9]

என்று செவிலியிடம் அறத்தொடு நிற்கும் பொழுது நாங்கள் தினைப்புனம் காக்கச் சென்றோம் என்கிறாள் தலைவி. மாறன் பொறையனார் இயற்றிய பாடலொன்றில் தினைப்புனம் காத்த செய்தி வெளிப்படுகின்றது. முதிர்ந்த தினைக்கதிரைக் காவல் செய்வதற்காகத் தலைவியும் தோழியும் சென்ற செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது. அதனை மாறன் பொறையனார்,

"மால்வரை வெற்ப வணங்கு குரலேனல்
காவலியற்கை ஒழிந்தேம்யாம் – தூஅருவி
பூங்கண் கழுகும் புறவிற்றாய் பொன்விளையும்
பாக்கம் இதுவெம் மிடம்"[10]

என்ற பாடல் உணர்த்தும். தினைப்புனத்தைக் காத்து இருந்த பொழுது விலங்கொன்றினைத் தேடிவருவார் போன்று தலைவர் வந்தார்.

வந்தவர் நம்மைத் தேடிவந்து மற்றொன்றைக் கேட்டார் என்கிறாள் தோழி. இதனால் தினைப்புனம் காத்த செய்தி பெறப்படுகிறது. தினைப்புனம் காத்தல் பெண்களின் தொழிலாக நீதி இலக்கிய காலக் கட்டத்தில் இருந்துள்ளது என்பதை இதனால் அறிய முடிகிறது.

**வேட்டையாடல்**

குறிஞ்சிநில மக்கள் வேட்டையாடல் தொழிலில் ஈடுபாடுடையவர்கள் என்பதனை,

“புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரல்
தினைகாத் திருந்தேம்பா மாக – வினை வாய்த்து
மாவினவு வார்போல் வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினை லுற்றதொன் றுண்டு”[11]

என்ற மாறன் பொறையனாரின் ஐந்திணை ஐம்பதுப் பாடல் வெளிப்படுத்தும். வேட்டையாடுதலை மேற்கொண்டு தாம் தப்பவிட்ட விலங்கு ஈங்கு வருதலைச் செய்த தலைவர் நம்மிடத்தில் கேட்க வந்தது விலங்கன்று. பிறிதொன்று உளதாயிருக்கின்றது என்று கூறுகின்றாள் தோழி. இச்செய்தியிலிருந்து குறிஞ்சிநில மக்கள் வேட்டையாடும் தொழிலில் ஈடுபட்டனர் என்பது புலனாகிறது.

**ஊசி விற்றல்**

ஊசி விற்கும் தொழில் இன்றும் குறவர்களிடம் காணப்படுகிறது. குறிஞ்சிநில மக்களே ஊசிவிற்கும் தொழிலை மேற்கொள்பவர்கள். மாறன் பொறையனார் மருதநில மக்களிடமும் அப்பழக்கம் இருந்தது என்பதனை,

“கொண்டுழிப் பண்டம் விலையெரீஇக் கொல்சேரி
நுண்டுளைத் துண்னூசி விற்பாரின் – ஒன்றானும்
வேறல்லை பாண வியலூரான் வாய்மொழியைத்
தேற எமக்குரைப்பாய் நீ”[12]

என்ற பாடலில் விளக்குவர். இது பாணனுக்குத் தலைவி வாயில் மறுப்பதாக அமைந்துள்ளது. தலைவி பொருளைக் கொண்ட விலையைக் காட்டிலும், வேறுபடுத்திச் சொல்லிக் கொல்லர்கள் தெருவில் ஊசிவிற்கும் மடவோரைக் காட்டிலும் ஒருவகையானும் நீ வேறுபட்டவன் அல்லன் என்று பாணனை இகழ்ந்து கூறுகின்ற செய்தியில் ஊசி விற்றல் தொழிலைச் சுட்டிக் காட்டுகிறார்.

**மீன் உணங்கலைக்காத்தல்**

நிழலில் மீன்களை உளர வைக்கும் தலைவியின் கண்கள், வேட்டுவர்களால் சூழப்பட்ட மானைப்போன்று இருந்தன என்பதனைக் கணிமேதாவியார்,

“கடும்புலால் புன்னை கடியும் துறைவ
படும்புலாற் புள்கடிவான் புக்க – தடம்புலாம்
தாழைமா ஞாழல் ததைந்துயர்ந்த தாம்பொழில்
ஏழைமான் நோக்கி இடம்”[13]

என உணர்த்துவர். நெய்தல் நிலப் பெண்கள் மீன்களை உலர வைத்துள்ளதையும், அதற்குக் காவலாக இருந்துள்ளதையும் இக்கருத்துப் புலப்படுத்தும்.

நெய்தல் நில மகளிர் மீன் உணங்கலைக் கவர வரும் புட்களை ஒப்புதல் செய்தனர் என்பதனை மாறன் பொறையனார்,

“பெருங்கடல் உள்கலந்த நுணவலை வீசி
ஒருங்குடன் தன்னைமார் தந்த கொழுமீன்
உணங்கல்புள் ளோப்பு ஒளியிழை மாதர்
அணங்காகும் ஆற்ற வெமக்கு”[14]

எனக் கூறுவர். கடலிலிருந்து கொணர்ந்த மீன்களை வற்றலாக்கி அதனைக் காவல் செய்யும் பணியினை நெய்தல் நிலப் பெண்கள் மேற்கொண்டிருந்ததை

இப்பாடற் கருத்து புலப்படுத்தும். மீன் வற்றலைப் புள் கவராமல் காத்திருந்த என் தலைவி என்னை வருத்தும் தெய்வமாவாள் எனத் தலைவன் மொழிகிறான். அதனால் நெய்தல் நிலப் பெண்கள் மீன் வற்றலைப் புள் கவராமல் காத்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தமையை உணரமுடிகிறது.

**விளையாட்டு**

ஆண், பெண் உடல்வாகு நிலையில் அவர்கள் மேற்கொள்ளும் விளையாட்டினைப் பாகுபடுத்த இடமுண்டு. அக்காலச் சமுதாயத்தில் ஆண்கள் வன்மையான விளையாட்டையும், பெண்கள் மென்மையான விளையாட்டையும் விளையாடினர்.

**வண்டல் விளையாட்டு**

வண்டல் என்பது மகளிர் கடற்கரை மணலில் வீடுகட்டி விளையாடும் ஒருவகை விளையாட்டாகும். அதனை மாறன் பொறையனார்,

“கொங்கன் பிரிந்த குளிர்பூம் பொழிநோக்கி
உண்கண் சிவப்ப வழுதே னொளிமுகம்
கண்டன்னை எவ்வம்யா தென்னக் கடல் வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்”[15]

என விளக்குவர். இச்செறிப்புக் காரணமாக உன்னைச் சேராது பிரிந்து சென்ற குளிந்த பூம்பொழிலை நோக்கி மை தீட்டப்பட்ட கண்கள் சிவக்கும்படி அழுதேன். இந்நிகழ்வைப் பார்த்த செவிலி, உனக்கு வந்த துன்பம் யாது? என்று வினவினாள். கடல் அலை கரை மீது மோதி என் விளையாட்டுச் சிறிய இல்லத்தை அழித்தது. ஆகையால், யான் வருந்துகிறேன் எனத் தோழி தலைவிக்கு உரைக்கிறாள். இவ்விளையாட்டு பக்தி இலக்கிய காலக்கட்டங்களிலும் தொடர்ந்துள்ளதை ஆண்டாள் பாடல்கள் மெய்ப்படுத்தும்.

வண்டல் விளையாடும் மகளிர்அவ்விளையாட்டில் கடலலை தந்த முத்துக்களைப் பயன்படுத்தியுள்ளனர். அதனை மாறன் பொறையனார்,

"ஓதந் தொகுத்த ஒலிகடல் தண்முத்தம்
பேதை மடவார்தம்வண்டல் விளக்கயரும்
காலைஞ் சேர்ப்ப தகுவதோ என்தோழி
தோணலந் தோற்பித்த நீ"[16]

எனக் கூறுவர்.

**மகளிரின் விளையாட்டுப் பொருட்கள்**

மகளிர் விளையாடுவதற்குப் பொம்மை, பந்து, பவளம் போன்ற வாயினையுடைய பைங்கிளி ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். அதனை மாறன் பொறையனார்,

"பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியும்
ஆயமு மொன்று மிவைநினையாள் – பால் போலும்
ஆய்ந்த மொழியினாள் செல்லுங்கொல் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு"[17]

எனச் சுட்டுவர். தலைவி அவள் விளையாடிய பொம்மை, பந்து, பவளவாய்கிளி ஆகியவற்றை மறந்தவளாய்த் தலைவனைத் தொடர்ந்து வெப்பமிகுக் காட்டுவழியில் சென்றாளென நற்றாய் இரங்குகிறாள். இதில் தலைவி விளையாட்டுக்குப் பயன்படுத்திய பாவை, பந்து, பவளவாய் பைங்கிளி ஆகியன குறிப்பிடப்படுகின்றன.

தன் மகன் கைகளை வீசியும், விரித்தும் விளையாடுவதை யான் கண்ணுற்றேன்; அவனுக்கு பாதுகாவலாக இருந்தேன் என்பதைத் தலைவி பாணனிடம்,

"பொய்கைநல் லூரன் திறம்கிளைத்தல் என்னுடைய
எவ்வ மெனினும் எழுந்தீக – வைகல்
மறுவில் பொலந்தொடிவீசும் அலற்றுஞ்
சிறுவ னுடையேன் துனை"[18]

என உரைக்கிறாள். சிறுவர்கள் கைவீசி விளையாடுவதனை ஈண்டு மாறன் பொறையனார் குறிப்பிட்டுள்ளார்.

### பொழுது போக்கு

மகளிர் அருவியாடி மகிழ்தலை வழக்கமாகக் கொண்டிருந்ததை மாறன் பொறையனார்,

"கானக நாடன் கலவானென்றோள் என்று
மானமர் கண்ணாய் மயங்கல் நீ – நானம்
கலந்திழியு நன்மலைமேல் வாலருவி ஆடப்
புலம்பு மகன்றுநில் லா"[19]

என விளக்குவர். பெண்களிடம் அருவியாடல் வழக்கமாக இருந்ததை இப்பாடல் மெய்ப்படுத்தும். பிறிதொரு பாடலில் (15) கண் சிவந்ததற்குரிய காரணத்தைத் தோழி தாயிடம் மொழிகிறாள். அருவியில் குதித்து விளையாடுதலால், கண் சிவந்தது என்கிறாள். இக்கருத்தும் முற்சொன்ன கருத்தைப் புலப்படுத்தும்.

### வேங்கை மலர் கொய்தல்

சங்ககால மகளிரிடம் வேங்கைமலர் கொய்யும் பழக்கம் இருந்தன என்பதற்குச் சங்க இலககியத்தில் சான்றுகள் உள. பத்துப்பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டில் கபிலர் தொண்ணூற்றொன்பது வகையான மலர்களைத் தோழியும், தலைவியும் பறித்த செய்தியைக் கூறுகிறார். அம்மலரில் வேங்கைப்பூவும் ஒன்றாகும். அதனைக் கபிலர்,

*“மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்*
*அரக்கு விரித்தன்ன பருஏர்அம் புகழுடன்*
*மாலங்குடைய மலிவனம் மறுகி”*[20]

*என்பர். வேங்கைமலர் கொய்யும் பழக்கம் சங்க காலத்திலிருந்ததை இப்பாடற்கருத்துப் புலப்படுத்தும்.*

*சங்கமருவிய காலத்துப் பெண்கள் வேங்கை மலர் கொய்த செய்தியினை மாறன் பொறையனார்,*

*“வேங்கை நறுமலர் வெற்பிடை யாம் கொய்து*
*மாந்தளிர் மேனி வியப்பமற்று – ஆங்கெனைத்தும்*
*பாய்ந்தருவி யாடினேமாகப் பணி மொழிக்குச்*
*சேர்ந்தனவாம் சேயரிக்கண் தாம்”*[21]

*எனக் கூறுவர். நாங்கள் மலையிடத்துள்ள வேங்கை மரத்தில் மலர்ந்துள்ள நறுமணம் மிக்க பூக்களைக் கொய்தலால் மாந்தளிர் போன்ற என் உடல் வியர்த்தது; அம்மலையில் உள்ள எல்லா அருவிகளிலும் புகுந்து நீராடினோம். ஆதனால் மென்மையான சொல்லையுடைய தலைவியின் கண்கள் சிவந்தன எனத் தோழி செவிலியிடம் செப்புகிறாள். மலைகளில் உள்ள அருவிகளில் பெண்கள் அச்சமின்றி அருவியாடி மகிழ்ந்ததை இக்கருத்துப் புலப்படுத்தும்.*

**பழக்க வழக்கம்**

*பழக்க வழக்கங்களைத் தனி மனிதனும், சமுதாயம் என்ற அமைப்பும்இணைந்து உருவாக்குகின்றன. மக்களின் தேவைகளின் அடிப்படையிலேயே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையல் வழக்கங்களாக உருப்பெறுகின்றன. இக்கூற்றிற்குச் சான்றாக “தனி மனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி,*

உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம் எனவும் சமூகவியலார் கூறுவது"[22] ஏற்புடைத்தாகத் தோன்றுகின்றது. மேலும் இக்கருத்திற்கு வலிமையூட்டும் வகையில் "தனி மனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப்போற்றப்படுகிறது"[23] என்ற கூற்று அமையக் காண்கிறோம். மேற்கூறிய தன்மைகளைக் கருத்தில் கொண்டு சிந்திக்கும் பொழுது பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்க நிலை எனவும் வழக்கம் சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கூறலாம்.

**மகளிர் மோவாய் கையூன்றி நிற்றல்**

சங்க மருவியகால மகளிரிடம் மோவாய் மீது தனது இடது கையைச் சேர்த்து வைத்து நிற்கும் பழக்கம் இருந்தமையை மாறன் பொறையனார்,

"நூனவின்ற பாகதேர் நொவ்விதாச் சென்றீஇ
தேனவின்ற கானத்து எழினோக்கி – தானவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பாள் நிலையுணர்கம் யாம்"[24]

எனக் கூறுவர். மோவாய் மீது தனது இடக்கையினைச் சேர்த்து வைத்து என் வரவினை எதிர்நோக்கியிருக்கும் தலைவியினது நிலைமையை நாம் சென்று உணர்வதற்காகத் தேரினை விரைவிற் செலுத்துவாயாக எனத் தலைவன் தேர்ப்பாகனிடம் கூறுகிறான். மகளிர் மோவாய் மீதுக் கையூன்றி நிற்கும் பழக்கம் இருந்தமையை இக்கருத்துப் புலப்படுத்தும்.

**அணிகலன்கள்**

பண்டைத் தமிழகத்தில், விரும்பிய அளவு அணிகலன்கள் செய்வதற்கேற்ப பொன், வெள்ளி, முத்து, மணி ஆகிய பொருட்கள் கிடைத்துள்ளன. அவற்றின் துணையால் அணிகலன்கள் செய்யும்

பொற்கொல்லர்கள் வாழ்ந்துள்ளனர். விரும்பி அணியும் மக்களும் இருந்துள்ளனர்.

"பலவுறு கண்ணுள் சிலகோல் அவிர்தொடி"[25]

எனும் பகுதி அக்காலத்து அணிகல வினைத் திறத்தைக் காட்டும். சங்ககால மகளிர் இயற்கை அணிகளையும், செயற்கை அணிகளையும் அணிந்துள்ளனர். தழை, மலர் போன்றவற்றை அணிகலன்களாக அணிந்தனர். சூரர மகளிர் காதுகளில் அசோகின் தளிர்களைச் செருகிக் கொண்டதனை,

"வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூன் ஆகந் திளைப்ப"[26]

எனத் திருமுருகாற்றுப்படை கூறும். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பதினெண்கீழ்க்கணக்கு அக நூலில் மகளிர் காதில் மின்னுகிற அணிகலன்களை அணிந்திருந்ததை மாறன் பொறையனார்,

"பெருங்கடல் உள்கலங்க நுண்வலை வீசி
ஒருங்குடன் தன்னைமார் தந்த கொழுமீன்
உணங்கல்புள் ளோப்பு ஒளியிழை மாதர்
அணங்காகும் ஆற்ற வெமக்கு"[27]

எனக் கூறுவர்.

**மருத்துவம்**

அக்காலச் சமுதாய மக்கள் புண்ணிற்குக் கார மருந்து இடும் பழக்கத்தைக் கைகொண்டிருந்ததை மாறன் பொறையனார்,

"கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி ஈர்வாளை
நீலத்துப் புக்கொளிக்கும் ஊரற்கு – மேலெலாஞ்
சார்தற்குச் சந்தனச்சாந் தாயினேம் இப்பருவங்
காரத்தின் வெய்யவென் றோள்"[28]

என விளக்குவர். முன்பெல்லாம் புணர்வதற்கு ஏற்ற வகையில் சந்தனக்குழம்பு போன்றிருந்த என் தோள்கள், தற்போது என் தலைவனின் புண்ணிற்கிடும் காரத்தைவிடக் கொடியவாயின எனப் பாணனிடம் தலைவி உரைக்கிறாள். புண்ணிற்குக் காரமிடும் வழக்கம் அக்கால மக்களிடத்து இருந்துள்ளதை இக்கருத்துப் புலப்படுத்தும்.

**ஐம்படைத்தாலி**

ஐம்படைத்தாலி பற்றிய நேரடியான குறிப்பினை மணிமேகலையில் தான் காணமுடிகின்றது. அது சிறுவரின் கழுத்திலணிந்திருந்தமையினையே சுட்டிச் செல்கின்றது. “ஐம்படைத்தாலி இளமைப் பருவத்தில் ஆண் குழந்தைகளின் கழுத்திலணியும் ஒரு வகை அணி”[29] “காவலாகக் குழந்தைகளின் கழுத்திற் பூட்டுவதோர் ஆபரண விசேடம் எனவும் காத்தற் கடவுளாகிய திருமாலுடைய ஐந்து ஆயுதங்கள் போலப் பொன்னாற் செய்யப்படுதலின் இது இப்பெயராயிற்று”[30] எனவும் உ.வே.சா. குறித்துள்ளதை க.காந்தி எடுத்தாண்டுள்ளார். சங்கு, சக்கரம், கதை, கட்கம், சார்ங்கம் என்னும் ஆயுதங்களின் வடிவமாக அமைப்பது. இது “தாலியெனவும், தாலியைம்படை எனவும் வழங்கும்”[31] என்பர் க.காந்தி.

குழந்தைகள் பூணும் நகையைப் பண்டைக் காலத்தில் தாலி என்று கூறினர். பிற்காலத்தில் தாலி என்பது கணவனால் மனைவியின் கழுத்தில் கட்டப்படும் அணிகலன்களாகத் திகழ்கிறது. இவ்ஐம்படைத்தாலியைக் கணிமேதாவியார்,

“வல்வருங் காணாய் வயங்கி முருக்கெல்லாம்
செல்வர் சிறார்க்குப் பொற்கொல்லர்போல் – நல்ல
பவளக் கொழுந்தின்மேற் பொன்தாலிபாஅய்த்
திகழக்கான்று இட்டன தேர்ந்து”[32]

என்ற பாடலில் குறித்துள்ளார். செல்வந்தரின் குழந்தைகளுக்குப் பொற்கொல்லர்களால் செய்த ஐம்படைத்தாலியைப் போல முருக்கமரங்கள் பூத்தன. அது கார்காலமன்று; வேனிற்காலம். ஆகவே, தலைவன் பொன்னால் செய்த கழுத்தாணியை உனக்குத் தருவான் எனத் தலைவியைத் தோழி தேற்றுகிறாள். செல்வந்தர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பொன்னாலாகிய தாலியை அணிவிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள் என்பதை இதனால் உணரமுடியும்.

**கார்த்திகைத் திருநாள்**

நன்மையினை வேண்டி ஆற்றப்படும் விழாக்களில் நன்மையினை எதிர்நோக்கும் உள்ளம், செயல்களை நல்ல நாளிலும் நல்ல நேரத்திலும் ஆற்றத் தொடங்கி நன்மையினை விழைகிறது. மனிதனது வாழ்க்கையினை விண் கோள்களின் நிலைமைகள் கட்டுப்படுத்துகின்றன என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் மக்கள் நல்ல நாளும் நல்ல கோள்களின் சேர்க்கை கூடிவரும் நேரத்தில் விழாக்களைத் தொடங்குகின்றனர். பழந்தமிழர்களிடமும் இவ்வழக்கம் இருந்துள்ளது. இந்த விழாக்களைப் பெரும்பாலும் வளர்பிறை மற்றும் மதிநிறைந்த நாட்களில் தொடங்கியுள்ளனர். கார்த்திகைத் தீப விழாவை முழுமதி நாளில் தொடங்கியதனை,

"மழைகால் நீங்கியமாக விசும்பிற்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன்சேரு மகலிருள் நடுநாள்
மறுகுவிளக குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுட னயர"[33]

என அகநானூற்றுப்பாடல் குறித்துள்ளது. "தீவக சாந்தியாகிய இந்திரவிழா முழுமதி நாளில்"[34] தொடங்கியதனை இரட்டைக் காப்பியங்கள் சுட்டும். "மார்கழி நோன்பாகிய தைந்நீராடல் வளர்பிறையில் தொடங்கியதனைப்

பரிபாடல் சுட்டுகிறது”[35] இன்றைய மக்களிடையேயும் வளர்பிறை மற்றும் நிறைமதி நாட்களிலேயே விழாக்களைத் தொடங்கும் வழக்கம் உள்ளது. நன்மை, வளர்ச்சி வேண்டி ஆற்றப்படும் முக்கியமான நிகழ்ச்சிகள் அனைத்தும் வளர்பிறையில் நிகழ்த்துவதனையே இன்றைய தமிழர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

கார்த்திகை நாளிலே வரிசையாக விளக்கு வைத்து விழாக் கொண்டாடும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் இருந்தமையை மதுரைக் கண்ணங்கூத்தனார்,

“நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கின் தகையுடை ஆகிப்
புலமெலாம் பூத்தன தோன்றி சிலமொழி
தூதொடு வந்த மழை”[36]

எனும் பாடலடிகளால் விளக்குவர். நன்மை மிகுந்த கார்த்திகை நாளில் ஏற்றி வைத்த முதல் நாள் விளக்கினைப் போல பூக்கள் எல்லா இடங்களிலும் அழகுடன் பூத்திருந்தன என்பதே இப்பாடலின் கருத்தாகும். கார்த்திகைத் திருநாளில் விளக்கிடும் வழக்கத்தைப் பெண்கள் கைகொண்டிருந்ததை இக்கருத்து புலப்படுத்துகிறது.

**பழக்க வழக்கங்களில் மரபு**

பழக்கம், வழக்கம், மரபு என்ற சொற்கள் ஒன்றோடொன்று உறவுடையன. ஒன்றன் வளர்ச்சி நிலையே மற்றொன்றின் தொடர்ச்சியாக அமைகிறது. பழக்க, வழக்க, மரபுகள் எளிதில் மாற்ற முடியாதவை. அவை கால, இட, சூழ்நிலை அமைவுகளுக்குத் தக உருப்பெருவன. அவ்வாறு உருப்பெறும் மரபுகளே சமுதாய நியதிகளாகக் கருதப்படுகின்றன. பழக்கம் என்பது தனி மனிதனைச் சார்ந்ததென்றும், மரபு என்பது சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாட்டைச் சார்ந்தது எனவும் கூற இடமுண்டு.

பழக்கம் என்பது தொடக்க நிலையாகவும், வழக்கம் தொடர்நிலையாகவும் மரபு பண்பாட்டின் முதிர்நிலை எனவும் வகைப்படுத்தலாம். தனி மனிதப் பழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்து வாழ்வு பெறும் நிலையில் மரபுகளாக வாழ்வு பெறுகின்றன.

உழவர்கள் மாடுகளின் கழுத்தில் மணி கட்டுவது போலச் சங்க மருவிய கால மக்கள் குதிரைகளின் கழுத்தில் மணிகளைக் கட்டித் தேரிற் பூட்டி ஓட்டுவர் என்பதை மாறன் பொறையனார்,

"அணிகடல் தண்சேர்ப்பன் தேர்ப்பரிமாப் பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன் கனிவிரும்பும்
புள்ளரவம் கேட்டுப் பெயர்ந்தேன் ஒளியிழாய்
உள்ளுருகு நெஞ்சினே னாய்"[37]

என உணர்த்துவர். நெய்தல் நிலத்தலைவன் ஏறிவரும் தேரினைக் குதிரைகள் இழுத்து ஓடிவரும். அவை கழுத்தில் மணிகள் கட்டப்பட்டு ஒலித்து நிற்கும். அவ்வோசை கேட்டதென்றெண்ணி இல்லினுள் இருந்து வெளியே ஓடிவந்தேன். ஆனால், அங்கு பறவைகளின் ஒலியே இருந்தது. குதிரையின் கழுத்தில் கட்டப்பட்ட மணிஓசை இல்லை எனத் தலைவி தோழியிடம் மொழிகிறாள். இதில் தலைவியின் வருத்தம் மேலிடுகின்றது. குதிரைகளுக்கு மணி கட்டும் வழக்கம் அக்காலத்திலேயே இருந்ததை இது புலப்படுத்துகிறது.

**பண்பாடு விளக்கம்**

பண்பாடு என்பது தனிமனித நடைமுறையில் தோன்றுவது ஆகும். ஒரு மனிதனின் செயலை முன் உதாரணமாகக் கொண்டு மற்ற ஏனைய மனிதர்களும் குழுவாகச் செயல்படும் போது அது பண்பாடாக மாறுகிறது.

உலக அமைப்பை முதல், கரு, உரி என மூன்றாக வகுத்து, அதில் வாழும் மக்களின் வாழ்க்கையை அகம், புறம் எனப் பாகுபடுத்தி அதை இயற்கையுடன் கற்பித்தது பண்டைத் தமிழரின் சிறந்ததொரு பண்பாடாகும். பழந்தமிழக மக்கள் இல்லற வாழ்க்கையைப் பெரிதும் பாராட்டி வந்தனர். திருவள்ளுவரும் அறம், பொருள், இன்பம் எனும் முப்பாலைப் பாடினாரே தவிர வீட்டினைப் பாடவில்லை.

'இல்லறமல்லது நல்லற மன்று' என்பது கொன்றை வேந்தனின் மொழியாகும். சங்க இலக்கியங்களுள் பெரும்பாலானவை அகப் பொருள்களையே பேசுகின்றன. களவு அதிகம் நீடித்தல் என்பது மரபு.

திருமண வாழ்வினை 'கற்பு' என்பர். நிலா உரோகிணியுடன் கூடிய நல்ல நாளில் திருமணம் நிறைவேற்றப்பட்டது. மணமகன் தாலி கட்டியதாகச் சான்று இல்லை. தாலி கட்டும் முறை கி.பி.10க்கு பின்னரே தோன்றியுள்ளது. பெண்கள் மங்கல அணி ஒன்றை அணிந்துள்ளனர். புரோகிதன் ஒருவன் இடையிலிருந்து மணவினை புரிந்துள்ளான். பெண்ணின் கற்பைப் போற்றி வாழ்ந்தனர். அதனை,

"தெய்வம் தொழாஅர் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"[38]

என்ற பகுதி விளக்கும். கற்பு ஒழுக்கம் ஆண்களுக்குரியதாகவே கருதப்பட்டு வந்துள்ளது. அருவருக்கத்தக்க தீய ஒழுக்கம் மருதத்திணை மக்களின் பால் மட்டும் தான் உள்ளது.

கணவன் கல்வி, பொருள் காரணமாகப் பிரியின் மூன்று ஆண்டுகளுக்கு மிகுதல் கூடாது என்பது மரபு. ஆண்கள் மடலேறும் வழக்கத்தைக் கைக்கொண்டனர். பிற்காலத்தவரான திருமங்கையாழ்வார் தலைவர் 'காதல் கைமிக்கு மடலூரத் துணிந்தான்' எனக் காட்டுகிறார். தொழில் புரிவதை ஆடவர் தம் உயிராக மதித்தனர்.

கணவனை இழந்த மகளிரிடம் உடன்கட்டை ஏறும் வழக்கம் காணப்பட்டது. கைம்மை நோன்பு பிராமணப் பெண்களிடமே காணப்பட்டது. இல்லற வாழ்வில் விருந்தோம்பல் பண்டைய தமிழரின் தனிப்பட்ட பண்பாடாக இருந்தது.

**பண்பாடு அறம்**

பொய் சொல்வது தவறு: பொய் சொல்வதை நல்லவர்கள் வெறுப்பார்கள். பொய்யர்களை மக்கள் மதிப்பதில்லை. அவர்களோடு முகம் கொடுத்துப் பேசவும் முன்வர மாட்டார்கள். இன்றும் பொய் புகழ்வோரைப் பொதுமக்கள் இகழ்ந்துரைப்பதைப் பார்க்கின்றோம். இது பண்டைத் தமிழர் பண்பாடாகும்.

காதலன் பரத்தையர் வீட்டுக்குப் போய்விட்டான். சில நாட்கள் கழித்து வீட்டிற்குத் திரும்ப நினைத்தான். திடீரென்று திரும்பி வந்து வீட்டுக்குள் புகுந்தால் காதலியின் வரவேற்பைப் பெறமுடியாது என்பது அவனுக்குத் தெரியும். ஆதலால், அவன் பாணனை அனுப்பி காதலிக்குச் சமாதானம் கூறும்படி செய்தான். தலைவனால் தூதாக அனுப்பப்பட்டு வந்த பாணன் தலைவியை அடைந்து பொய்யுரை கூறினான். தலைவன் இனி தவறு செய்யமாட்டான்; தன் தவறுக்காக வருந்துகிறான். வேசையர் வாழும் திக்கைத் திரும்பிப் பார்ப்பதே இல்லையென உறுதி கூறுகிறான். பாணன் கூறும் இம்மொழியினைத் தலைவி பொய்யுரை என எண்ணினாள். உடனே அவள் பாணனை நோக்கி,

“கயநீர்ப் பாய்ந் தோடும் காஞ்சிநல் ஊரன்
நயமே பலசொல்லி நாணினன் போன்றான்
பயமில் யாழ்ப்பாண பழுதாய கூறாது
எழுநீபோ நீடாது மற்று”[39]

என மொழிகின்றாள். யாழினை மீட்டுவதில் வல்லவனான பாணனே! பொய்மொழி பேசுதலை நிறுத்தி நீ இங்கிருந்து போவாயாக எனத் தலைவி மொழிகிறாள். தலைவியின் வெறுப்புணர்வு இங்கு வெளிப்படுகிறது. பொய் பேசுதல் அறமன்று. அவ்வறத்திற்கு மாறாக நடப்பவர்களை ஈண்டு பண்பாடற்றவர்களாகக் கருதுகிறாள் தலைவி.

**நம்பிக்கைகள்**

மனித மனத்தின் விழைவால் நம்பிக்கை தோன்றுகிறது. இயற்கையால் படைக்கப்பட்டுள்ள பொருட்களுக்கும், மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் அவை தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும், செயல்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புக்களோடு இயைந்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் பெற்றன. அத்துடன் நன்மை விளைய வேண்டுமென்ற மனிதனின் விருப்பமாகவும் இணைந்து கொண்ட நிலையில் நம்பிக்கையின் எல்லை விரிந்தது.

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுவன. அவை வழக்கில் மிகுதியாயும், இலக்கியங்களில் குறைந்தும் காணப்படும். எனவே, இலக்கியங்கள் சுட்டும் நம்பிக்கைகள் அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் அனைத்தையும் கூறும் என்று சொல்ல இயலாது. இலக்கியங்களில் இடம்பெறும் நம்பிக்கைகள் பெரும்பாலும் அன்றைய மக்களிடையே சமுதாயச் செல்வாக்குப் பெற்ற குறிப்பிடத்தக்க நம்பிக்கைகளாக அமையும். ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத்திறனை அளவிட இயலும். சிந்தனைத் திறன் மிக்க சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும் சிந்தனைத்திறன் குறைந்த சமுதாயத்தில் மூட நம்பிக்கைகள் மிகுதியாகவும் காணப்படும். இதனை நமது நகர், கிராமப்புற மக்களின் வாழ்வியலில் கண்டு உணரலாம்.

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் சில நிகழ்வுகளை நல் நிமித்தமாகவும், சில நிகழ்வுகளைத் தீ நிமித்தமாகவும் கருதினர். மணநாளை அறிவிக்கும் நன் நிமித்தமாக வேங்கைமரம் பூத்தலைக் கருதும் நம்பிக்கைப் பெண்களிடம் இருந்ததை 'வேங்கை விரிவு இடம் நோக்கி' என்ற அடி விளக்கும்.

**பல்லி ஒலியெழுப்பல்**

பல்லி ஒலித்தலைச் சகுனமாகக் கருதுவதனைச் சங்க காலந்தொட்டு இன்றுவரை தமிழ் மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளதனை இலக்கியங்கள், வாழ்வியல் சான்றுகள் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியத்தின்கண் பல்லியின் சொல்லை நன்னிமித்தமாகக் கொண்டதற்கான சான்றுகள் மிகுதியாக உள.

"மனித உற்பத்தியின் காரண பூதங்களாகிய பிராணிகளில் பல்லியினம் முதன் முதலில் நிலத்தில் வசிக்க வல்லமை பெற்றவனாக இருந்தமையால் பல்லியினத்தைப் படைப்புக் கர்த்தாவாகக் கருதி வணங்குகின்றனர் எனவும், பிராணிகளின் படைப்பில் பல்லியினத்திற்கே முதன்முதலில் வாயினால் சப்தம் செய்யும் சக்தி உண்டான காரணத்தால் பல்லி சொல்லுக்குப் பலனை ஏற்படுத்தினார்கள்"[40] என எடுத்துரைப்பர்.

பல்லியின் ஒலி, ஒலிக்கும் திசைக்கேற்ப நன்மையையோ, தீமையையோ விளைவிக்குமெனப் பெண்கள் கருதினர். இது நம்பிக்கையின் பாற்படும். பல்லி ஒலித்தலை நல் நிமித்தமாகவே பெண்கள் கருதினர். பிரிந்து சென்ற தலைவன் விரைவில் திரும்பி வருவார் என்பதைப் பல்லியின்சொல் கேட்டுத் தோழி கூறுவதனை,

"இணைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுவார் அல்லர் மனைவியின்

பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல்எழில் உண்கனும் ஆடுமால் இடனே”[41]

என்ற பாடல் புலப்படுத்தும். இக்கருத்தமைவுடைய நம்பிக்கைச் செய்திகள் பதினெண்கீழ்க்கணக்கு நூல் ஒன்று உணர்த்துகிறது. அதனைப் புல்லங்காடனார்,

“ஆமா சிலைக்கும் அணிவரை ஆரிடை
ஏமான் சிலையார்க்கு இனமா இரிந்து ஓடும்
தாமாண்பில் வெஞ்சுரம் சென்றார் வரக்கண்டு
வாய்மாண்ட பல்லி படும்”[42]

எனக்கூறுவர். குறி கூறுவதில் சிறப்புடைய பல்லி ஒலித்ததால் உன் தலைவன் விரைவில் வருகை தருவார். ஆகவே, நீ வருந்த வேண்டாமெனத் தோழித் தலைவியிடம் மொழிகிறாள். பல்லி ஒலி எழுப்புதலைக் கொண்டு நன்மை விளையுமெனச் சங்க மருவிய காலத்து மக்கள் நம்பியதனை இதனால் உணரமுடியும். இக்கருத்தமைவுடைய செய்திகள் மூவாதியார் பாடல்களில் உள. அதனை,

“பூங்கண்ட மாடும் கனவும் திருந்தின
ஓங்கிய குன்ற மிறந்தாரை யாம் நினைப்ப
வீங்கிய மென்றோள் கவினிப் பிணிதீரப்
பாங்கத்துப் பல்லி படும்.”[43]

என்ற பாடல் விளக்கும். தலைவியைத் தலைவன் விடுத்துப் பிரிந்தான். அதனால் தலைவி வருந்தினாள். அது அறிந்த தோழி தலைவியிடம் ‘பூங்கண்டமாடும்; பிணிதீரப் பாங்கத்துப் பல்லி படும்’ என மொழிந்து அவள் துயர் தீர்க்கிறாள்.

**வெறியாட்டு**

வெறியாட்டு என்பது களவு வாழ்க்கையில் ஈடுபட்ட தலைவியின் நிலையானது செவிலி தலைவியின் மெலிவு குறித்து அஞ்சித் தெய்வம் அணங்கிற்று என நினைத்து வேலாயுதத்தைக் கையில் கொண்டு ஆடவனாகிய பூசாரியை வரவழைத்து ஆட்டுக்குட்டியைப் பலிகொடுத்து அதன் குருதியை நான்கு புறமும் தெளித்து முருகனுக்குப் பூசை இடுதலை வெறியாட்டு என அழைப்பர்.

தலைவனும், தலைவியும், பெற்றோரும், மற்றோரும் அறியாமல் எதிர்ப்பட்டு அளவரியும் களவொழுக்கம் நிகழும் காலத்தில் தலைவியைக் காணும் காலத்தினும், காணாக்காலம் மிகுதியாகையால் தலைவி சோர்ந்திளைத் திருப்பாள். அவள் நிலைகண்ட செவிலியும், நற்றாயும் அந்நில வழக்கப்படி தலைவியின் மெய் வேறுபாட்டிற்குக் காரணம் கூறும்படி வினவுவர். அவர்கள் தெய்வத்தினாள் ஆயிற்றென்பர். குறிஞ்சி நிலத் தெய்வம் முருகனாகையால் முருகனை வழிபடும் வேலனையே வெறியாட்டு நிகழ்த்தக் கேட்டுக் கொள்வர். அவன் முருகனை வழிபடும் இடத்தில் வெறியாடும் இடத்தை அழகுறப் பண்ண முருகனை வழிபட்டு வெறியாட்டயர்வான்”[44] என்று கூறும் கருத்தால் சமூகத்தில் வெறியாட்டு நிகழ்த்தும் வழக்கமிருந்ததை அறியமுடிகிறது.

“இயற்கைப் புணர்ச்சியின்கண் தலைவன் தலைவியைப் புணர்ந்து பிரிவான். தலைவன் பொழிவிடத்தே ஊழ்க்கூட்டம் கண்டு அவனோடு மெய்யுறு புணர்ச்சியாகிய களவு மனம் நிகழ்த்திய பின்னர் தலைவி தலைவனைக் காணப்பெறாமை முதலிய காரணங்களால் நாள்தோறும் தேய்மதி போன்று நலன் அழிதலும் அந்நிலை கண்ட செவிலி இந்நோய் இவளுக்கு எப்படி வந்தது என வினவ இது தெய்வத்தால் நிகழ்ந்தது எனக்கூறி வேலன் வெறியாட்டு எடுக்க முற்படுவாள்”[45] என்று வெ.விஜயரெங்கன் கூறியுள்ளார். இவ்வெறியாட்டு நிகழ்வு சங்க மருவிய காலத்திலும் நிகழ்த்தப்பட்டிருந்ததை மாறன் பொறையனார்,

“வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்டது
அறியாண்மற் றன்னோ அணங்கினங்கிற்று என்று
மறியீர்த் துதிரந்தூய் வேலன் தரீஇ
வெறியோ டலம்வரும் யாய்”[46]

எனச்சுட்டுவர். உண்மையறியாது அதற்குப் புறம்பாகத் தெய்வ நம்பிக்கை கொண்டு நிகழ்த்துகிற செயலே வெறியாட்டு. இந்நம்பிக்கைக்குள் சங்க மருவிய மக்கள் மூழ்கிருந்ததை இப்பகுதி தெளிவுபடுத்தும்.

**கூடல் இழைத்தல்**

கணவன் மனைவியை விட்டுப் பிரியும் அந்நாளிலும், திரும்பி வந்து சேர்ந்த அந்நாளிலும் கூடிக் களவி இன்பம் துய்ப்பர் என்பது உலக இயற்கை. தலைவரைப் பிரிந்த தலைவியர் தம் கணவர் விரைவில் வந்து சேர்வாரா, மாட்டாரா என்பதை அறிவதற்காக மணலில் அமர்ந்து வட்டமான பெரிய கோடு இழைப்பர். அதன் உள்ளே சிறு சிறு வளையங்களைச் சுழிப்பர். இறுதியில் அதை கோடுகளின் அடிப்படையில் இரண்டு, இரண்டாக எண்ணுவர். அக்கோடு ஒற்றை எண் உடையதானால் விரைவில் வாரார் எனவும், இரட்டையானால் விரைவில் வந்து விடுவார் எனவும் தீர்மானிப்பர். இந்நம்பிக்கைப் பண்டைத் தமிழ்ப் பெண்களிடம் இருந்ததை அறியமுடிகிறது.

பெண்கள் கூடல் இழைத்துப் பார்க்கின்றனர். அவ்வகையில் பார்த்ததில் ஒற்றை எண்ணே வருகிறது. ஆகவே தம் கணவர் விரைவில் திரும்பி வரமாட்டார் என்று நம்புகின்றனர். கூடலிழைக்கப் பெண்கள் குவித்த மணல்மேடு, அவர்களின் கண்ணீரால் கரைந்ததனை,

“மெய்யில் அணைத்து உருகிப பையஅ கன்றவர்தாம்
மீள்வார் எனக்கருதிக் கூடல்லிளைத்து அறவே

*கையில் அனைத்தமணல் கண்பனி சேர்புனலில்*

*கைய விழுந்து அழுவீர்! கடைதிறமின்! திறமினே!"*[77]

*என்ற பாடல் உணர்த்தும். கூடலிழைத்தலில் ஒற்றை எண்ணிக்கையில் கோடு வந்தால் தலைவர் விரைந்து வாரார் எனத் தலைவி நினைந்து அழுதாள் என்பது கருத்து. கூடல் இழைத்தல் செய்தியினை மாறன் பொறையனார்,*

*"பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை*

*வரிப்புற வார்மணன்மேல் ஏறித் தெரிப்புறத்*

*தாழ்கடற் றண்சேர்ப்பன் றாரகல நல்குமேல்*

*ஆழியாற் காணாமோ யாம்"*[48]

*எனச் சுட்டுவர். தலைவன் அவனது மாலைகள் அணிந்த மார்பைத் தனக்குத் தருவது உறுதியாயின், நான் பல்லி முட்டையினைப் போன்ற அரும்புகளை உடைய புன்னை மரத்தின் பூக்கள் வரியாகக் கிடக்கும் பெரிய மணல் குன்றின் மீது அமர்ந்து கூடல் இழைப்பைக் காண்பேன் எனத் தலைவி தனக்குத்தானே கூறிக்கொள்கிறாள். இதனால் கூடலிழைப்பு அக்கால மக்களிடம் நம்பிக்கையின் வெளிப்பாடாக அமைந்ததை அறியமுடியும்.*

**மழை பற்றிய நம்பிக்கை**

தேவருலகம் என்றொன்று இருப்பதாக மக்கள் நம்புகின்றனர். அங்கு வாழ்பவர்களைத் தேவர்கள் என்கின்றனர். அவர்கள் ஆற்றலில் மேம்பட்டவர்கள்; அவர்களை வணங்கினால் நாம் விரும்பியதைப் பெறலாம் என்ற நம்பிக்கையும் மக்களிடத்துண்டு. தேவர்களைப் பல வகையில் மக்கள் வணங்கி வந்தனர். அவ்வகைகளுள் நறுமணப் புகையிட்டு வணங்கும் வழக்கமும் ஒன்று. குறிஞ்சி நிலத்திலே வாழ்ந்த மக்கள் அவ்விடமுள்ள சந்தன மரங்களை வெட்டிக் குவித்து நெருப்பூட்டி, புகை எழுப்பி தேவர்களை வணங்குகின்றனர். அதனைக் கண்ணன் சேந்தனார்,

"புகழ்மிகு சாந்துஎறிந்து புல்லெரி ஊட்டிப்
புகை கொடுக்கப் பெற்ற புலவோர் துகள்பொழியும்
வானுயர் வெற்ப இரவின் வரல் வேண்டா
யானை யுடைய சுரம்."[49]

எனக்கூறுவர். நறுமணப் புகையூட்டி தேவர்களை வணங்கினால் மழை பெய்யும் என்ற நம்பிக்கைச் சங்க மருவிய காலத்து மக்களிடம் இருந்ததை இக்கருத்தால் உணரமுடிகிறது. குறிஞ்சிநில மக்கள் மழைவளம் வேண்டி இவ்வழிபாட்டினை அந்நிலத்தில் செய்ததினை இதனால் தெளியமுடியும்.

**தொகுப்புரை**

சங்க மருவிய காலத்தில் வாழ்ந்த மக்கள் வாழ்வின் மேம்பாட்டிற்காக உழவுத் தொழிலினைச் செய்தனர். வேட்டையாடுதலிலும் ஈடுபட்டனர் என்பது ஆராய்ந்து மொழியப்பட்டுள்ளது.

பெண்கள் ஊசிவிற்றல், தினைப்புனம் காத்தல், மீன் உணங்கலைக் காத்தல் போன்றவற்றில் ஈடுபட்டிருந்தனர் என்பது ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

மகளிர் விளையாடுவதற்குப் பந்து, பொம்மை, பவளம் போன்ற வாயினைக் கொண்ட பைங்கிளி ஆகியவற்றைப் பயன்படுத்தி உள்ளனர். பெண்கள் வண்டல் விளையாட்டில் திறப்பாடுடையவர்களாக விளங்கியுள்ளனர்.

சங்க மருவிய கால நெய்தல் நில மகளிரின் பொழுதுபோக்காக அருவியாடல், வேங்கை மலர் கொய்தல் போன்ற நிகழ்வுகள் இருந்துள்ளன. அக்காலத்து வாழ்ந்த பெண்கள் மோவாய் மீது கையூன்றி நிற்கும் பழக்கத்தையும், அணிகலன்கள் அணியும் பழக்கத்தையும், ஐம்படைத்தாலி அணிவதையும், கார்த்திகை விளக்கு இடுவதையும், புண்ணிற்குக்

காரமருந்து இடுவதையும் பழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பது ஆராய்ந்து மொழியப்பட்டுள்ளது.

பல்லிஒலி எழுப்புவதையும்,வேலன் வெறியாட்டு நிகழ்த்து வதையும், கூடலிழைத்தலையும் அக்கால மக்கள் நம்பிக்கையாகக் கைகொண்டிருந்தமையை அறியமுடிகிறது. ஒருவரின் வரவை உறுதிசெய்து கொள்வதற்காகக் கூடலிழைத்தல் என்றதொரு நெறியைப் பெண்கள் கையாண்டுள்ளனர். ஒற்றை இலக்கத்தில் கோடுவந்தால் குறித்த காலத்தில் வாரார் என்றும், இரட்டை இலக்கத்தில் கோடுகள் சேர்ந்தால் குறித்த காலத்தில் வருவார் என்றும் நம்பிக்கை கொள்ளும் நிலை அக்காலச் சமூகத்தில் நிலவியுள்ளது.

புகையூட்டித் தேவர்களை வணங்கினால் மழை பெய்யும் என்ற நம்பிக்கை அக்காலச் சமூகத்தில் இருந்துள்ளது.

சமூக நிலை குறித்த செய்திகளை அறுவர் தங்களது படைப்புக்களில் வெளிப்படுத்தியுள்ளனர். அவர்கள் மாறன் பொறையனார், கணிமேதாவியார், மதுரைக் கண்ணங்கூத்தனார், புல்லங்காடனார், மூவாதியார், கண்ணன் சேந்தனார் என்போராவர். அவர்களுள், மாறன் பொறையனார் இயற்றிய (17) பாடல்களிலேயே சமூகச் செய்திகள் மேலிடுகின்றன.

கணிமேதாவியார் இருபாடல்களிலும், மதுரைக் கண்ணங்கூத்தனார், புல்லங்காடனார், மூவாதியார், கண்ணன் சேந்தனார் ஆகியோர் தனித்தனியே ஒவ்வொரு பாடலிலும் சமுதாயச் செய்திகளைப் புலப்படுத்தியுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. ரெனவெல்லாக் ஆஸ்டின் வாரன், இலக்கிய கொள்கை, ப.127
2. சாமி சிதம்பரனார், இலக்கியம் என்றால் என்ன? ப.9
3. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.99
4. க. பாஸ்கரன், சமுதாயத் தத்துவம், ப.26
5. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.99
6. முத்துச்சிதம்பரம், தமிழும் பிற துறைகளும், ப.144
7. திருக்குறள். 1033
8. ஐந். ஐம். 18
9. குறிஞ்.ப.228, 35–45
10. ஐந். ஐம். 12
11. மேலது, 14
12. மேலது, 21
13. திணை. நூற். 44
14. ஐம். ஐம். 47
15. மேலது, 44
16 மேலது, 46
17. மேலது, 33
18. மேலும், 44
19. மேலது, 13
20. குறிஞ்சிப்பாட்டு, ப.229, 95–97

21. ஐந். ஐம். 15

22. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.234

23. க.காந்தி, தமிழர் பழக்க வாக்கங்களும் நம்பிக்கைகளும், ப.14

24. ஐந். ஐம். 15

25. திருமுருகாற்றுப்படை, ப.263

26. மேலது, ப.132

27. ஐந். ஐம். 47

28. மேலது, 24

29. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.199

30. மேலது, 199

31. மேலது, 199

32. திணை. நூற். 66

33. அகநா. 141:6–11

34. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.56

35. மேலது, 57

36. கார். நாற். 7

37. ஐந். ஐம். 50

38. திருக்குறள். 55

39. திணை. ஐம். 1

40. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.122

41. கலித். 11:19–22

42. கைந். 18

43. ஐந். எழு. 39

44. கலைக்களஞ்சியம் (தொகுதி ஒன்பது) ப.506

45. வெ.விஜயரங்கன் (க.ஆ.) ஆய்வுக் கோவை, ப.893

46. ஐந். ஐம். 20

47. கலிங். 51

48. ஐந். ஐம். 43

49. திணை. ஐம். 1

# முடிவுரை

பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்கள் ஆறு. அவற்றில் உள்ள அகப்பாடல்களின் எண்ணிக்கை 419. அவை ஐந்திணை ஐம்பதில் ஐம்பதும், ஐந்திணை எழுபதில் அறுபத்தாறும், கார்நாற்பதில் நாற்பதும், திணைமொழி ஐம்பதில் ஐம்பதும், திணைமாலை நூற்றைம்பதில் நூற்று ஐம்பத்து மூன்றும், கைந்நிலையில் அறுபதுமாக அமைந்துள்ளன.

திணையடிப்படையில் 419 அகப்பாடல்கள் வகைப்படுத்தப் பட்டுள்ளன. அவை குறிஞ்சியில் எழுபத்தேழும், முல்லையில் நூற்றுப் பதினைந்தும், மருதத்தில் எழுபத்தாறும், நெய்தலில் எழுபத்தாறும், பாலையில் எழுபத்தைந்துமாக அமைந்துள்ளன.

கூற்று அடிப்படையில் 419 அகப்பாடல்கள் பாகுபடுத்தப் பட்டுள்ளன. அவை தலைவன் கூற்றில் முப்பத்தொன்பதும், தலைவி கூற்றில் நூற்று அறுபத்தொன்பதும், தோழி கூற்றில் நூற்றுத் தொன்னூறும், செவிலி கூற்றில் இரண்டும், நற்றாய் கூற்றில் ஏழும், கண்டோர் கூற்றில் நான்கும், பாங்கன் கூற்றில் மூன்றும், பாங்காயினார் கூற்றில் ஒன்றும், விறலி கூற்றில் ஒன்றும், காமக்கிழத்தியர் கூற்றில் ஒன்றும், வாயில் கூற்றில் ஒன்றும், அறிவர் கூற்றில் ஒன்றுமாக இடம்பெற்றுள்ளன. அவர்களுள் தோழி கூற்றிலேயே மிகுதியான பாடல்கள் (190) பயின்று வந்துள்ளன.

தலைவன் கூற்றில் அமைந்த 39 பாடல்கள் நான்கு நூல்களில் (ஐந்திணை ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திணைமொழி ஐம்பது, கார் நாற்பது) மட்டுமே இடம் பெற்றுள்ளன. ஏனைய இரு நூல்களில் (ஐந்திணை எழுபது, கைந்நிலை) தலைவன் கூற்றுப் பாடல்கள் அமைந்தில.

தலைவன் கூற்றுப் பாடல்கள் திணையடிப்படையில் குறிஞ்சியில் பதினொன்றும், முல்லையில் பத்தும், மருதத்தில் இரண்டும், நெய்தலில் ஆறும்,

பாலையில் பத்துமாக அமைந்துள்ளன. அத்திணைகளுள் குறிஞ்சியிலேயே இவனது கூற்றுப் பாடல்கள் (11 பாடல்கள்) மேன்மையுறுகின்றன.

தலைவன் கூற்றுப் பாடல்களை இயற்றிய புலவர் தொகை நான்கு. அவர்கள் மாறன்பொறையனார், கண்ணன் சேந்தனார், கணிமேதாவியார், மதுரைக் கண்ணங்கூத்தனர் என்போராவார்.

தலைவன் கூற்றில் களவு, கற்புப் பாடல்களை மிகுதியாக இயற்றியோர் முறையே கணிமேதாவியாரும், மதுரைக் கண்ணங்கூத்தனாருமே ஆவர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

தலைவன் ஆற்றாமை மீதுரக் கூறியதாக அமைந்த களவுப் பாடல்களும், தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாக அமைந்த கற்புப் பாடல்களுமே அவனது கூற்றில் மேன்மையுற்று விளங்குகின்றன.

தொல்காப்பியர் கூறும் 'சுரத்தும்' 'பரிவுற்று மெலியினும்' 'கைவிடின் அச்சம்' 'பேரிசைப் பாகர் பாங்கினும்' 'மீட்டுவர வாய்த்த வகையிற் கண்ணும்' என்ற தன்மைகளை வெளிப்படுத்தும் வகையில் சங்க, சங்க மருவிய அக இலக்கியத் தலைவன் கூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன.

பிரிவு அறிவுறுத்தல் எனும் துறையிலமைந்த தலைவன் கூற்றுப் பாடல்கள் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் இல்லை என்பது ஆராய்ந்து மொழியப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் கூறும் பரத்தையர் பிரிவிற்குரிய ஐந்து வகைக் கூற்றுக்களில் ஒருவகைக் கூற்றுக்கே தலைவன் கூற்றில் பாடல்கள் உள. ஏனைய கூற்றிற்கு ஆய்வுக்குட்பட்ட அகநூல்களில் பாடல்களில்லை.

தலைவி கூற்றிலமைந்த 169 அகப்பாடல்கள் கார்நாற்பது தவிர்ந்த ஏனைய ஐந்து நூல்களில் இடம்பெற்றுள்ளன. அவை ஐந்திணை ஐம்பதில் இருபத்து நான்கும், ஐந்திணை எழுபதில் நாற்பத்து நான்கும்,

திணைமொழி ஐம்பதில் பதின்மூன்றும், திணைமாலை நூற்றைம்பதில் ஐம்பத்தாறும், கைந்நிலையில் முப்பத்திரண்டுமாக அமைந்துள்ளன. அவற்றுள் திணைமாலை நூற்றைம்பதிலேயே இவளது கூற்றுப் பாடல்கள் (56 பாடல்கள்) மேன்மையுறுவது ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

தலைவி கூற்றிலமைந்த 169 பாடல்களைக் களவு, கற்பு என்ற நிலையில் பாகுபடுத்த முடியும். அவை களவில் முப்பத்தொன்பதாகவும், கற்பில் நூற்று முப்பதாகவும் அமைந்துள. இவளது கூற்றுக் களவுப் பாடல்களில் தலைவி ஆற்றாமை மீதுர மொழிந்தது என்ற துறைக் குறிப்பே மேன்மையுற்று விளங்குகிறது. கற்புப் பாடல்களில் ‘பருவங்கண்டு தலைவி தோழிக்குக் கூறியது’ என்ற துறையே மேலிடுகின்றது.

கற்பில் தலைவி நிகழ்த்தும் ஊடற்குரிய கூற்றுக்களைத் தொல்காப்பியர் பதினாறு வகைப்படுத்துவர். அவற்றுள் ஐந்து கூற்றுக்களுக்கு பாடல்கள் மட்டுமே ஆய்வுக்குட்பட்ட நூல்களில் தலைவி கூற்றுப் பாடல்கள் உள.

அறத்தொடு நிற்றல், இயற்பட மொழிதல், காமம்மிக்க கழிபடர் கிளவி, வரைவு வேட்கை, வெறியாட்டு, இரவுக்குறி, பொருள்வயிற்பிரிவு, ஆற்றாமை, சிறைப்புறக் கூற்று, பருவம் கண்டு வருந்தி உரைத்தல், வாயில் மறுத்தல், காய்ந்து பிரிவில் உடன்படாது மொழிந்தது, வன்புறை எதிரழிவு, பாகனிடம் கூறியது, நெஞ்சொடு கிளத்தல் என்ற நிலைகளில் தலைவியின் கூற்றுக்கள் வெளிப்படுகின்றன. இப்பொருண்மையிலமைந்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. அவற்றை அடியொற்றியே இப்பாடல்களைப் புலவர் இயற்றி இருக்கக்கூடும். தொல்காப்பியரும் இவற்றை முறைப்படுத்தி விளக்கியுள்ளார்.

தலைவிக் கூற்றுக் களவுப் பாடல்களைப் புல்லங்காடனாரும், கற்புப் பாடல்களைக் கணிமேதாவியாரும் மிகுதியாகப் பாடியுள்ளனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

தோழி கூற்றிலமைந்த 190 அகப்பாடல்கள் ஆறு நூல்களிலும் இடம்பெற்றுள்ளன. அவை ஐந்திணை ஐம்பதில் இருபதும், ஐந்திணை எழுபதில் இருபத்தொன்றும், கார்நாற்பதில் முப்பத்திரண்டும், திணைமொழி ஐம்பதில் முப்பத்திரண்டும், திணைமாலை நூற்றைம்பதில் ஐம்பத்தேழும், கைந்நிலையில் இருபத்தெட்டுமாக இடம்பெற்றுள்ளன. திணைமாலை நூற்றைம்பதிலேயே இவளது கூற்றுப் பாடல்கள் (57) மேன்மையுறுகின்றன.

தோழி கூற்றிலமைந்த 190 அகப்பாடல்கள் திணை அடிப்படையில் பாகுபடுத்தி விளக்கப்பட்டுள்ளன. அவை குறிஞ்சியில் நாற்பத்து நான்கும், முல்லையில் அறுபதும், மருதத்தில் பதினாறும், நெய்தலில் நாற்பத்தேழும், பாலையில் இருபத்து மூன்றுமாக விளங்குகின்றன. அவற்றுள் முல்லைத் திணையிலேயே இவளது கூற்றுப் பாடல்கள் (60 பாடல்கள்) மேன்மையுற்று விளங்குவது ஆராய்ந்து புலப்படுத்தப்பட்டுள்ளது.

தோழி கூற்றில் வெளிப்படும் களவுப் பாக்கள் 99; கற்புப் பாடல்கள் 91. அக்களவுப் பாடல்களை இயற்றிய புலவர் தொகை 05; கற்புப் பாடல்களை இயற்றியோர் எண்ணிக்கை 06. களவுப் பாடல்களைக் கணிமேதாவியரும் (17), கற்புப் பாடல்களை மதுரைக் கண்ணங்கூத்தனாரும் (25) மிகுதியாகப் பாடியுள்ளனர்.

தோழி கூற்றுக் களவுத் துறைகளில் ‘வரைவு கடாதலும் (40 பாடல்கள்)’, கற்புத் துறைகளில் ‘தோழி தலைவிக்குப் பருவங்காட்டி வற்புறுத்தலும் (55 பாடல்கள்)’ மிகுதியாக பயின்று வந்துள்ளன. ஏனைய துறைகள், இருவகைக் கைகோளிலும் இவற்றை அடுத்த நிலைகளிலேயே இடம்பெறுகின்றன.

தோழி கூற்றுக் களவுப் பாடல்கள் ஐந்து நிலையிலும், கற்புப் பாடல்கள் ஏழு நிலையிலும் பாகுபடுத்தி விளக்கப்பட்டுள்ளன.

சேட்படை, குறை நயத்தல், குறைநயப்பித்தல், குறியிடம், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், தோழி பருவங்காட்டி வற்புறுத்துதல், செலவழுங்குதல், ஆற்றுவித்தல், பாங்கி புகழ்ந்துரைத்தல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், இயற்பழித்தல் எனும் துறைகளிலமைந்த பாடல்களே தோழி கூற்றாக வெளிப்படுகின்றன. இத்துறைமைப் பாடல்கள் சங்க இலக்கியத்திலும் உள்ளன. அவற்றை அடியொற்றியே சங்க மருவிய கால தோழி கூற்று அகப்பாடல்கள் யாக்கப்பட்டுள்ளன. இவை குறித்த கருத்துக்களைத் தொல்காப்பியரும் உணர்த்தியுள்ளார்.

தோழி கூற்றிலமைந்த வாயில் மறுத்தல் பாடல்கள் பரத்தையரின் தன்மையை விளக்குகின்றன. இப்பரத்தையரின் தன்மையை விளக்கும் பாடல்கள் சங்க மருவிய அகப்பாடல்களில் குறைவு. அதற்குக் காரணம் அறக்கருத்துக்களின் பெருக்கமே ஆகும்.

பிற கூற்றாளர்களாகச் செவிலி, நற்றாய், கண்டோர், பாங்கன், பாங்காயினார், விறலி, காமக்கிழத்தி, வாயில், அறிவர் ஆகிய ஒன்பது பேர் விளங்குகின்றனர். இவர்கள் இயற்றியதாக 21 பாடல்கள் உள்ளன. அவை செவிலி கூற்றில் இரண்டும், நற்றாய் கூற்றில் ஏழும், கண்டோர் கூற்றில் நான்கும், பாங்கன் கூற்றில் மூன்றும், பாங்காயினார் கூற்றில் ஒன்றும், விறலி கூற்றில் ஒன்றும், காமக்கிழத்தி கூற்றில் ஒன்றும், வாயில் கூற்றில் ஒன்றும், அறிவர் கூற்றில் ஒன்றுமாக அமைந்துள்ளன.

பிற கூற்றுக்களில் அமைந்த 21 பாடல்கள் களவு, கற்பு என இருநிலைகளில் பாகுபடுத்தப்பட்டுள்ளன. அவை களவில் பதினாறும், கற்பில் ஐந்துமாக உள.

செவிலி கூற்றிலமைந்த இரு பாடல்கள், ஐந்திணை எழுபதிலும் (ஒரு பாடல்) திணைமாலை நூற்றைம்பதிலும் (ஒரு பாடல்) மட்டுமே அமைந்திலங்குகின்றன. அவ்விரு பாடல்களும் பாலைத் திணையின.

ஏனைய நான்கு அக நூல்களில் இவளது கூற்றுப் பாடல்கள் அமையப் பெறவில்லை.

நற்றாய் கூற்றிலமைந்த ஏழு பாடல்கள் ஐந்திணை ஐம்பதிலும் (இரண்டு பாடல்கள்), ஐந்திணை எழுபதிலும் (ஒரு பாடல்), திணைமொழி ஐம்பதிலும் (ஒரு பாடல்), திணைமாலை நூற்றைம்பதிலும் (மூன்று பாடல்கள்) அமைந்துள. ஏனைய இரு நூல்களில் (கார் நாற்பது, கைந்நிலை) இவள் கூற்றுப்பாடல் இடம்பெறவில்லை. திணைமாலை நூற்றைம்பதில் இடம் பெற்றுள்ள ஒரு பாடலைத் (குறிஞ்சித் திணைப்பாடல் 15) தவிர ஏனைய பாடல்கள் ஆறும் பாலைத் திணையின.

கண்டோர் (நான்கு பாடல்கள்), பாங்காயினார் (ஒரு பாடல்), பாங்கன் (மூன்று பாடல்கள்), விறலி (ஒரு பாடல்), காமக்கிழத்தி (ஒரு பாடல்), வாயில் (ஒரு பாடல்), அறிவர் (ஒரு பாடல்) ஆகிய எழுவரின் கூற்றுப் பாடல்கள் திணைமாலை நூற்றைம்பதில் மட்டும் பயின்று வந்துள்ளன. ஏனைய ஐந்து அகநூல்களில் இவ்வெழுவரின் கூற்றுப் பாடல்கள் இடம்பெற்றில.

கண்டோர் கூற்றில் அமைந்த பாடல்கள் நான்கும் பாலைத் திணையின. விறலி, காமக்கிழத்தி, வாயில், பாங்காயினார், அறிவர் ஆகிய ஐவர் கூற்றிலமைந்த பாடல்கள் அனைத்தும் மருதத்திணையின. பாங்கன் கூற்றிலமைந்த மூன்று பாடல்களில் இருபாடல்கள் (திணைமாலை நூற்றைம்பது 45–47) நெய்தல் திணையிலும், ஒரு பாடல் (திணைமாலை நூற்றைம்பது 28) குறிஞ்சித் திணையிலும் அமைந்துள்ளன.

அறிவர், விறலி, ஆகிய இரண்டு கூற்றுக்கள் எட்டுத்தொகை அக இலக்கியங்களில் பயின்று வந்தில. ஆனால், திணைமாலை நூற்றைம்பதில் இவ்விரண்டு கூற்றுக்கள் உள்ளன. இது ஒரு புதுவகை வளர்ச்சியே ஆகும். இதே நூலில் ‘வாயில்’ என்ற அடிப்படையில் ஒரு பாடல் உள்ளது. இந்த வாயிலின் பெயர் சுட்டப்பெறவில்லை.

தலைவன், தலைவியர் வாழ்க்கையில் தொடர்புடைய வாயில்களைத் தொல்காப்பியம் பன்னிரண்டாகக் கூறும் (தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, இளையர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்). அப்பன்னிருவருள் அறிவர், செவிலி ஆகிய இருவரும் அடங்குவர். தொல்காப்பியர் கூறிய அவ்விரு வாயில்களை எட்டுத்தொகை அகப்புலவோர் தங்களது கூற்றுக்களில் அமைத்திலர். ஆனால் இவ்விருவரின் கூற்றுக்களைக் கணிமேதாவியார் அமைந்துள்ளார் என்பது ஆராய்ந்து புலப்படுத்தப்பட்டுள்ளது.

உழவுத் தொழிலும், மீன் பிடித்தலும் அக்காலத் தொழில்களுள் மேன்மையுற்று விளங்கியுள்ளன.

பந்து, பொம்மை, பைங்கிளி போன்றவற்றைப் பெண்கள் விளையாட்டுப் பொருட்களாகப் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் வண்டல் விளையாட்டையே விரும்பி விளையாடியுள்ளனர்.

கார்த்திகை விளக்கிடுதலும், புண்ணிற்குக் கார மருந்திடுதலும் அக்கால மக்களின் பழக்க வழக்கங்களாக இருந்துள்ளன.

பல்லி ஒலி எழுப்புவதையும், வேலன் வெறியாட்டு நிகழ்த்துவதையும் அக்கால மக்கள் நம்பிக்கைக்கு உட்படுத்தியுள்ளனர்.

ஒருவரின் வரவைக் கண்டறிவதற்காகக் ‘கூடலிழைத்தல்’ என்றதொரு நம்பிக்கை நிகழ்வை அக்கால மக்கள் நிகழ்த்தியுள்ளனர்.

புகையூட்டித் தேவர்களை வணங்கினால் மழை பெய்யும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே இருந்துள்ளது.

மாறன்பொறையனார் இயற்றிய ஐந்திணை ஐம்பதிலுள்ள பாடல்களிலேயே சமுதாயச் செய்திகள் மிகுதியாக வெளிப்படுகின்றன.

# துணைநூற் பட்டியல்

## I. முதன்மைச் சான்றாதாரங்கள்


1. இராசாராம், துரை (உ.ஆ.)., – பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்
மூலமும் உரையும்,
வர்த்தமானன் பதிப்பகம்,
40, சரோஜினி தெரு,
தியாகராய நகர்,
சென்னை–17.
2006.

2. மேலது, – பதினெண்கீழ்க்ணக்கு (தெளிவுரை),
இரண்டாம் பகுதி,
முல்லை நிலையம்,
9, பாரதிநகர் முதல் தெரு,
தி.நகர்,
சென்னை–17.
1995.

3. நாராயண வேலுப்பிள்ளை.எம்.,– சங்க இலக்கியம் வழங்கும்
பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்,
நர்மதா வெளியீடு,
சென்னை–17.
முதற்பதிப்பு–2001.

*4. வேங்கடசாமி நாட்டார்.ந.மு., – நானாற்பது,*
*சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,*
*சென்னை–1.*
*1957.*

## II. துணைமைச் சான்றாதாரங்கள்

*1. அருணாசலம் பிள்ளை.மு., – அகத்திணையியல் உரைவளம்,*
*மதுரை கமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை.*

*2. இராசாராம்.துரை., – இறையனார் அகப்பொருள்,*
*முல்லை நிலையம்,*
*சென்னை.*
*முதற்பதிப்பு–1997.*

*3. இளம்பூரணர் (உ.ஆ.)., – தொல்காப்பியம் பொருளதிகாரம்*
*(அகத்திணையியல்–புறத்திணையியல்),*
*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*154, டி.டி.கே. சாலை,*
*சென்னை–18.*
*2000.*

4. மேலது, – தொல்காப்பியம் – பொருளதிகாரம்
(களவியல் – கற்பியல் – பொருளியல்),
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
79, பிரகாசம் சாலை,
சென்னை – 18.
1986.

5. கணேசையர். சி. (உ.கு.ஆ,)., – தொல்காப்பியம் பொருளதிகாரம்
(முன் ஐந்து இயல்கள்),
சுன்னாகம்,
1948.

6. குழந்தை புலவர்., – தொல்காப்பிய பொருளதிகாரம்,
அகத்திணையியல் முதற்பகுதி,
வேலா பதிப்பகம்,
ஈரோடு – 1.

7. கோபாலையர். தி.வே., – இலக்கண விளக்கம்,
தஞ்சை சரஸ்வதி மஹால்,
வெளியீடு – 1,
தஞ்சாவூர்.
1971.

8. கோவிந்தராச முதலியார். திரு.கார., – நம்பியகப்பொருள்,
திருநெல்வேலி தென்னிந்திய,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1943.

9. சிவலிங்கனார். அ. – தொல்காப்பியம் பொருளதிகாரம்
களவியலுரைவளம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
1994.

10. சுப்பிரமணியன்.ச.வே., – தொல்காப்பியம் – தெளிவுரை,
மணிவாசகர் பதிப்பகம்,
9/7, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை – 108.
1999.

11. நச்சினார்க்கினியர்., – தொல்காப்பியம் பொருளதிகாரம்
(அகத்திணையியல் – புறத்திணையியல்),
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1/40, பிரகாசம் சாலை,
சென்னை – 1.
1975.

12. பாஸ்கரன்.க., – சமுதாயத் தத்துவம்,
தத்துவமையம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 5.

13. விசுவநாதன்.அ., – கலித்தொகை மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
2004.

14. வெள்ளைவாரணன்.க., – தொல்காப்பியம் பொருளதிகாரம்
மரபியல் – உரைவளம்,
பதிப்புத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை – 21.
1994.

15. வேங்கடராமன்.எச்., – நற்றிணை மூலமும் உரையும்,
டாக்டர் உ.வே. சாமிநாதையர்,
நூல் நிலையம்,
சென்னை – 1992.

16. சாமிநாத ஐயர் உ.வே., – அகநானூறு,
மகாமகோபாத்தியாய டாக்டர்
உ.வே.சா. நூல் நிலையம்,
பெசன்ட் நகர்,
சென்னை – 90.
1990.

17. சோமசுந்தரனார்.பொ.வே., – குறுந்தொகை,
திருநெல்வேலி தென்னிந்திய,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
திருநெல்வேலி – 6.
மறுபதிப்பு – 1965.

18. சோமசுந்தரம்,பொ.வே., – குறிஞ்சிப்பாட்டு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
திருநெல்வேலி,
சென்னை – 1.
முதற்பதிப்பு – 1956.

19. துரைசாமி பிள்ளை.சு., – ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும்,
மருதம் & நெய்தல்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
1957.

20. நச்சினார்க்கினியர் (உ.ஆ.)., – கலித்தொகை,
திருநெல்வேலி தென்னிந்திய,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
முதற்பதிப்பு – 1938

## III திறனாய்வு நூல்கள்

1. இராசாராம்.சு., – அகமாந்தர்களில் கண்டோர்,
பாக்யா வெளியீடு,
2/159, வடக்கு 4வது வீதி,
கல்லல் – 623 305.
அக்டோபர் – 1995.

2. காந்தி.க., – தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1980.

3. காமாட்சி ஸ்ரீனிவாசன்., – குறள் கூறும் சமுதாயம்,
திருக்குறள் ஆய்வக வெளியீடு–5,
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை – 21.
முதற்பதிப்பு – 1975.

4. சிதம்பரனார்.சாமி., – இலக்கியம் என்றால் என்ன?
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை – 8
முதற்பதிப்பு – 2000

5. சுப்புரெட்டியார்.ந., – தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,
பழனியப்பா பிரதர்ஸ்,
25, பீட்டர் ரோடு,
சென்னை – 14.
2002.

6. மேலது, – அகத்திணைக் கொள்கைகள்,
பாரி நிலையம்,
சென்னை – 1.

